உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# திருநாகேச்சுரப் புராணம்.

உரைச்செய்யுள்.

இது

மூவல்

ப. சிங்காரவேற் பிள்ளையவர்களால்

இயற்றப்பெற்று

அரிமழம்

திருவாளர், அ. அரு. அண்ணாமலைச்செட்டியார் அவர்கள்

பொருளுதவியால்

கும்பகோணம்

தையனுயகியம்மன் அச்சுயந்திரசாலையில் பதிப்பிக்கப்பெற்றது.

விபவ ஆண்டு

1929.

கிரயம், ] [ ரூ 0—10—0.

# பொருளடக்கம்.

---

உ

கணபதி துணை.

# திருநாகேச்சுரப் புராண வுரைச்செய்யுள்.

திருவளர் மன்றவாணன் றிருவடி சிரமேற் கொண்டு
கருவளர் பிறவிமாசு கழுவிய தொண்டர் பாதங்
குருவளர் சிந்தை வைத்துக் குமரனை தடியைக்கும்பிட்
டுருவளர் ருசிமையாண் மூத்த வயர்பிள்ளை நாடிப்பாம்.

## முன்னுரை.

இத்திருநாகேச்சுர மென்பது, மூவர்களாலும் முறையே பாடப்பெற்று மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றாலும் மேன்மை யுற்று மக்களுயிர்க்குறுதி பயக்குமாண்பிற சிறந்து விளங்குவ தோர் தலமே. ஆயினும் சிவமெய்த்தொண்டர் அன்பெலாந் திரண்டு ஓருருவெடுத்த சேக்கிழார்பெருமான் நிறைந்த பெருங் காதலாற்றிடப் பெற்றுத்தமிழ்நாடு மூன்றனுள் சிறந்து விளங் காநின்றது இத்திருநாகேச்சுரமெனின்? சிறியேன் புல்லிய நாவி னாற் செப்பலுங்கூடுமோ? அதனை உமாபதியாரும், "தனதுபேர்- உத்தமச் சோழப் பல்லவன் றனென்று முயர்பட்டங் கொடுத் திட வாங்கவர் சீர்நாட்டு—கித்தனுறை திருநாகேச் சுரத்திலன்பு நிறைதலினுன்மறவாதநிலைமைமிக்கார்" என்றருளினமை காண்க

இன்னும் இது சேக்கிழார் பெருமான் திருவடி ஞானம் பெற்ற தலமென்பர். இதற்குச் சான்றாகச் சேக்கிழார் பெருமான் றிருவுருவமும் அவர் தாயார் திருவுருவமும். அவர் உடன் பிறந் தாரானபாலறாவாயர்திருவுருவும், இத்தலத்திலுள்ளன இத்தலம் சேக்கிழாரால் திருப்பணி செய்யப்பட்டதென்பர். அதனால் அம் மூவர் திருவுருவப்படமும் இந்நூலின்முன் சேர்க்கப்பட்டது. இத்தகைய திருவருள் மிகுந்த திருநாகேச்சுரமென்னுஞ்சிவஞர் திருக்கோயிலைப் புதுக்கிப் பெறுதற்கரிய இன்னருட் செல்வத் தைப் பெற்றுய்ந்திட வந்த திருவாளர் அ. அரு. அண்ணாமலைச் செட்டியாரவர்கள் நட்பினால் இந்நாகேச்சுரப் பெருமானைக் கண்ணுற்றுக் களிக்க வந்தவன்கையில் முப்போது திருமேனி தீண்டுவாரான உயர்திருவாளர் நாகராசகுரு அவர்கள் இத் தலத்தின் வடமொழிப் புராணத்தையெழுதுப் பிரதியொன்று என் கையில் அளித்து எங்ஙனமாயினும் தமிழில் மொழி பெயர்க்க வேண்டுமென்று கூறினர். அதுபோது யானும் திருநா கேச்சுரப் பெருமான்றிருவருளால் ஆசையுற்று வாங்கி எங்கு

ணம் முடிவுறுமென்று ஐயுற்றபோது எனது நண்பரும் இறை பணியே தன்பணியாகக் கொள்ள விருப்புறுகின்றவரு மான திருவாளர் இரகுநாத முதலியார் அவர்கள் நண்பர் செட்டியார் அவர்களையே திருக்கோயிற் பணியோடு இப்பணியும் ஏற்றுக் கொள்ளப் பொருளுதவி செய்யுமாறு வேண்டிப்பெறலாமென்று சூட்சியுரைத்தனர். அவ்வாறே நண்பர் செட்டியாரவர்களுக்குத் தெரிவிக்க அவர் அன்புடன் இப்பணி ஏற்றுக்கொண்டனர். ஆனல் இக்கலியில் "பண்டைநற் றவத்தாற் றோன்றிப் புரமனைப் பத்தி பண்ணுந்-தொண்டரைத் தானே தூய கதியினிற் செலுத்" என்றருளிய அன்புநெறியைக் கடைபிடித்தொழுகுதற்குச் சிறந்த கருவியாவன:- தலப்புராணமும் அவ்வத்தலங்களைத் துதித்துச் செல்லாநின்ற தேவார திருவாசக முதலிய திருநெறித் தமிழ் நூல்களுமேயாகு மென்பது அறிவுடையா ரெவர்க்கு மொப்பமுடிந்ததே. அன்புநெறியிற் செல்லத் தவமிலாத வம்ப ரெலாம் அவமே புராணங்களைப் புறக்கணித்து வாணாளை வீணே கழிப்பர்.

அன்றியும் மக்களுயிர்க்குறுதி பயக்க இன்றியமையாத அத்துவாவெனப்படும் புவனவடிவாகிய திருக்கோயிலைப் புதுக்குவோர்க்கு எழுத்து, பதம், மந்திரம், தத்துவமாகிய புராணக்கோயிலையும் புதுக்குவது இன்றியமையாதது புவனத்திற் சிறந்தன எழுத்து, பதம், மந்திரம், தத்துவ முதலியன வாகுமென்பதும் அறிவுடையார் நன்கறிவர்.

இதனுல் பேரறிவும் பேரன்புமில்லாத எம்மனோர்க்கு அவ் வறிவையும் அன்பையும் வளர்க்க முன் நின்றன இதுபோன்ற தலப்புராணமும் தேவார திருவாசக முதலியனவேயாம். இவை களில்லையேல், ஒருதலத்தின் சிறப்புணர்ந்து அதனை அணுகி இறைபணியுமியற்ற யான்புற வியலாதாகு மென்பது யாருமறியா [illegible] போகா. [illegible] இறைவனருள் வழிப்பட்டோரெல் [illegible] அவ்வத்தலத்தின் புராணப்பொருளையே தாமருளிய தேவார திருவாசக முதலிய பன்னிரு திருமுறைகளிலும் ஆங் காங்கு நிறுவிப் போயினார். அதனுல் புவன வடிவாகிய திருக் கோயிலைப் புதுக்குவோர்க்கு ஏனைய அறிவு மன்புமானபுராணக் கோயிலைப் புதுக்குதல் அரிதன்றேனும் "தவமும் தவமுடை

யார்க்காகு"மென்றவாறு அப்பணி அறிதற்கு அரிதாகின்ற தென் பதுந் தெள்ளிதி னுரைப்படும்.

இத்தவம் முற்றுறப்பெற்ற நண்பர் செட்டியாரவர்கள் பிறர்க்கும் வழிகாட்டினராக இவ்விரண்டு திருப்பணிகளையும் திருநாகேச்சுரப் பெருமான் றிருவருளால் முயன்று முடித்த தற்கு இத்தமிழுலகம் நன்றிபாராட்டத் தக்கதே யாம்.

இப்புராணத்தை முதலில் உயர்திருவாளர் குறறாலம், ஸ்ரீநிவாஸாசாரியாரவர்களைக் கொண்டு தமிழில் மொழி பெயர்த்து அதனைத் தேரப்பெருமாள் நல்லூர் உயர்திருவாளர் சுப்பிரமணிய சாஸ்திரியாரவர்களைக் கொண்டு திருத்தமுறஒத்து நோக்கித் தமிழ் மொழியில் பாட்டிடை விரவிய உரைச்செய்யு ளாக்க நேர்ந்தது. இடையிடையே ஐயுற்ற போதெல்லாம் குற்றாலம் தஞ்சைமாநாட்டுயர்தரக் கலாசாலைப் போதகாசிரியர் உயர்திருவாளர் அனந்தாச்சாரியாரவர்கள் எம். ஏ. நன்றியும் மறக்கற்பாலதன்று. இதனால் இம்மூவர்களுக்கும் என்வணக்கத் தைத் தெரிவிக்கின்றேன்.

இந்நூலை இத்தலம் கும்பாபிடேகத்திலுள் இரண்டு திங்க ளுள் அச்சேற்றி முடித்திட நண்பர் செட்டியாரவர்கள் விரும் பினபடியால் இத்தொண்டினை ஏழையேன் ஏற்றபோதே "நல மொன்று புரிதற்கிடையூறு நாதனே பலவுள வன்றே" என்ற வாறு இடையூறுகள் பல நேர்ந்து மனக்கவற்சியை உண்டாக்கி னும் அவற்றை ஒருபொருட் படுத்தா வண்ணம் நண்பர் செட் டியாரவர்கள் அன்போ, திருநாகேச்சுரப்பெருமான் றிருவரு ளோ யான் அறியேன். முன்னின்று ஊக்கத்தை யுண்டாக்கி இந்நூலை முடிவுபெறச் செய்தது. இதனால் யான் அவ்விரண்டிற் கும் கடமைப் பட்டவனாகின்றேன்.

ஆயினும் இரண்டு திங்களுள் இந்நூலை முடித்திட முயன்ற மையாலும் இதன் வடமொழிப் புராணம் தலை மயக்கமுற்றமை யாலும் இதனை முட்டின்றி முடித்தது என்னுள்ளே யுயிராய்ப் பாய்ப் புறம்போந் தென்னுள்ளே நிற்கு மீசனான சிவபிரானரு ளென்றே தெளிந்துள்ளேனாதலாலும் அறிவுடையுலகம் இந் நூலில் குணமுளதாயின் அதை எம்பெருமானான சிவபிரான் றிருவடிக்காக்கித் குற்றமுளதாயின் அறிவித்து அடியேனை வழிப்படுத்தா நிற்குமென்பது எனது துணிபே,

இந்நூலை அச்சிடும்போதெல்லாம் என்னுடனாக இருந்துதவிய எனதருநண்பருந் தேப்பெருமாள் நல்லூர், கலாசாலைத்தலைமைப்போதகாசிரியருமானஉயர்திருவாளர் மீனாட்சிசுந்தரமையர் அவர்களுக்கு என்வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்

காலம் பெருமை கருதி இந்நூலின் பகுதிகள் சிலவற்றை நோக்கிய அறிவுடையார் சிலரால் கொடுக்கப்பெற்ற மதிப்புரைகளை மட்டும் சேர்த்துளேன். குறிப்பிட்ட இரண்டு திங்களுள் இந்நூல் அச்சிட்டு முடிவுபெற வேண்டினமையால் இரண்டு எழுத்தெந்திரக்களத்தில் விரைந்து பதிப்பிக்க நேர்ந்தமைபற்றிப் பிழைகளுமுளவேல் அவற்றை அறிவுடையன்பர்கள் அடியேனுக்குத் தெரிவித்தாலும் யான் அறிந்தாலும் அடுத்த பதிப்பில் திருத்தி வெளியிடுகின்றேன்

குறிப்பிட்ட காலத்தில் முன்வரப் பிறவேலைகளையும் நோக்காமல் திருநாகேச்சுரப்பெருமான் அருளையே நோக்கி இப்புராணத்தை அச்சிட்டு முடித்துக்கொடுத்த தையனாயகி அச்செந்திரசாலைத் தலைவரான திருவாளர் ஆர். நாராயணசாமிப்பிள்ளை அவர்கள் நன்றி பாராட்டத்தக்கதேயாம். இவ்வாறே இனி என்னால் பதிப்பிக்கப்பெறும் எந்நூல்களையும் இடையூறின்றிப் பதிப்பித்து முடிக்கருளுமாறு தண்ணார் தமிழளிக்கும் பெருமானான சிவபிரான் திருவடியைப் பன்முறை சிந்தித்துவணங்குகின்றேன்.

வேண்டத்தக்க தறிவோய்நீ
வேண்டமுழுதுந் தருவோய்நீ
வேண்டுமயன் மாற்கரியோய்நீ
வேண்டியென்னைப் பணிகொண்டாய்
வேண்டிநீயா தருள்செய்தாய்
யானுமதுவே வேண்டினல்லால்
வேண்டும்பரிசொன் றுண்டென்னி
லதுவுமுன்றன் விருப்பன்றே.

திருச்சிற்றம்பலம்.

திருநெறித்தலைவர் திருவடி வாழ்க.

இங்ஙனம், ய. சி. பி.

# திருநாகேச்சரப் புராணம் (முதற்பாகம்)

## படலத்தொகை.



## இரண்டாம் பாகம்.

## இது சூரியனார்கோவில் ஆதீனம் மகாசந்நிதானத்தால் அருளப்பெற்ற மதிப்புரை வாழ்த்து.

---

சிவமயம்.

மங்கள னீன்ற வாதி மகவுதா ளிறைஞ்சி நாயேன்
திங்களை யணிந்தோன் செப்புந் திருவளருமைதான் கேட்கப்
பங்கமி றீர்த்தஞ் சூழ்ந்த பாநுகேச் சுரத்தின் காதை
மங்கலின் மதியோர் தேற மதிப்புரை புகலு கின்றேன்.

திருவளரா நின்ற இப்பரதகண்டத்தின் கண்ணே மாட்சிமை தங்கிய நான்மறை இதிகாச புராணங்களாலும் தமிழ் வேதங்களாலும் புகழ்ப்பெற்றதும் புண்ணிய தீர்த்தங்களாற் சூழப்பெற்றதும் பிரமாதி தேவர்களாலும் முனிவர்களாலும் பூசிக்கப்பெற்றதுமான சிவத்தலங்கள் பலவுள. அவைகளுக்குள் திருநாகேச்சுரம் என்னும் தலமானது மிகவும் மேன்மை வாய்ந்த புண்ணியத்தலமாம்.

முன்னொரு காலத்தில் வரை மகளாகிய உமாதேவியார் தன்னாயகனாகிய பரமேசுரரை வணங்கித் தாழ்ந்து

எவன் எங்கும் நிறைந்துளன எவனிடம் எல்லாம் இருக்கின்றன
எவன்பால் எல்லாம் உண்டாகின்றன அவனே இறைவன்

சிவன் இன்பமயமாய் உள்ளவனே அவன் பால் எல்லாம் உண்டா
கின்றன. என்று தேவரீருடைய திருவாக்காகிய வேதசிவாக
மங்களெல்லாம் முழங்குகின்றபடியால் தேவரீர் அடியேற்கு இத்தலத்தின்
மகிமையை யுபதேசிக்க வேண்டுமென இரந்து நின்றிட ஸ்ரீபரமே
சுரன் பௌடிய புராணத்தில் உத்தரபாகத்தின் கண்ணே சர்வான் மாக்
களுக்கும் மாதாவாகிய உமாதேவியாருக்குக் கூறியருளினார்.

அவ்வாறு சிறப்புவாய்ந்த புண்ணியத்தலத்தின் கண்ணேயமையப்
பெற்றதும் சேக்கிழார் சுவாமிகளால் அபிமானிக்கப் பெற்றதுமாகிய
நாகேச்சுரரது திருக்கோவிலானது நெடுங்காலமாய்ப் பழுதுற்றிருக்க
அானது திருப்பணியை நன்கியற்றுவோர் அமைப்பெற்ற அரிமழம்
அ. அரு. அண்ணாமலைச் செட்டியார் என்பவர் அச்சிவாலயத்திற்கு அள
விலாப் பெரும்பொருளைச் செலவு செய்தும் தவஞ்செய்வார் தங்கருமஞ்
செய்வார் என்ற திருவாக்கின்படி மிக முயன்று அத்திருக்கோயிலைப்
புதுப்பித்துக் கும்பாபிஷேகஞ் செய்வித்துமன்றி அத்தலத்தின் மகிமை
வடமொழியிலிருந்ததைத் தென்மொழியின் மொழிபெயர்த்து மிகுந்த
கல்வியுடையாரன்றிச் சிறிது கல்வியுடையாரும் பேரின்பத்தையடையும்
பொருட்டுக் கல்விக்கடலைக் கரை கண்டுணர்ந்த முதியோர்களால் நன்கு
மதிக்கப்பெற்றவரும் குருலிங்கசங்கம பத்திகளிற் சிறந்து விளங்குகின்ற
வருமாகிய சூலவற்சிங்காரவேற்றமிழ்ப் புலவரைக் கொண்டு அம்மொழி
பெயர்ப்பைப் பாட்டிடை விரவிய உரைச்செய்யுளாகச் செய்வித்தமை
யால் எல்லா வுயிர்க்கும் உயிராகிய சர்வேசுவரர் அந்த அண்ணாமலைச்
செட்டியார்க்கும் சூலவற்சிங்காரவேற் புலவர்க்கும் நீண்ட ஆயுளும் சிந்தித
மனோரத சித்தியும் சிவஞானமுந் தேவ குருப்பிரசாதமும் உண்டாகும்படி
அனுக்கிரகஞ் செய்வதோடு திருநாகேச்சுரத்தலப்புராணத்தைத் தரிசித்தவர்
தீண்டியவர் கேட்டவர் வாசிப்பவர் இயன்றவரை பொருட்செலவு
செய்து வாங்கிக்கொடுத்தவர் கற்றுக் கேட்டுத் தெளிந்தவர் ஆகிய எல்
லோர்க்கும் பரமானந்த முண்டாகும்படி அனுக்கிரகஞ் செய்யத் திருநா
கேச்சுரப்பெருமானை அனுதினமும் பிரார்த்தித்து வருகின்றோம்.

ஸ்ரீமத் அதிவர்ணாச்சிரம ஆசார்யவர்ய சைவசமய பரிபாலக

ஸ்ரீசிவாக்ரயோகிகளாதீனத்து

சூரியனார்கோவிலாதீனம், 11—1—22 } மீனாக்ஷிசுந்தரதேசிகர்.

குற்றாலம் தஞ்சைமாநாட்டுயர் தரக் கலாசாலை உயர்திருவாளர் தலைமை ஆசிரியரவர்களால் அளிக்கப்பெற்ற

## மதிப்புரை.

திரு. P. சிங்காரவேற் பிள்ளையவர்களால் இயற்றப்பட்டிருக்கிற திருநாகேச்சரப் புராணத்தமிழ் மொழிபெயர்ப்பில் சிற்சில பகுதிகளை நான் பார்வையிடநேர்ந்தது. அந்நூலின் சொற்போக்கு வெகு எளிதாயும், இன்பம்பயக்கச் செய்வதாயும், கேட்போரைப் பரவசமடையச் செய்யத்தக்க ஆழமுடைத்தாயும், இடையிடையே அப்பண்டிதரால் செய்யப்பட்டுள்ள செவிக்கும் மனத்துக்கும் இன்பம் பயக்கத்தக்க செய்யுட்கள் பல விரவப்பெற்றதாயுமிருக்கிறதென்பது மிகையாகாது. அம்மொழிபெயர்ப்பு வெகு அரியது. அந்நூல் இக்காலத் தமிழுலகுக்குச் சாலச்சிறந்து கிடைத்தற்கரியதோர் நூலாகும் என்பது திண்ணம். இந்நூல் இப்பண்டிதசிகாமணியின் மிக உயர்ந்த கவிபாடுந்திறனையும் தொன்மையிலுயர்ந்த முறைப்படிக் கற்றகல்வித்தேர்ச்சியையும் தமிழுலகம் அறியும்படி செய்துவிட்டதென்றே கூறுவேன். ஆதலால் இத்தமிழுலகில் இந்நூல் மிகவும் உபயோகமுள்ளதெனப் பாராட்டப்பட்டுப் பலராலும் பரக்கக்கையாளப்படும்படிச் செய்யுமாறு இறைவன் அருள் புரிய வேண்டுகிறேன்.

குற்றாலம், 9—1—28 } (Sd) N. R. சுப்ரமணியம்
தலைமை உபாத்தியாயர்,
போர்டு உயர்தரக் கலாசாலை,

தஞ்சை நாட்டாண்மைக் கழகத்தலைவரும் கரந்தைத் தமிழ்ச்சங்கத் தலைவருமான திருவாளர் உமாமகேச்சுரன்பிள்ளை அவர்களால் கொடுக்கப்பெற்ற

## மதிப்புரை.

திருநாகேச்சுரம் என்னும் சோழநாட்டுத் திருப்பதியானது மூவர் தேவாரமும் பெற்று மாண்புற்றது. சேக்கிழாரது அன்பிற்கு நிலைக்களமாயது. இத்திருக்கோயிலைப் புதுக்குவான் வந்த சிவநேசச்செல்வர் திருவாளர் அரிமழம், அ. அண்ணாமலைச்செட்டியார் அவர்கள் இத்தல மகிமையை அன்பர்கள் நன்குணர்ந்து உய்திபெறுமாறு வடமொழியிலிருந்த திருநாகேச்சுரப் புராணத்தைத் தமிழில் மொழி பெயர்க்கச் செய்தது தமிழுலகினுக்கு இயற்றிய பேருதவியாகும். இவ்வரும் பணியினைச் செவ்வனே முற்றுவிப்பதற்குக் கருவியாய் இருந்தவர் குற்றாலம் உயர்தரக் கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர் திருவாளர் ப. சிங்காரவேற்பிள்ளையாவர்.

இந்நூலின் சில பகுதிகள் மட்டுமே நான் பார்க்க நேர்ந்தது. மொழிபெயர்ப்பெனத் தோற்றாது முதனூலெனவே பாராட்டத்தக்கது. சொற்சுவை, பொருட்சுவை நிரம்பத்தெள்ளிய தமிழில் இனிய பாட்டுகள் இடையிடையே விரவிய உரைச்செய்யுளால் ஆக்கப்பட்டுள்ளது. இந்நூலினால் ஆசிரியரின் தமிழ்ப்புலமையும் சமயப்பற்றும் நன்கு புலனாகின்றது. சைவாபிமானிகள் இந்நூலினைப் படித்துப் பயன்பெறுவார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

கரந்தை, 8—1—29. } (Sd) த. வே. உமாமகேச்சுவரன்.

  



# திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் அருளிச்செய்த
# திருநாகேச்சுரத் தேவாரம்.

பண் — இந்தளம் — ௨-ந் — திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பொன்னேர் தருமே னியனே புரியு
[illegible]னேர் சடையாய் விரிகா விரியி
னன்னீர் வயனா கேச்சுர நகரின்
மன்னே யெனவல் வினைமாய்ந் தறுமே. (௧)

சிறவார் புரமூன் றெரியச் சிலையி
லுறவார் கணையுய்த் தவனே யுயருந்
நறவார் பொழினா கேச்சுர நகரு
ளறவா வெனவல் வினையா சறுமே. (௨)

கல்லா னிழன்மே யவனே கரும்பின்
வில்லா னெழில்வே வவிழித் தவனே
நல்லார் தொழுநா கேச்சுர நகரிற்
செல்வா னெனவல் வினைதேய்ந் தறுமே. (௩)

நகுவான் மதியோ டரவும் புனலுந்
தகுவார் சடையின் முடியாய் தளவந்
நகுவார் பொழினா கேச்சுர நகருட்
பகவா வெனவல் வினைபற் றறுமே. (௪)

கலைமான் மறியுங் கனலும் மழுவுந்
நிலையா கியகை யினனே நிகழுந்
நலமா கியநா கேச்சுர நகருட்
டலைவா வெனவல் வினைதா னறுமே. (௫)

(௨) சிறவார் = பகைவர்.
(௪) தளவம் = முல்லை.

குரையார் கழலா டநடங் குலவி
வரையான் மகள்கா ணமகிழ்ந் தவனே
நரையார் விடையே றுநாகேச் சரத்தெ
மரைசே யெனநீங் குமருந் துயரே. (௬)

முடையார் தருவெண் டலைகொண் டுலகிற்
கடையார் பலிகொண் டுழல்கா ரணனே
நடையார் தருநா கேச்சர நகருட்
சடையா வெனவல் வினைதா னறுமே. (௭)

ஓயா தவரக் கனொடிந் தலற
நீயா ரருள்செய் துநிகழ்ந் தவனே
வாயா ரவழுத் துவர்நா கேச்சரத்
தாயே யெனவல் வினைதா னறுமே. (௮)

நெடியா னொடுநான் முகனே டலுறச்
சுடுமா லெரியாய் நிமிர்சோ தியனே
நடுமா வயனா கேச்சர நகரே
யிடமா வுறைவா யெனவின் புறுமே. (௯)

மலம்பா வியகை யொடுமண் டையதுண்
கலம்பா வியர்கட் டுரைவிட் டுலகி
னலம்பா வியநா கேச்சர நகருட்
சிலம்பா வெனத்தீ வினைதேய்ந் தறுமே. (௰)

கலமார் கடல்சூழ் தருகா ழியர்கோன்,
றலமார் தருசெந் தமிழின் விரக
னலமார் தருநா கேச்சரத் தானைச்
சொலமா லைகள்சொல் லநிலா வினையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## ௨. பண்—செவ்வழி—௨-ந்திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

தழைகொள்சந் தும்மகி லும்மயிற் பீலியுஞ் சாதியின்
பழமுமந் திப்புனல் பாய்பழங் காவிரித் தென்கரை
நழுவில்வா னோர்தொழ நல்குசீர் மல்குநா கேச்சரத்
தழகர்பா தந்தொழு தேத்தவல் லார்க்கழ காகுமே. (௧)

---

௬) குரை=ஒலி. நரை=வெள்ளை.
௭) முடை=நாற்றம். கடை=வாசல்.
௰) கட்டுரை=பொய்யுரை. சிலம்பன்=கையிலையன்.
௧௧) கலம்=மரக்கலம். விரகன்=உணர்வுடையன்.
௧) பீலி=தோகை.

பெண்ணொர் பாகம்கடை யச்சடை யிற்புனல் பேணிய
வண்ணமா னபெரு மான்மரு வும்மிட மண்ணுளார்
நண்ணிநா ளுந்தொழு தேத்திநன் கெய்துநா கேச்சுரங்
கண்ணினாற் காணவல் லாரவர் கண்ணுடை யார்களே. (௨)

குறவர்கொல் லைப்புனங் கொள்ளைகொண் டும்மணி குலவுநீர்
பறவையா லப்பிறங் கும்பழங் காவிரித் தென்கரை
நறவநா றும்பொழில சூழ்ந்தழ காயநா கேச்சுரத்
திறைவர்பா தந்தொழு தேத்தவல் லார்க்கிட ரில்லையே. (௩)

கூசநோக் காதுமுன் சொன்னபொய் கொடுவினை குற்றமுந்
நாசமாக் கும்மனத் தார்கள்வந் தாடுநா கேச்சுரந்
தேசமாக் குந்திருக் கோயிலாக் கொண்டசெல் வன்கழ
னேசமாக் குந்திறத் தாரறத் தார்நெறிப் பாலரே. (௪)

வம்புநா றுமமல ருமமலைப பணடமுங் கொண்டுநீர்
பைம்பொன்வா ரிக்கொழிக் கும்பழங் காவிரித் தென்கரை
நம்பர்நா ளும்மமர் கின்றநா கேச்சுர நண்ணுவா
ரும்பர்வா னோர்தொழச் சென்றுட னாவது முண்மையே. (௫)

காளமே கந்நிறக் காலனோ டந்தகன் கருடனு
மாளமாய் நின்றெய்த காமனும் பட்டன வினைவுறி
னாளுந்நா தன்னமர் கின்றநா கேச்சுர நண்ணுவார்
கோளுநா ளுந்தீய வேனுநன் காங்குறிக் கொண்மினே. (௬)

வேயுதிர் முத்தொடு மத்தயா னைமருப் பும்விராய்ப்
பாய்புனல் வந்தலைக் கும்பழங் காவிரித் தென்கரை
நாயிறுந் திங்களுங் கூடிவந் தாடுநா கேச்சுர
மேயவன் றன்னடி போற்றியென் பார்வினை வீடுமே. (௭)

இலங்கைவேந் தன்சிரம் பத்திரட் டியெழிற் றோள்களும்
மலங்கிவீ ழம்மலை யாலடர்த் தானிட மல்கிய
நலங்கொள்சிந் தையவர் நாடொறு நண்ணுநா கேச்சுரம்
வலங்கொள்சிந் தையுடை யாரிட ராயின மாயுமே. (௮)

கரியமா லும்மய னும்மடி யும்முடி காண்பொணா
வெரியதா கிந்நிமிர்ந் தானம ரும்மிட மீண்டுகா
விரியினீர் வந்தலைக் குங்கரை மேவுநா கேச்சுரம்
பிரிவிலா தவ்வடி யார்கள்வா னிற்பிரி யார்களே. (௯)

(௩) நறவம்=வாசனை. (௫) வம்பு=வாசனை.
(௮) மலங்கி=மயங்கி. வேந்தன் மலங்கியென முடிக்க.

## திருநாகேச்சுரத்தேவாரம்.

தட்டிடுக் கியுறி தூக்கிய கையினர் சாக்கியர்
கட்டுரைக் கும்மொழி கொள்ளலும் வெள்ளிலங் காட்டிடை
நட்டிருட் கண்ணட மாடிய நாதனு கேச்சுர
மட்டிருக் கும்மல ரிட்டடி வீழ்வது வாய்மையே. (௰)

கந்தநா றும்புனற் காவிரித் தென்கரைக் கண்ணுதன்
னந்திசே ருந்திரு நாகேச் சுரத்தின்மேன் ஞானசம்
பந்தனு விறபனு வல்லிவை பத்தும்வல் லார்கள்போ
யெந்தையீ சன்னிருக் கும்முல கெய்தவல் லார்களே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருக்ஷேத்திரக்கோவை—உ-ந் திருமுறை.

பண்-இந்தளம்

நெற்குன்ற மோத்தூர் நிறைநீர் மருக
னெடுவாயில் குறும்பலா நீடுதிரு
நற்குன்ற வலம்புர நாகேச்சுரம்
நளிர்சோலை யுஞ்சேனைமா காளவாய்மூர்
கற்குன்ற மொன்றேந்தி மழைதடுத்த
கடல்வண்ண னுமாமலரோ னுங்காணச்
சொற்கென்றுந் தொலைவிலாதா னுறையுங்
குடமூக்கென்று சொல்லிக் குலாவு மினே.

---

## திருநாவுக்கரசு நாயனார் திருநேரிசை

சு-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

---

கச்சைசே ரரவர் போலுங் கறையணி மிடற்றர் போலும்
பிச்சைகொ ண்டுண்பர் போலும் பேரரு ளாளர் போலு
மிச்சையான் மலர்க ளேவி யிரவொடு பகலுந் தம்மை
நச்சுவார்க் கினியர் போலு நாகவீச் சுரவ னாரே. (௧)

வேடுறு வேடராகி விசயனோ டெய்தார் போலுங்
காடுறு பதியர் போலுங் கடிபுனற் கங்கை நங்கை
சேடெறி சடையர் போலுந் தீவினை தீர்க்க வல்ல
நாடறி புகழர் போலு நாகவீச் சுரவ னாரே. (உ)

---

௧. மிடற எ—ம் உ. வேடு-வேட்டுவசாதித்தன்மை.

கற்றுணை வில்ல தாகக் கடியரண் செற்றார் போலும்
பொற்றுணைப் பாதர் போலும் புலியத ளுடையர் போலுஞ்
சொற்றுணை மாலை கொண்டு தொழுதெழு வார்கட் கெல்லா
நற்றுணை யாவர் போலு நாகவீச் சரவ னாரே (௪)

கொம்பனாள் பாகர் போலுங் கொடியுடை விடையர் போலுஞ்
செம்பொனா ருருவர் போலுந் திகழ்திரு நீற்றர் போலு
மெம்பிரா னெம்மை யாளு மிறைவனே யென்று தம்மை
நம்புவார்க் கன்பர் போலு நாகவீச் சரவ னாரே. (௫)

கடகரி யுரியர் போலுங் கனன்மழு வாளர் போலும்
படவர வரையர் போலும் பாரிடம் பலவுங் கூடிக்
குடமுழை முழவ மார்ப்பக் கு[illegible]கள் பாட நாளு
நடநவி லடிகள் போலு நாக வீச சரவ னாரே (௬)

[illegible]றயுறு சடையர் போலும் பெண்ணொரு பாகர் போலு
மறையுறு மொழியர் போலு மான்மறை யவன்றனோடு
முறைமுறை யமரர் கூடி முடிகளால் வணங்க நின்ற
நறவமர் கழலர் போலு நாகவீச் சரவ னாரே (௭)

வஞ்சகர்க் கரியர் போலு மருவினோர்க் கெளியர் போலுங்
குஞ்சரத் துரியர் போலுங் கூற்றினைக் குமைப்பர் போலும்
விஞ்சைய ரிரிய வன்று வேலைவாய் வந்தெழுந்த
நஞ்சணி மிடற்றர் போலு நாகவீச் சரவ னாரே. (௮)

போகமார் மோடி கொங்கை புணர்தரு புனிதர் போலும்
வேகமார் விடையர் போலும் வெண்பொடி யாடு மேனிப்
பாகமா லுடையர் போலும் பருப்பத வில்லர் போலு
நாகநா ணுடையர் போலு நாகவீச் சரவ னாரே. (௯)

கொக்கரை தாளம் வீணை பாணிசெய் குழகர்போலு
மக்கரை யணிவர் போலு மைந்தலை யரவர் போலும்
வக்கரை யமர்வர் போலு மாதரை மையல் செய்யு
நக்கரை யுருவர் போலு நாகவீச் சரவ னாரே. (௰)

வின்மையாற் புரங்கண் மூன்றும் வெந்தழல் விரித்தார் போலுந்
தன்மையா லமரர் தங்க டலைவர்க்குந் தலைவர் போலும்
வன்மையான் மலையெ டுத்தான் வலியினைத் தொலைவித் தாங்கே
நன்மையா லளிப்பர் போலு நாகவீச் சரவ னாரே. (௰௧)

---

செற்றார்-அழித்தார். சொற்றுணைமாலை-பாமாலை. ௬ பாரிடம்-பூதம்.
நறவு-வாசனை. ௮. குஞ்சரம்-யானை. குமைத்தல்-அழித்தல்.
வக்கரை—ஓர்தலம்.

# திருநாகேச்சரத்தேவாரம்.

## 2. திருக்குறுந்தொகை

ரு-ந் திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

---

நல்லர் நல்லதோர் நாகங்கொண் டாட்டுவர்
வல்லர் வல்வினை தீர்க்கு மருந்துகள்
பல்லி லோடுகை யேந்திப் பலிதிரி
செல்வர் போற்றிரு நாகேச் சரவரே. (க)

நாவ லம்பெருந் தீவினில் வாழ்பவர்
மேவி வந்து வணங்கி வினையொடும்
பாவ மாயின பற்றறு வித்திடுந்
தேவர் போற்றிரு நாகேச் சரவரே. (உ)

ஓத மார்கட லின்விட முண்டவர்
ஆதி யாரய னோடம ரர்க்கெலாம்
மாதோர் கூறர் மழுவல னேந்திய
நாதர் போற்றிரு நாகேச் சரவரே. (௩)

சந்தி ரன்னொடு சூரியர் தாமுடன்
வந்து சீர்வழி பாடுகள் செய்தபின்
ஐந்த லையர வின்பணி கொண்டருள்
மைந்தர் போல்மணி நாகேச் சரவரே. (௪)

பண்டோர் நாளிகழ் வான்பழி தக்கனார்
கொண்டவேள் விக்கு மண்டை யதுகெடத்
தண்டமா விதாதா வின்றலை கொண்ட
செண்டர் போற்றிரு நாகேச் சரவரே. (ரு)

வம்பு பூங்குழன் மாதும றுகவோர்
கம்ப யானை யுரித்த கரத்தினர்
செம்பொ னாரித ழிம்மலர்ச் செஞ்சடை
நம்பர் போற்றிரு நாகேச் சரவரே. (சு)

மானை யேந்திய கையினர் மையறு
ஞான சோதிய ராதியர் நாமந்தான்
ஆன வஞ்செழுத் தோதவந் தண்ணிக்குந்
தேனர் போற்றிரு நாகேச் சரவரே. (எ)

கழல்கொள் காலினர் காலனைக் காய்ந்தவர்
தழல்கொள் மேனியர் சாந்தவெண் ணீறணி
யழக ரால்நிழற் கீழற மோதிய
குழகர் போற்குளிர் நாகேச் சுரவரே. (௮)

வட்ட மாமதின் மூன்றுடன் வல்லரண்
சுட்ட செய்கைய ராகிலுஞ் சூழ்ந்தவர்
குட்ட வல்வினை தீர்த்துக் குளிர்விக்குஞ்
சிட்டர் போற்றிரு நாகேச் சுரவரே. (௯)

தூர்த்தன் றோண்முடி தாளுந் தொலையவே
சேர்த்தி னார்திருப் பாதத் தொருவிரல்
ஆர்த்து வந்துல கத்தவ ராடிடுந்
தீர்த்தர் போற்றிரு நாகேச் சுரவரே. (௰)

---

## திருத்தாண்டகம்.

௬-ந். திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

---

தாயவனை வானோர்க்கு மானோருக்குந்
தலையவனை மலையவனை யுலக மெல்லா
மாயவனைச் சேயவனை யணியான் றன்னை
யழலவனை நிழலவனை யறியவொண்ணா
மாயவனை மறையவனை மறையோர் தங்கண்
மந்திரனைத் தந்திரனை வளரா நின்ற
தீயவனைத் திருநாகேச் சுரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே (௧)

உரித்தானை மதவேழந் தன்னை மின்னே
ரொளிமுடி யெம்பெருமானை யுமையோர் பாகந்
தரித்தானைத் தரியலர்தம் புரமெய் தானைத்
தன்னடைந்தார் தம்வினைநோய் பாவமெல்லா
மரித்தானை யாலதன்கீ ழிருந்துநால்வர்க்
கறம்பொருள்வீ டின்பமா றங்கம் வேதந்
தெரித்தானைத் திருநாகேச் சுரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. (௨)

காரானை யுரிபோர்த்த கடவு டன்னைக்
காதலித்து நினையாத கயவர் நெஞ்சில்
வாரானை மதிப்பவர்தம் மனத்து ளானை
மற்றொருவர் தன்னொப்பா ரொப்பி லாத
ஏரானை யிமையவர்தம் பெருமான் றன்னை
யியல்பாகி யுலகெலா நிறைந்து மிக்க
சீரானைத் திருநாகேச் சுரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. (௩)

தலையானை யெவ்வுலகுந் தானா னானைத்
தன்னுருவம் யாவர்க்கு மறிய வொண்ணா
நிலையானை நேசர்க்கு நேசன் றன்னை நீள்வான
முகடதனைத் தாங்கி நின்ற
மலையானை வரியரவு நாணாக் கோத்து
வல்லசுரர் புரமூன்று மடிய வெய்த
சிலையானைத் திருநாகேச் சுரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. (௪)

மெய்யானைத் தன்பக்கல் விரும்பு வார்க்கு
விரும்பாத வரும்பாவி யவர்கட் கென்றும்
பொய்யானைப் புறங்காட்டி லாட லானைப்
பொன்பொலிந்த சடையானைப் பொடிகொள் பூதிப்
பையானைப் பையரவ மசைத்தான் றன்னைப்
பரந்தானைப் பவளமால் வரைபோன் மேனிச்
செய்யானைத் திருநாகேச் சுரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. (௫)

துறந்தானை யறம்புரியாத் துரிசர் தம்மைத்
தோத்திரங்கள் பலசொல்லி வானோ ரேத்த
நிறைந்தானை நீர்நிலந்தீ வெளிகாற் றாகி
நிற்பனவு நடப்பனவு மாயி னானை
மறந்தானைத் தன்னினையா வஞ்சர் தம்மை
யஞ்செழுத்தும் வாய்நவில வல்லோர்க் கென்றுஞ்
சிறந்தானைத் திருநாகேச் சுரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. (௬)

மறையானை மால்விடையொன் றூர்தி யானை
மால்கடனஞ் சுண்டானை வானோர் தங்கள்
இறையானை யென்பிறவித் துயர்தீர்ப் பானை
யின்னமுதை மன்னியசீ ரேகம்பத்தி

னுறைவானை யொருவரு மீங்கறியா வண்ண
மென்னுள்ளத் துள்ளேயொ ளித்து வைத்த
சிறையானைத் திருநாகேச் சுரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. (௭)

எய்தானைப் புரமூன்று மிமைக்கும் போதி
லிருவிசும்பில் வருபுனலைத் திருவார் சென்னிப்
பெய்தானைப் பிறப்பிலியை யறத்தினில்லாப்
பிரமன்றன் சிரமொன்றைக் கரமொன் றின்றாற்
கொய்தானைக் கூத்தாட வல்லான் றன்னைக்
குறியிலாக் கொடியேனை யடியே னாகச்
செய்தானைத் திருநாகேச் சுரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. (௮)

அளியானை யண்ணிக்கு மான்பா றன்னை
வான்பயிரை யப்பயிரின் வாட்டந் தீர்க்குந்
துளியானை யயன்மாலுந் தேடிக்காணாச்
சுடரானைத் துரிசறத் தொண்டு பட்டார்க்
கெளியானை யாவர்க்கு மரியான் றன்னை
யின்கரும்பின் றன்னுள்ளா லிருந்த தேறற்
றெளியானைத் திருநாகேச் சுரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. (௯)

சீர்த்தானை யுலகேழுஞ் சிறந்து போற்றச்
சிறந்தானை நிறைந்தோங்கு செல்வன் றன்னைப்
பார்த்தானை மதனவேள் பொடியாய் வீழப்
பணிமதியஞ் சடையானைப் புனிதன் றன்னை
யார்த்தோடி மலையெடுத்த வரக்க னஞ்ச
வருவிரலா லடர்த்தானை யடைந்தோர் பாவந்
தீர்த்தானைத் திருநாகேச் சுரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

(வைப்பு)

# திருவாரூர் அரநெறித் திருத்தாண்டகம்,

௬-ந்—திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

நந்திபணி கொண்டருளும் நம்பன் றன்னை
நாகேச் சுரமிடமா நண்ணி னானைச்
சந்திமல ரிட்டணைந்து வானோ ரேத்துந்
தந்துவனைச் சக்கரமாற் கீந்தான் றன்னை
இந்துநுழை பொழிலாரூர் மூலட் டானம்
இடங்கொண்ட பெருமானை யிமையோர் போற்றும்
அந்தணனை யர நெறியி லப்பன் றன்னை
அடைந்தடியேன் அருவினைநோ யறுத்த வாறே.

# திருக்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகம

௬-ந்—திருமுறை.

நறையூரிற் சித்தீச் சுரநள் ளாறு
நாரையூர் நாகேச்சுர நல்லூர் நல்ல
துறையூர் சோற் றுத்துறை சூல மங்கை
தோணிபுரந் துருத்தி சோமீச்சுரம்
முறையூர் கடலொற்றி யூரூற் றத்தூ
ரோமாம் புலியூ ரோரே டகத்துங்
கறையூர் கருப்பறியல் கன்றாப் பூராங்
கைலாய நாதனையே காண லாமே.

௬-ந்திருமுறை.

# அடைவு திருத்தாண்டகம்.

நாடகமாடிட நந்திகேச் சுரமா காளேச்
"சுரநாகேச் சுரநாக ளேச்சுர நன்கான
கோடீச்சுரங் கொண்டீச்சுரங் திண்டீச்சுரங்
குக்கடேச் சுரமக்கீச் சுரங்கூ றுங்கால்
ஆடகேச் சுரமகத்தீச் சுரமயனீச் சுரமே
அத்தீச்சுரஞ் சித்தீச்சுர மந்தண் கானல்
ஈடுதிரை யிராமேச்சுர மென்றென் றேத்தி
இறைவனுறை சுரம்பலவு மியம்பு வோமே.

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்தி நாயனார்-பண் பஞ்சமம்.

### ௭-ந் திருமுறை.

### திருச்சிற்றம்பலம்.

பிறையணி வாணுத லாளுமை யாளவள் பேழ்கணிக்க
நிறையணி நெஞ்சனுங்க நீல மால்விட முண்ட தென்னே
குறையணி கொல்லை முல்லை யளைந்து குளிர் மாதவிமேற்
சிறையணி வண்டுகள் சேர்திரு நாகேச் சுரத்தரனே (௧)

அருந்தவ மாமுனி வர்க்கரு ளாலமோ ராலதன்கீ
ழிருந்தற மேபுரி தற்கியல் பாகிய தென்னைகொலாங்
குருந்தமு லேகுரா வம்மர வின்னெயி றேற்றரும்பச்
செருந்திசெம் பொன்மல ருந்திரு நாகேச் சுரத்தரனே. (௨)

பாலன தாருயிர் மேற்பரி யாது பகைத்தெழுந்த
காலனை வீடுவித் துக்கருத் தாகிய தென்னைகொலாங்
கோலமலர்க்குவ ளைக்கழு நீர்வயல் சூழ்கிடங்கிற்
சேலொடு வாளைகள் பாய்திரு நாகேச் சுரத்தரனே. (௩)

குன்ற மலைக்கு மரிகொடி யேரிடை யாள்வெருவ
வென்றி மதகரி யின்னுரி போர்த்தது மென்னைகொலா
முன்றி லிளங்கமு கின்முது பாளை மதுவளைந்து
தென்றல் புகுந்துல வுந்திரு நாகேச் சுரத்தரனே (௪)

அரைவிரி கோவணத் தோடர வார்த்தொரு நான்மறைநூ
லுரைபெரு கவுரைத் தன்று கந்தருள் செய்ததென்னே
வரைதரு மாமணி யும்வரைச் சந்தகி லோடுமுந்தித்
திரைபொரு தண்பழ னத்திரு நாகேச் சுரத்தரனே. (௫)

தங்கிய மாதவத் தின்றழல் வேள்வியி னின்றெழுந்த
சிங்கமு நீள்புலி யுஞ்செழு மால்கரி யோடலறப்
பொங்கிய போர்புரிந் துபிளந் தீருரி போர்த்ததென்னே
செங்கயல் பாய்கழ னித்திரு நாகேச் சுரத்தரனே. (௬)

நின்றவிம் மாதவத் தையொழிப் பான்சென் றணைந்துமிகப்
பொங்கிய பூங்கணை வேள்பொடி யாக விழித்ததென்னே
பங்கய மாமலர் மேன்மது வுண்டுவண் டேன்மலரச்
செங்கயல் பாய்வயல் சூழ்திரு நாகேச் சுரத்தரனே. (௭)

வரியர நாண தாகமா மேரு வில்லதாக
வரியன முப்புரங் கள்ளவை யாரழ லூட்டலென்னே
விரிதரு மல்லிகை யும் மலர்ச் சண்பக மும்மளைந்து
திரிதரு வண்டுபண் செய்திரு நாகேச் சுரத்தரனே. (அ)

ஆங்கியல் யோகந் தனையழிப் பான்சென் றணைந்துமிகப்
பொங்கிய பூங்கணை வேள்பொடி யாக விழித்தலென்னே
புங்கய மாமலர் மேன் மது வண்டுபண்வண் டறையச்
செங்கய னின்றுகளுந்திரு நாகேச் சுரத்தரனே. (கூ)

குண்டரைக் கூறையின் றித்திரி யுஞ்சமண் சாக்கியப்பேய்
மிண்டரைக் கண்டதன் மைவிர வாகிய தென்னைகொலோ
தொண்டிரைத் துவணங் கித்தொழில் பூண்டடி யார்பரவுந்
தெண்டிரைத் தண்வயல் சூழ் திரு நாகேச் சுரத்தரனே. (௰)

கொங்கணை வண்டரற் றக்குயி லும்மயி லும்பயிலுந்
தெங்கணை பூம்பொழில் சூழ் திரு நாகேச் சுரத்தரனை
வங்க மலிகடல் சூழ்வய னாவல வூரன்சொன்ன
பங்கமில் பாடல்வல் லாரவர் தம்வினை பற்றறுமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

கூ—யோகுதனை. எ—ம்.
கூ—யோகுதன்னை சீ—ம்.

கக. நாவலாரூரன், சீ—ம்.

# அருணகிரிநாதர் அருளிச்செய்த திருப்புகழ்.

## திருநாகேச்சுரம்.

தானன தானத் தனத்த தத்தன
தானன தானத் தனத்த தத்தன
தானன தானத் தனத்த தத்தன

ஆசார வீனக் குதர்க்க துட்டர்கள்
மாதாபி தாவைப் பழித்த துட்டர்கள்
ஆமாவி னூனைச் செகுத்த துட்டர்கள்
பரதாரம்.

ஆகாதெ னாமற் பொசித்த துட்டர்கள்
நானாவு பாயச் சரித்ர துட்டர்கள்
ஆவேச நீரைக் குடித்த துட்டர்கள்
தமிழ்யாரா மசாம.

கூசாது சேரப் பறித்த துட்டர்கள்
ஊரார்க ளாசைப் பிதற்று துட்டர்கள்
கோலால வாழ்விற் செருக்கு துட்டர்கள்
குருசேவை.

கூடாத பாவத் தவத்த துட்டர்கள்
ஏயாது தேடிப் புதைத்த துட்டர்கள்
கோமா ளநாயிற் கடைப்பி றப்பினில்
உழல்வாரே.

வீசாவி சாலப் பொருப் பெடுத்தெறி
போரார வாரச் சமுத்தி ரத்தினில்
மீளாம லோடித் துரத்தி யுட்குறும்
ஒருமாவை.

வேரோடு வீழத் தறித்த டுக்கிய
போராடு சாமர்த் தியத்தி ருக்கையில்
வேலாயு தாமெய்த் திருப்பு கழ்ப்பெறு
வயலூரா.

நாசாதிப் ராரத் தகுக்க மிக்கவர்
மாயா விகாரத்தியக்க ருத்தருள்
ஞானோப தேசப் ரசித்த சற்குரு
வடிவான.

நாதாவெ னாமுற் றுதித்தி டப்புவி
யாதார மாய்கைக்கு மூட்டமுற்றருள்
நாகேசநாமத் தகப்பன் மெச்சிய
பெருமாளே.

திருச்சிற்றம்பலம்.

# திருநாகேச்சுரப் புராணம்.

## பாயிரம். கடவுள்வாழ்த்து

### சான்று பிள்ளையார் காப்பு.

என்றென்னை யைவர்களின் மீட்டாளப்
பேருருவ மிதுவாக் காட்டி
யீன்றெடுத்த வவனன்றி யோரணுவு
மசையாமை யெளியேன் றேரத்
தோன்றுசெய லெதற்குமுன்னாய்த் தந்தையியன்
மகற்காகுந் தொன்மை காட்டுஞ்
சான்றானை முகக்கடவு ளடிக்கமலந்
தலைக்கமலந் தரித்து வாழ்வாம். (க)

### திருநாகேச்சுரர் வணக்கம்.

அருநாகேச் சுரமகளை மணந்திட்டோன்
யோகதனி லமர்ந்தே யெல்லின்
வெருநாகேச் சுரவேளை விழித்தழித்துச்
செவ்வேளை விழித்தே யீத்தோன்
பெருநாகேச் சுரர்முதலெச் சுரராலும்
நிச்சயித்துப் பெறவொண் ணாதான்
திருநாகேச் சுரப்பெருமான் றிருவடிப்போ
தெப்போதுஞ் சிந்திப் பாமால்

### மங்கைபாகத்தலைவர் வணக்கம்.

எம்மொழியின் செம்பொருளா யியலாண்பெண்
ணலியென்றே யிசைக்கொ ணாதா
யம்மொழியின் பான்மூன்றாய்!மறையியம்பும்
வடமொழிக்கு மப்பா லாகி
யிம்மொழியின் றமிழ்க்குறவு மிகப்பூண
வுயிருபா லிசையா நின்ற
செம்மொழியின் பெயர்ப்பொருளா முமைபாகத்
திறைவனடி சென்னி சேர்ப்பாம் (௩)

## மலைமகள் வணக்கம்.

கலைமகளை யெழுத்துமொழி யிசையுலகா
யாவருமே காண நிற்க
வலைமகளே பொருளுலகா யமைந்திடவு
மவற்றுயிர்போன் றறிவாய் நின்று
நிலைமகளாந் தனக்கிசையவ் விருமகளு
மிருளையரா யிருபாற் சேரத்
தலைமகளே யெனமறையு மறையுமலை
மகளடிக்கட் டாழ்ந்து வாழ்வாம் (௪)

## குன்றமுலையம்மை வணக்கம்.

உலகுயிர்கள் பெருகியிடு முடற்றாயார்
உ[illegible]லுண்ணி னுடலை யாக
நிலவியிடு மென்றாலு மப்பாலுந்
தன்னலை நிலைவ தாக்கிக்
குலவியிடு மனைத்துயிர்க்கு மெந்நாளும்
பசிவிடுக்கக் குறையா ஞான
வலகில்பெருங் கருணைப்பால் சுரக்குமலை
முலையம்மை யடியைச் சார்வாம் (௫)

## மன்றாடினர் வணக்கம்.

உலகாட வுயிராட வெழுத்தாட
மொழியாட வோல மிட்டே
வலகிலா மறையாட நிலையான
கலையாட வளவா நின்ற
விலகுபல கருவியா டிடவெனது
வினையாட வியல்பின் மாயை
மலமாட மதியாட மன்றாடும்
பெருமானை மனத்துள் வைப்பாம் (௬)

## சிவகாமவல்லியம்மை வணக்கம்.

இறைவனவ னெத்தனைதா னாடிடினு
மத்தனையு மெதனு லென்றத்
துறையறிய வாட்டமெலாந் தன்னுட்டக்
கடைவைத்துத் தெர்மும் பினைங்கட்

கறைபிறவி நோய்தீர்க்கு மருந்தளிக்க
விச்சைசெய லறிவாய் நின்றே
யிறைமகளாய் மன்றில்வளர் சிவவேட்கை
வல்லியின்று ளிறைஞ்சி வாழ்வாம் (எ)

## ஆலமர்கடவுள் வணக்கம்.

துன்றியவின் னிளவலாய் முதியவரா
நால்வருக்குஞ் சொன்னான் மறையின்
னன்றான வறன்முதனூன் கந்தனையும்
நவிலாது நவின்ற நேனு
மென்றுநலங் கேட்பவர்சொல் பவரியல்க
ளத்தனையு மிசைத்தா ரென்ன
வன்றாலின் கீழிருந்த வறிவனு
ரடிக்கமல மகத்துட் கொள்வாம் (அ)

## ஆனைமுகக்கடவுள் வணக்கம்.

ஒருகோடு மிருசெவியு மும்மதமு
நால்வாயு முயரைங் கரமும்
பெருவயிறுஞ் சிற்றடியும் பேதையே
னகம்பொறித்துப் பிறங்கச் செய்தென்
கருகுமல மிருவினைகண் மும்மாயை
யகல்வித்துக் கருத்தி லன்பே
யுருகுநெறி யைந்தெழுத்தோ டின்பருளும்
பிள்ளைகழ லுளத்துள் வைப்பாம் (கூ)

## முருகப்பெருமான் வணக்கம்.

அயிலெடுத்து மயிலின்மேற் காலெடுத்தன்
றேரெடுத்தே யழுத வானோர்
துயிலெடுத்துத் துயரெடுத்த சூரெடுத்துப்
பேரெடுத்தச் சுரரைக் காத்துக்
குயிலெடுத்து மொழியிருவர் மணமடுத்தோன்
றனதன்பர் குறையாப் பிறவி
வெயிலெடுத்து நிழல்கொடுக்கு முருகவே
ளடிக்கமலம் விளம்பிச் சேர்வாம் (ய)

## திருநந்திக்கடவுள வணககம. (வேறு)

மறைமுத னூல்கண் மலைவறத்தெரிந்து
மதிமுகிழ் முடித்தவ னடியி
லுறைவுறு மன்றுந் தொழும்பதாமுயிரென்
றுணர்வுற வருளினா லதையே
நிறைவுற வேண்டி யிரண்டறும்
வீடும் நினைத்திலா தென்குரு முதலா
யிறைமுத லடிமை யேற்றம ரகம்படி
யேற்றத னிறையடி போற்றி (கக)

## ஆளுடைபிள்ளையார் வணக்கம். (வேறு)

ஒருஞான முணராதே முடற்பிணியோ
டுயர்பிறவி யொழிய வோர்ந்தே
வருஞான மொழிமறையை மந்திரந்
திரமும்மா மருந்தாப் பாடி
யருஞான வடிவன்ற னடிநினைந்து
தனைமறந்தே யருளிற்றோய்ந்த
திருஞான சம்பந்தப் பிள்ளையார்
திருத்தாளைச் சிரத்திற் சேர்ப்பாம் (கஉ)

## திருநாவுக்கரசர் வணக்கம்.

ஒருநாளி லுடல்வெறுத்தே யுயிர்வெறுத்தே
யுடைமையெலா மொருவிப்போந்தே
யருநாவின் மறைபாடும் பிறைசூடி
யடித்தொழும்பே யவையாக் கொண்டு
வருநாளி னுயிர்ச் சிறுமையிறைபெருமை
யுலகறிய மகிழ்ந்து பாடுங்
திருநாவி னரசரெனச் செம்மைமொழி
யடிகளடி சென்னி வைப்பாம் (கந)

## வன்றொண்டர் வணக்கம்.

மன்றுடையா னாண்டவனுங் கொண்டவனுந்
தந்தையுமா மாண்பு முற்றுந்
மதான்றுடைய தோழமையில் வைத்துணர்ந்து
வேண்டுவன சொல்லிப் பெற்றே

நன்றுடையா ளெளிமையையு மவனடிமைப்
பெருமையையு நயக்கப் பாடும்
வன்றொண்டன் பெருமையினை வாயார
வாழ்த்தாதார் வாழாதாரே (கச)

## ஆளுடையவடிகள் வணக்கம்.

பணிமொழிதன் னறிவிச்சை செயலெல்லா
மொழிந்திடவே பரிந்து வேண்டி
மணிமிடற னருளன்றி யொன்றறியா
தன்பதனின் மகிழ்ந்து மூழ்கி
யணிமொழியா மகப்பொருளும் புறப்பொருளு
மவனருளா வமைத்துப் பாடும்
மணிமொழிய ரெனப்பெற்ற வாதவூ
ரடிகளடி மனத்துட் கொள்வாம் (கரு)

## சண்டியடிகள் வணக்கம்.

நெறியொன்றி யுரைக்குமோ ரறிவனின்றிச்
சிவபூசை நியம மாகப்
பிறிவின்றி யெழுமன்பாற் பிழைபாடும்
விளையாமற் பெருகச் செய்து
வெறியொன்று மிதழியன்பால் விதியுடையார்
வழிபாட்டின் விளைவிற் கெல்லாம்
குறியொன்று சான்றாக வருள்பெற்ற
சண்டியடி குறித்து வாழ்வாம் (கசா

## சேக்கிழாரடிகள் வணக்கம். (வேறு)

போக்கொடு வரவு மில்லாப்
புண்ணியத் தொண்ட ரன்பா
லாக்கிய படிவத் தன்றன்
னறிவிலே முய்யக் கொண்ட
மாக்கதை யுலகிற் காணி
மகிழன்பு நெறியிற் றந்த
சேக்கிழா னடிம னத்துஞ்
சிரத்தினு மணந்துவாழ்வாம் (கஎ

## ஆசிரியன் வணக்கம். (வேறு)

பெரிதினும் பெரிதே யிறைவழி பாடருள்
பெற்றிடு கென்றெமக் களித்த
விரிதிரு வுருவும் பேருமொன் றில்லான்
மீன்கணு ளழகனென் றிடவே
பெரிதிருளகற்றுங் கதிரினு ளென்றும்
பிரிவுறாச் சிவக்கொழுந் ததனல்
பரிதியார் கோயில் வீற்றிருந் தருளும்
பரமன தடியிணை பணிவாம் (கஅ)

## நூல்வழி. (வேறு)

சூதமுனி புகன்றிட்ட மூவாறு
புராணமதிற் றுதைந்து நின்ற
வோதரிய பௌடியத்தி னுத்தரத்தி
றலச்சிறப்பே யுரைக்குங் காண்ட
மேதமறமொழி நாகேச் சுரச்சிறப்பை
யெம்பெருமா னெம்பிராட்டிக்
கோதரவோ டுரைத்தருள மொழிபெயர்த்துத்
தமிழ்முறையா லறைத லுற்றேன் (கக)

## அவையடக்கம்.

கரும்பதனை மனங் கொள்வார்
கடிந்திடா ரதன் கோதை
யரும்புமலர் வேண்டிடுவோ ரதன்
காப்பை யகற்றி யிடார்
பெரும் பாம்பு மணியாகும்
பெரு நாகேச் சுரன்புகழை
விரும்புமன் புடைத் தொண்டர்
வெறுக்காரென் புன்மொழியே (உ0)

## சிறப்புப்பாயிரம்.

தேரூட்டிடை யெழுதற் கருதிரு
நாகேச் சுரன்புக ழியாவரு முணரத்
தேட்டிலட் யுயரும் பொருளினி
லருளிற் றெவுட்டுறண் ணுமலேடண்ணை

கேட்டிட மூவ லழகிய வேலன்
 கிளந்திடு தமிழ்மொழி யதனுட்
பாட்டிடை விரவு முறைச்செயு ளதனாற்
 பண்புறப் பகர்ந்தனன் மாதோ (உக)

## தமிழ்நாட்டுச் சிறப்பு.

தெருள்காட்டு மாரியர்க ளமரர்முத
 லெனைவர்களுந் திரண்டு தேர்ந்து
பொருள்காட்டு நீர்மரமண் ணெல்லாமும்
 புனிதமெனப் புகலா நின்றே
யிருள்காட்டு மதிகெடுத்து விதிகெடுத்துக
 கதியுடைய வீச னூர்த
மருள்காட்டுந் தமிழ்நாட்டுப் பெருமையெமர்
 மதிகாட்டி யறைதற பாற்றே (உஉ)

## நாட்டுச் சிறப்பு.

ஆவேறு மிறைவனரு ளுருவுடைய
 திருக்கோயிற் களவே யின்று
பாவேறு மெய்ப்புலவர் பாட்டேற
 வருள்சுரந்து பரவ வொண்ணுக்
கோவேறு மூநாட்டின் முன்னுடாய்ச்
 சோழர்குலக் கொடியே யென்னக்
காவேரி வளங்காட்டுந் திருநாட்டின்
 பெருமையது கடைரயப் போமோ (உங)

## திருநகரச் சிறப்பு.

அன்புநெறி யிதுவென்றே யகிலமெலா
 மறிந்துய்ய வருள வந்த
வின்புடைய குன்றைநகர்ச் சேக்கிழா
 னகத்துளா யெம்மான் றொண்டர்
மன்பொலியு மன்பதனை விளக்கியிட
 எஞ்ஞான்றும் வாழ்ந்த தென்னில்
பொன்பொலியுந் திருநாகேச் சுரநகரா
 மிதன்பெருமை புகலப் போமோ (உச)

பாயிரம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



கணபதி துணை

திருச்சிற்றம்பலம்

# திருநாகேச்சுரப்புராணம்.

---

## நாகநாதன் காப்பு.

வரவுடையா ரன்பர்மனம் பிரியாத
தரமுடையார் மதியார் நெஞ்சக்
கரவுடையார் நீர்விரவி வருஞ்சடையிற்
குரவுடையார் கழலிற்சார்ந்தோர்ப்
புரவுடையா ரரையதனி லரவுடையா
ரேழையர்பாற் பொருந்தச் சென்றே
யிரவுடையார் புகழ்பாடப் பெறுவேமே
லிசைந்தவுட லிசைந்ததாமே.

## (1-வது) புராண வரலாறுரைத்தபடலம்.

முன்னொரு காலத்தில் கைலைமலையிலே தேவர், அசுரர் முதலிய எல்லோராலு மிறைஞ்சப்பெற்றுப் பன்னிறம்வாய்ந்த மணிகளாலும், மாற்றுயர்ந்த பொன்னாலும், விளங்காநின்ற முத்துமாலைகளாலும் அணிசெய்யப்பட்ட நன்மண்டபத்திலே, சனகர்முதலிய முனிவர்கள் துதிக்கவும், தேவர் அசுரர் முதலியவர்கள் அஞ்சலி கூப்பி வணங்கவும், அரம்பை முதலியதேவமங்கையர்கள் நடனஞ் செய்யவும், நந்தி, சண்டி முதலிய கணநாதர்கள் வெண்சாமரம் விசிறி பணிமாறவும், ஒன்பது மணிகளிழைத்தொளிராநின்ற மாணிக்கப்பீடத்தில் வீற்றிருந்தருளும் இறைவன் மலைமகளை முகமலர அகமலர்ச்சியோடு தழீஇக் கொண்டருளினார். அவ்வமயத்தில் அம்மலைமகளாகிய இறைவி திருமால், அலரவன் முதலியதேவர்களால் புகழப்பெற்ற, தன் இறைவனுடைய மெய்ப்புகழைத்தானே சொல்ல ஆற்றலுடையவளாக இருப்பினும், தன் தங்கையா

கிய கங்கையைத் தாங்கிய அரனுடைய கதாமிர்தத்தை அப் பெருமான் திருவாயினாலேயே ஆங்கு வெளிப்படுத்தத் திருவுளங் கொண்டு, அச்சபையில் முனிவரர் அமரர் முதலிய எல்லோரும் அறிந்துய்ய எம்பெருமானாகிய ஈசனை இறைஞ்சி அன்புடனே ஈசனே! கங்காதர! மகாதேவ! அருளின்கொள்கலமே! உலகநாதா! மகேசா! மங்கலக்குணக்கடலே! திருமால் மலரவன் முதலியவர் களால் வந்திக்கப்பெற்ற திருவடித்தாமரையோய்! காத்தருள்க. தேவதேவேசா! விடைக்கொடியாய்! எப்போதும் என்மீது அருள் புரிந்தருள்கவென்று, துதித்து, இறைவா! முன்னொருகாலத்திலே இப்பூமண்டலத்திலே நினைப்பினாலும், பார்வையினாலும், இம்மை மறுமை வீடுகளைத் தரத்தக்க நின்திருத்தலங்களில் ஏழாயிரத்து நானூறு நின்னால் சிறப்பித்துச் செப்பி யருளப்பட்டன. அவற்றுள் சிறந்தன எழுநூற்று முப்ப தெனவும் அவ ற்றுள் சிறந்தன நூறெனவும், அவற்றுள் சிறந்தன முப்ப த்திரண் டெனவும் சொல்லப்பட்டன. அவற்றுள் ஒன்றே எந்தவினையையும் இகந்து இக்கலியுகத்தில் எண்ணியதையளிக் குங் கைலேக்கொப்பானதும், சண்பகவனமென்னும் பெயருடை யதுமென்று சிறந்தெடுத் தோதப்பெற்றுள்ளது. அத்தகைய அப்பெருந் தலத்தை அடியேனுக்கிப்பொழுது விளக்கமாக விரித்தருளவேண்டுமென்று மகேசனை வலம் செய்துவணங்கி அஞ்சலித்து விண்ணப்பஞ் செய்தனள். இறைவனும் திருப் புன்முறுவல்செய்து அவ்வாறே திருவாய்மலர்ந்தருளுவாராயினர்.

மங்கலத்தைச் செய்யும் மாதே! மிகுந்த விருப்பமுள்ளதும், தொடக்கத்திலேயே பயனளிப்பதும் தேவர், மானுடர், கந்தர்வர் இயக்கர், சித்தர், கின்னரர், நாகர், வசுக்கள், திசைக்காவலர் இருடி கள், மருத்துவர்கள், அரசர்கள், முதலியவர்கள் எல்லாராலும் எஞ்ஞான்றும் ஏத்தப்பெற்றதும், அறம், பொருள், இன்பங்களை எளிதில்லீவதும், சண்பகவனமெனப் பெயர் பெற்றதுமிதுவே. இந்நகர் காவேரிக்குத் தெற்கிலும், அரிசொல்நதி யென்ற அரிசி லாற்றுக்கு வடக்கிலும், திருவிடைமருதிற்குத் தென்மேற்கிலும், திருந்துதேவன் குடியென்னுங் கற்கடக நகரத்திற்குத் தென்றி சையில் கூப்பிடுதூரத்திலும், மாமக தீர்த்தத்திற்குக் கீழ்த்திசை யிலும், திருநீலக்குடிக்குச் சிறிது வாயுதிசையிலுமாய் விளங்கா நிற்பதும், மிருவனப்பினால் மிக்கதும், வாக்கினாலுங் கேட்ப

தனுலும், காட்சியினுலும், சிறிது காலந்தங்குதலாலும், உயிர்களு க்குஎவ்வகைப்பாபமும்போக்கி இறைவனேடுகலப்பைத்தருவதும் இன்னும் இயல்பாக நடப்பவர், அந்நகரின் வழியாக நடந்து போந்து வருவதாக நினைப்பவர் ஆகிய இவர்கள் அந்நகரில் ஓரடி வைப்பில் அவ்வடிக்கு ஓர்பரிமேதமியற்றின பயன் தருவதேயாம். இனி அந்நகர் முதல் யுகத்தில் ஒருயோசனையாகவும், இரண்டா வதுயுகத்தில் அதற்கு முக்காற் பங்காகவும், மூன்றுவதில் அரைப் பங்காகவும் கலியில் காற்பங்காகவும் இடங்கொண்டுள்ளது.

இனி, இதற்குள்ளான இத்திருநகரிலுண்டாயவிலங்குகள், பற வைகள், விட்டில் முதலியன, மரங்கொடி, செடி, புல், பூடு, புழு முதலியன யாவும் இறுதிக்காலத்தில்கைலையை யடைந்தெனது ரு ப்பெறுகின்றன. அவ்வாறுயின் இந்நகரில் தங்கிய மக்களின் இய ல்பை இயம்புவானேன்? அந்தணர், அரசர், வணிகர், வேளாளர், இவர்கள் மங்கையர்கள், ஆடு, மாடு மேய்ப்பவர்கள், தச்சர், கொ ல்லர் முதலியதொழிலாளர்கள் இறைவனை ஒருமுறையேகண்டால் வேற்றுமையின்றி இறைவனுருவை அடைகின்றார்கள்.

இன்னும் அந்நகரின் சண்பகமரத்தின்நிழலில் இமைப்பொழு தாவது வசித்தனரேல், அவர் கையிற் கைலையே என்பது உண் மை. இனி எல்லாசசெல்வமும் அவர்களிசைவார்கள் என்பதைக் கேட்பதென்? அநநகர் அந்தணர்களுக்கு அகநிறைந்த அமுதளிப் பவர்கள் மறுமையில் அரசியலை அனுபவப்பெறுவார்கள். முன்னே இநநகரை அன்புடன் பூசித்து நந்தி பதவியைப்பெற்று நந்தீசர் எஞ்ஞான்றும் நாகேசர் முன்னிலையில் வசிக்கின்றார்

விநாயகன் பூசித்துக் கணத்தலைமை பெற்று எப்போதும் இந்நகரிலேயேதங்கியுள்ளான். நாகேசரைப்பூசித்தற்கு முன்னரே அவனைப் பூசிப்பவர்களான இநதிரன் முதலியவர்களும் நினைத்த தைப் பெறுகின்றனர். இதுவுண்மை. இநநகர்க் கடவுளைக் கௌத மர் பூசித்து அகலிகையை அடைநதனர். நளன் பூசித்து இழந்த ஐமயந்தியை யெய்தினன். பராசரர் பூசித்து மச்சகந்தியைப் புண ர்ந்த பாவம் போக்கினர். பாண்டவர்கள் பூசித்து முன்னரே யிழந்த செல்வத்தையேற்றுக் கார்த்திகை மாதத்திருவிழாவும் நடத்தினர். நாகேசர் நின்றுலும் சிறப்பாகப் பூசிக்கப்பெற் ருர். வசிட்டர் கார்த்திகைமாதத்தில் அந்நகரில் பூசித்து மக்கள்

சோகத்தை மாற்றினர். இந்திரன் குருவின் கட்டளையால் பூசித்து இழந்தசெல்வத்தை அடைந்து இன்பத்தை யெய்தினன். பிரமன் பூசித்துப் பேறு பெற்றனன். பகீரதன் இந்நகரில் கடவுளைப் பூசித்துக் கங்கையை அடைந்தான் சித்திர சேன அரசன் வை காசி மாதத்தில் பெருந்திருநாளெனப்படும் மகோற்சவஞ் செய்து நற்புத்திரனை அடைந்து புகழ் பெற்று உலகையாண்டனன். சிவ யோகியாகிய அந்தணன் ஒருவன், சண்பகநாதன்கோவிலிற்புல்லைப் பறித்துப்புனிதனுப் ஈசனுனன். ஆதிசேடனும், (தக்ஷகன்) தக்கக னும், கார்க்கோடகனும் ஆகிய நாக அரசர்கள் பூசித்து நமக்குப் பணியானுர்கள். மாபெரும்பாவிகளானுலும், இந்திரனுற் செய்யப் பட்ட திருவிழாவில் இறைவனைக்கண்ணுற்றுல் பெறுதற்கரிய முத் தித்திருவைப் பெறுவார்கள். சிவனிரவில் வில்வத்தின் வரலாற்றை யும், ஆலமரவரலாற்றையும், ஆலயவரலாற்றையும், இந்நகரில்முறை யாற்சொல்லக் கேட்பவர்கள் இறைவனது திருவடிப் பேற்றை யெளிதிற் பெறுவார்கள். அன்றியும் வில்வத்தினுல் திருவிழாக் காலத்தில் இத்தலத்தின் இறைவனை அர்ச்சித்து வணங்குகின்ற அன்பர்கள் பெருநோய்கள் மிக நலிவதினின்றும் பிரிந்து வாழ் வார்கள்.

இனி இத் தலத்தில் மிகப்புனித நீர்நிலையான தீர்த்தங்கள் பன்னிரண்டுள்ளன. அவையாவன; சூரியதீர்த்தம், இயமதீர்த்தம், பிரமதீர்த்தம், சந்திரதீர்த்தம் அக்கினிதீர்த்தம், துர்க்காதீர்த்தம், கௌதமதீர்த்தம், பராசர தீர்த்தம், இந்திர தீர்த்தம், பிருகுதீர்த் தம், கண்ணுவதீர்த்தம், வசிட்ட தீர்த்தம் என்பனவாம்.

இவையாவர்க்குங் கலியில் கிடைத்தற்கரியவாம். இத்தீர்த்தங் களில்மூழ்கி ஒருநாளாவது இந்நகரிலிருந்தவர்கள்கடவுட் பிறப்பி னரே. மறையோதி இல்லறம்புகுந்து இந்நகரில் வாழுநராகிய அந் தணர்களுக்குப் பசு, பூமிமுதலியனவற்றைத் தானமாக வழங்கின வர்கள் அப்பூமியில் புல்பூடு உள்ள அளவுஞ் சாகதீபததிற் பிறந்து, ஆங்குப் பெரும்போகம் துய்த்துப்பின், பூமியிலே முனிவர் குலத் திற் பிறந்து அருங்கலையின்று அங்கும் பெருஞ்செல்வம் நுகர் ந்து இறுதியில் ஈசுவரத்தன்மையை யெய்துவார்கள்.

இத்தலத்துச் சண்பக மரத்தடியில் பூசித்து அதனை வலம் வருபவர் பூமியைவலம்வந்த பயனைப்பெறுவார்கள். இனி அஞ்

சனி, வணக்கம், செபம், தவம் முதலாயின செய்கிறவர்கள் முறையே இராக்கதம், பைசாசம், வேதாளம் முதலிய பிணிப்பினின்றும் நீங்கி இன்பநிலையைப் பெறுவார்கள்.

கார்த்திகை மாதத்தில் சூர்ய தீர்த்தத்தில் திங்கட்கிழமை சிவன்ராவு, சங்கிராந்தி, ஆர்த்ரா தரிசனம், மகோதயம், இரண்டயனம், வியதிபாதம், அமாவாசை, பௌர்ணமி, முதலிய புண்ணியதினங்களில் மூழ்கி இந்நகர்ச்சிறப்பைக் கேட்பவர்கள் செல்வம், கல்வி பசுக்கள், புத்திரர்கள், ஞானம், சிவன்பாலன்பு, சிவனார்திருவடிப்பேறு முதலிய நலங்களெல்லாம் எளிதிலெய்துவார்கள். இது திண்ணமென்றருளினர்.

திருச்சிற்றம்பலம்.

(1-வது) புராண வரலாறுரைத்தபடலம் முற்றிற்று

## (2-வது) சூலதீர்த்த வரலாறுரைத்த படலம்.

மலைமாது இறைவனை இறைஞ்சி இத்தலத்தின் பெயர்க்காரணமும், நதி வருகையும், மூத்தபிள்ளையார் முயன்றுவந்த வரலாறும், கௌதமர், நளன், பராசரர், பாண்டவர், வசிட்டர், இந்திரன் பகீரதன், பிர்மா, தக்ககன், முதலியவர்கள்வரலாறுகளும், பன்னிரண்டுபுனிதநீர் நிலைகளின்வரலாறுகளும், இன்னும் அத்தலத்தின் பல வரலாறுகளு மான எல்லாவற்றையும், வரன்முறையேவிரித்தும், விளக்கியும், விளம்பி யருளவேண்டுமென விண்ணப்பஞ் செய்து வணங்கி அஞ்சலித்து நின்றனள்

அதுகேட்டு இறையனார் திருப்புன்முறுவல் செய்து இறைவியே! ஒருமுறை கேட்டாலே முத்தித்திருவை முன்னளிப்பதாயும், முழுத்தூய்மை யுடையதாயும், மறைப்பொருளாயும், கைலையைக் கையில் தருவதாயும், மெய்ஞ்ஞானத்தை விரைந்தளிப்பதாயும், உளத்தை ஒருப்படுத்துவதாயும் உள்ளது இத்தலமே. இன்னும் இது மூவுலகத்துங் கிடைத்தற்கரிது. இதன் பெயரைச் சொல்

வார்களும், கேட்பார்களும் இக்கலியில் நிரம்ப அறிவுடையராவா ர்கள். இத்தகைய சண்பகவன வரலாற்றை மாதே! நீகேட்ட வண்ணம் முறையே விரித்தும் விளக்கியுங் கூறுகின்றேன் கேட் பாயாக.

முன்னொரு நாள் சிவத்தொண்டர்களில் முதன்மையாகிய நந் தீசன் அறவடிவாகிய காமதேனுவின் அருமை மகவாகப் பிறந்து, சிவன்பால் அன்புபூண்டு கைலையிற் கலந்து இறைவனையெழில் பெறப்பூசித்துத் தேவவாண்டாயிரமாக அருந்தவமியற்றுநின்ற னன். அதற்கு அவர்மகிழ்வடைந்து அவன்முன்தோன்றி அரிய காட்சியளித்து என்னையெண்ணி இத்துணையும்இவ்வரிய தவமியற் றுவானேன்? நினக்குவேண்டியவையாவை? கேட்க, என்று கூறி யருளினர். அதுகேட்ட நந்தீசன் நான்குமுறை நலமாவலம்புரி ந்து அடியற்ற மரம்போல் விழுந்து வணங்கி வேண்டுவானாயினன்.

என்னுயிர்த்தலைவ! யான் அழிவுடைய வரங்கள் எவையும் வேண்டேன். அடியேன் கேட்கத்தக்கன; நாயேன் நினது திரு முன்னே பொற்பிரம்பேந்திப் புனிதனாய் நிற்றல் வேண்டும். எத் தலங்களிலும் தரிசிக்க வருமெல்லோரும் நின் முன் என்னைத்தரி சித்து, உன்னைப் பார்க்குமிடத்து என்பின் நின்றே என்விதை பிடித்துக் கொம்பின் இடைவழியே உன்னைப்பார்த்து எது? எது? வேண்டினரோ, அதை யதை அவர்கள் அனைவர்களுக்கும் தேவரீர் தடையின்றி அளித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தனன்.

அவ்வாறு விண்ணப்பஞ்செய்த நந்தீசனை எம்பெருமான் கருணைநோக்களித்து, ஏற்றிற்கேந்தால்! இவ்வரன்கள் முற்றும் நீகேட்டபடியே இவ்விடம்விட்டு மற்றொருதலத்தில்தருகின்றேன் அவைமுற்றும் பெறுக வென்று அருளினர்.

அதுகேட்ட நந்தீசன் மீண்டும் வணங்கி வலஞ்செய்து துதி த்து அஞ்சலித்து அகங்கையராய், சங்கர! கௌரீச! அத்தலந்தா னெதுவாம்? அதை என்மீது தண்ணளிசெய்து திருவாய்மலர்ந்த ருள்க வென்று விண்ணப்பித்துக்கொண்டனன். சிவபிரான் அன் பனே, பூதலத்திலே தண்டகாரணியத்தின் நடுவிலே காவிரியின்

மதநகல கூப்பிடு தூரத்திலே சண்பகவனமென்று ஒன்றுள்ளது. அத்தலத்தில், காற்று, நீர், இலை, பழுத்தசருகு. இவைகளையுண்ப வர்களாய்த் தவஞ்செய்துகொண்டு அளவிலார் அமர்ந்துள்ளனர். அத்தலம்போந்து யான் செய்யவேண்டுவன பலவுள. அப்படியாக இதுவமயம் இவ்வரத்தை இங்ஙனமே தந்தால் என்கொள்கைக்கு எதிராகுமே. என்செய்வேன்! அன்றியும் ஒருகாரியத்தை முன்னிட்ட ஒருவன் வேறு முயல்வானாயின் அக்காரியம் பயன்படாது பழியுமாம். அக்காரியத்தைத் தருவானும், பெறுவானுமான இருவரும் இருள் நரகினையெய்துவார்கள். இதுதான் மறையின்றுணிபு மென்றுணர்க.

இதனால் அத்தலஞ்சென்று முன்னே முயன்றவர்களுக்குப் பயன்றந்து பின்னர் அத்தலத்திலே நினக்கும் வேண்டுவன அளித்தருளுவமன். ஆதலால் எனக்கு முன்னரே ஆண்டு எய்துக வென்று அருளிப்போவாராயினர். அவ்விறைவனைப் பணிந்து பிரியாவிடை பெற்ற நந்தீசன் சின்னாளில் அப்பெருமான் அருள்வழியே வந்து சண்பகவனஞ்சார்ந்தனன் அவணிருக்கின்றமுனிவர்களனைவரையுங் கண்ணுற்று வணங்கி மகிழ்ந்து தன்னிலும் பேரன்பர்களாய்ப் பெரிதும் அவர்கள் திகழ்வதை வியந்து அத்தலத்திலேயே அவர்களைப் போலவேயருந்தவத்திலமர்ந்தனன்.

சின்னாட்சென்றபின்னர்ச்சிவபெருமான் பன்னிறக்கொடியும் நவமணியிழைத்த பொன்னிறவணியும், கூவிரமும், மாலைகளும் வெண்சாமரமும்,பொற்குடைகளும், புட்பங்களுமாகிய இவற்றாலலங்கரிக்கப்பட்ட வெண்குதிரை பிணைத்தபொற்றேரின்மீது மணிமுடி, மகரி முதலிய அணிகளணிந்து எழுந்தருளினர். பேரிகை, தண்ணுமை முதலிய பதினெண் இசைக்கருவிகளும், ஒலித்தன. எஞ்ஞான்றும் இனிய அன்பர்களான இருடிகள், கணங்கள் முதலிய எவர்களுந் துதி செய்யப் புரட்டாசித் தேய்பிறையின் இறுதி நாளில்,மாலைக்காலத்தில், மீனஇலக்கினத்தினிறுதியில், பிரதோஷ காலத்தில், இரேவதிநாட் கடைசியில் எம்பெருமானார் சண்பக வனத்து வந்து உவந்து தவஞ்செய்து கொண்டிருந்த அவ்வன்பர்களுக்குக் காட்சி கொடுத்தருளினர்.

அப்பெருமானைத் தேவர், மனிதர், முனிவர், இருடிகள் முதலானவர்கள் எல்லோரு மின்புறக்கண்டு இன்பக் கண்ணீர்

தமது மெய்யெலாம் இழிய இருகைகளுந் தலைமேலேற மயிர் சிலிர்ப்ப மகிழ்ந்து வலஞ்செய்து வணங்கித் துதிகள் சொல்லுவா ராயினர்.

மாயையா லுலகந் தோற்றமு மிறுவும் மகிழ்ந்தளி
செய்கையும் வாய்ந்த நல் லெழிலோய்
ஆய நான்மறையு மாங்கத னுறுப்பு
மானவெம் பெருமா னுதா வில்லார்க்
கேயநல் லுறவோ யெண்ணரும் விண்ணோர்க்
கியன்றநற் றலைவா வெண்ணிய மேன்மை
தோயவல் லாண்மைய கூற்றதன் கூற்றே
தூயபொன் னிறத்தாய் சுடரடி தொழுகோம்.
மலையின் மேனின்றும் மலைமகண் மணந்தோய்
மாரனை விழித்துப் பொடித்த பினாகி
மலைவினல் லறிவாய் மன்னிய வமுதாய்
வந்தருள் வள்ளால் வடிவொன்று மில்லாய்
நிலைதரு வறிவார்க் கினியநற் பயனே
நிகழ்தரு குற்ற முடையரைக் கொல்லை
தலைவநீ யாருஞ் சார்தரற் கரியாய்
தணிவினற் குணக்கடல் சார்ந்தடி தொழுகோம்.

என்று வணங்கி நின்றனர். அதுகண் டருளிய அம்மையப்பனு வூார் மேகவொலி போன்று முனிவர்காள்! நீவிர் இவ்வாறு அருந் தவம்புரிவ தென்னை? உங்களுக்கு வேண்டுவன அளிக்கவே விருப்பி ஈங்கு வந்தனம் விரைந்து கூறுக வென்றருளினர்.

அதற்கு அகமகிழ்ந்து முனிவர்களனைவரும் ஈசனே! எஞ் ஞான்றும் நின்னையேயறியும் அழியா அறிவையும், நின்திருவடிக் கமலங்களையே நினைந்து நினைந் துருகும் அன்பையும், நின்னுருவ வீடு பேற்றையும் அளித்தருளல் வேண்டுமென்று விண்ணப் பஞ்செய்திரந்து வரங்கிடந்தனர். அப்போதே எம்பெருமானும் அவர்கள்பால் அருள் நோக்கஞ்செய்து தனது சூலத்தை யெடு த்து ஊன்றியிடப் பிலத்தினின்றும் பெருகி மேலெழுந்த கங்கை யை அவர்களுக் கறிவித்து அதற்குச் சூலதீர்த்தமெனப் பெயர்

தந்து இதனில்எல்லீரும் முழ்கினீராயின் மெய்ஞ்ஞானமும், அதனால் மெய்யன்பும் அதனால் வீடுபேறும், பெறுவீர்களென்று, அறைந்தருளி மறைந்தனர். அம் முனிவர்களெல்லோரும் நம் பெருமான் அருளிய அப்பொழுதே அப்புனித நீரில் பரமனருளை நினைந்து படிந்து ஐந்தெழுத் தோதி மெய்ஞ்ஞானமும், மெய்யன்புப் பெற்றுப் பன்னாளிருந்து பரமனுருவும பெற்றின்புற்றனர். இதைக்கேட்டவர், சொன்னவர், இதற்குதவிசெய்தவர் யாவரும் இருமையும், இன்பமெய்தி இறைவனுருவையும் பெற்றின்புறுவர்.

திருச்சிற்றம்பலம்.

சூலதீர்த்த வரலாறுரைத்த படலம் முற்றிற்று.



## (3-வது) நந்தீசன் வரம்பெற்ற படலம்.

நலந்தருவழியாய் முந்தி நந்தீசன் தவஞ்செய்து வரம்பெற்ற வரலாற்றை முதலில் உனக்கு மொழிகின்றேன் உமைமங்காய்! கேட்பாயாக வென்று இறைவனார் மொழிந்தருளத் திருவுளம் பற்றினனர்.

சண்பகவனத்தில நந்தீசன் இறைவன் சொன்னவாறே வந்தருந்தவம் புரிந்தனன். அவ்விறைவன் அவர்க்கு முன்தோன்றி காட்சி கொடுக்க முன்கேட்ட வரங்களனைத்தும் வரன் முறையாகக் கேட்டனன். அவ்வாறே அதுமுதல் நாகேசர் திரு முன்னிலையிலேயே பொற்பிரம்பேந்தி நின்று முன்வரும் தேவர், முனிவர், மக்கள் முதலியவர்கள போக்குவரவால் நெருக்குகின்றவர்களை அமைதியாக்கி யதிகாரஞ்செய்யும் அகம்படித் தொண்டை எஞ்ஞான்றும் அடைக. திருவிழாக் காலத்திலெனக்கு முன்செல்லுக. என்னைக் கண்ணுறுவா ரெல்லாருள்ளும் நின் பின்னின்று நினது கொம்பினிடை வழியாகக் கண்ணுற்றுக் களிக்காதவர்களுக்கு யான் சிறிதும் அருள்செய்யாதவனாவேன். இது உண்மை. அதற்கேதுவாக நின் கொம்பின் நடுவண் வேதம், ஆகமம், மந்திரம், புராணம், ஸ்மிருதி முதலியவைகளும், பல கடவுளர்களும் உண்மை வடிவத்துடனேயே நிலையுதல் கொள்ளுகவென்றும் வரந்தந்தனன்.

அதுவுமன்றி என் அணியான ஊர்திகளுள் நீ சிறந்த ஊர்தி யாகுக. எங்ஙனமென்றால் அரவனுக கன்னப் பறவை போல வும், திருமாலுக்குத் திகழ் புள்ளரசுபோலவும் ஆகுக். அவர்களை யொப்ப நீயும் என் கொடியிலும் உயர்த்திடப்பெறுக. இவ்வரத் தால் யாரும் என்னைப் பூசிக்குங் காலையில் உன்னையும் பூசிக்க வேண்டும். இவ்வரமுற்றும் இத்தலம்போல் வீன் எல்லாத் தலங் களிலும் என் முன்னுகவே நீயிருந்து இப்பூமி உள்ள அளவும், இருசுடர்கள் உள்ள அளவும் பெற்றின்புறுக. அங்ஙனமாயினும் இத்தலத்தில்மட்டும் நந்தியே! என்னை மிகச்சிறப்பாகப் பூசித்திடுக. இவ்வரமே ஒவ்வொரு கற்பத்திலும், உனக்குத் தந்தனனென்று மிறைவனுர் திருவாய் மலர்ந்தருளினர். பின்னர் அதனைக் கே ட்ட நந்தீசன் சிவபிரானை வலஞ்செய்து வணங்கித் துதித்து விடைபெற்றுக்கொண்டு சூலப்புனித நீரிற் புக்கு மூழ்கித் தூய ராய்த் திருநீறு கண்டிபுனைந்து ஐந்தெழுத்தோதிச் சிவபிரானை யே சிந்தித்து அறுகு, கூவிளம், முழுவெள்ளரிசி, சந்தனம், நறு ம்புகை, திருவிளக்கு, பால், ஐந்தமுது, மணங்கமழுமெண்ணெய், சண்பக முதலிய பூமாலைகள், பல பூக்கள், நெய்விளக்கு, திருவ முது, கண்ணுடி, வெண்சாமரம், ஆடை, மேற்கட்டி, பழம், வெற் றிலை, பாக்கு, பதினெண் இசைக்கருவிகள், இருக்கு, தோத்திரம் நிருத்தம் ஆகிய இவற்றால் அவ்விறைவனைக் காமிக ஆகமப்படி யே காண்பார் இன்புற அன்புடன் வழிபட்டு வலமும் வணக்க முஞ்செய்து, அன்று முதல் சிவபிரான் கட்டளைப்படியே திருத் தொண்டை ஏற்றனன். சிலநாட் சென்றபின்னர் அமரத் தச்சனை அழைத்து உட்கோயிலும், கோபுரம், நான்கு ஏழுஆவரணமாகிய மதிற்சுற்றுகள், அவற்றுள்சுற்றுக்கடவுளர்கோயில்கள், பூந்தோட் டம், உய்யானவனம், சாளரங்கள் அட்டிற்சாலை முதலிய பலசாலை கள், பலமண்டபங்கள், மணித்தோரணங்கள், மணிப்படிக்கட்டு கள்முதலிய வாகப்புறக்கோயிலும் அமைத்து, வாகனம் அபிஷேக வட்டில்முதலிய கலங்களும், கொடை, வெண்சாமரம் கொடிமுத லிய இடிபிடிகளும், கொடித்தூணும், ஆகியவெல்லாமுஞ் செய் வித்து இவ்வாறு இறைவன் திருக்கோயில் முற்றும் அணிவகுப்பு அமைவித்தனர். எப்பொழுது மிறைவனைத் தரிசிக்க அவன்திரு முன்னே தன்னிடமாகிய நந்திமண்டபமு மியற்றுவித்தனர். சூல தீர்த்தத்திற்குப்படிக்கட்டுகள் முதலிய பண்புறச்செய்வித்து அம் மையார்க்கும் அவ்வாறேஆலயம் அமைவித்தனர். இருவருக்கும்

மாபெருந்தேர்கள் இய்ற்றிவித்தனர். திருவிழாச்செய்ய வைகாசித் திங்கள் சுக்கிலபக்கம் புனர்பூச நட்சத்திரத்தில் கொடியேற்றஞ் செய்து ஒன்பது நாட்கள் விழாநடத்திச் சுவாதி நட்சத்திரத்தில் தேர்த்திருநாள் கொண்டாடிவிசாகங்கூடிய பௌர்ணமையில் சூல தீர்த்தத்தில் திருவிழா முடிவாக நீராடல் நிகழ்த்தித் திருவிழாக் காணவந்தவர்கள் அனைவர்களுக்கும் அமுது முதலிய நன்றாற்றி அன்புடன் தனதுபணிகளெல்லாம் அசசிவபிரானை ஏற்றுக் கொள்ள விண்ணப்பித்து நித்தியமாகிய நாட்பூசையும் செய்துவந் தனர். இறைவன் இனிய கட்டளையைத்தாங்கி, இப்போதும் இறை வன் திருமுன்னே இருக்கின்றார் இதைக் கேட்டவர் சொன்ன வர் நினைத்த பலனை யெய்தி இறைவன் திருவடிக்கன்பராவார். இஃதுண்மை.

திருச்சிற்றம்பலம்

---

(௩-வது நந்திவரம் பெற்ற படலம் முற்றிற்று.)



## (௪-வது) மூத்தபிள்ளையார் வந்து வரம் பெற்ற படலம்.

தேனார்குழலாய்! நினது மூத்தபிள்ளையின் வரவைஉனக்குக் கூறுகின்றேன்; கேட்பாயாக வென்று, கூறுவான் தொடங்கினர். சிலகாலஞ்சென்றபின்னர் மூத்தபிள்ளையார் பேரெலி வாகனத்தில் ஏறிச்சென்று யானிருக்குமிடத்தினைத்தேடிச் சண்பகவனம்வந்து இந்நகரின் அழகைக் கண்டனர். இதில் சண்பகம், மகிழ், பனை, பசிலைமரம், புன்னாகம், கிருதமாலம், கேசரம், சுரபுன்னை, உலோ த்சரம், திந்துகம, வில்வம், குந்தம், குரவம், கடம்பம், திலகம், ஆமலகம், வேம்பு, கோவிதாரம், பாடலம், அசோகம், கமுகு, மல்லிகை, மாலதி, சாதி, யூதிகை முதலிய கொடிசெடி கூடிய பூமரச் செறிவுகளினால் மணமும், குளிர்ச்சியும் மலிய இளந்தென் றலினிதே யுலாவத்தேன் தாரையொத்த குயிலிசை இசைய மயிர் லாட மனமகிழ்ந்தனன். திருப்பருப்பதம், திருவாரூர், திருக்கோ கர்ணம், திருவண்ணாமலை, சீகாழி, காசி, மதுரை, சந்தனவனம்,

திருப்பாதிரிப்புலியூர், திருக்கழுக்குன்றம்,* திருவானைக்கா முதலிய புண்ணிய தலங்கள், புண்ணிய தீர்த்தங்கள் முதலாய இடங்களினின்றும் வந்து நீரையும், பழுத்துதிர்ந்த சருகையும் உண்டு ஒருமைப்பட்டமனத்துடன் இருக்கின்றவராகியமாமுனிவர்களும் பிரமா, இந்திரன், சந்திரன் முதலிய தேவர்களுங் கந்தர்வர், கின்னரர், சித்தர், சாத்தியர், இயக்கர், வசுக்கள், மருத்துவர் முதலிய கணங்களும் ஆகியஎல்லோருஞ்சூலதீர்த்தக்கரையில் இறைவனைப் பூசித்ததையும் அப்பிள்ளையார் கண்டுகளித்து அக்கடவுளைத் தலையாலிறைஞ்சி வலம்வந்து நந்திக்கொம்பினிடைவழியே கண்ணுற்றுப்புகழ்ந்து துதிகூறுவாராயினர்.

எண்ணிய தளிப்பாய் எந்தப் பவத்தையு மிகப்பாய் செல்வ
வண்ணலே பொறுமை கோப மளவிய வடிவ மானாய்
பண்ணிய குறற மில்லாய் பரவவெஞ் ஞான்று முள்ளாய
கண்ணுதன் மதிமு டித்தோய் கன்மகள் பாக போற்றி.

வேறு.

அருப்போடு நினைத்திடவே யண்ணிடுவா
யன்பர்கட் கன்பா நண்பா
பொருப்பான கைலையாய் புகலெதற்கு
மிறையானாய் புரியு மின்ப
வொருப்பட்ட மறையாலு முணராம
லதனிலய முருவ மானோய்
விருப்பறிவு தொழில்வடிவாய் வியன்சாம
வடிவிசையின் விருப்பாய் போற்றி.

சிறந்தவா சிறந்தோர்தந் நிலையமே
திகழ்மாமை சிறந்தா யெல்லா
மிறந்திடவு மிறவாதா யெம்மிறைவா
வெழில்வடிவா யிடையூ றில்லாய்
நிறந்திகழுங் கல்விதன துருவானே
யதனிடமாய் நிகழ்வாய் நாத
வறந்திகழ யாருமுனை வணங்கநின்றாய்
வணங்குவர்தம் மண்ணால் போற்றி.

நாதமே யந்நாத வடிவமே
யதன்விருப்பா யறமாய் நின்றாய்
போதநீ தொழில்விருப்பா புகல்முன்னும்
பின்னைப் போந்தாய் பாகங்

காதமிகு வீரனே நல்வீர
வீராவன் கால காலா
போர்தமிகு மதனழித்தா யியற்கையினு
மியற்கையாய் போற்றி போற்றி.

இவ்வாறு தோத்திரஞ் செய்து இன்பத்தால் தன் செயலற்று நிற்கின்ற மூத்தபிள்ளையைச் சிவபிரான் நிறைந்த அகமலர்ச்சியோடு தழுவியெடுத்து மடியில் வைத்து இன்பவிழிநீர் ஒழியக் காரொலிபோன்ற திருவாக்கால் ஆனைமுகனே! மூத்தபிள்ளாய்! நினது நல்வரவு நோக்கி நெடிது மகிழ்ந்தேன். பூசையாலும், துதியாலும், பேரின்பம் பெற்றனன் நின் வேண்டுகோள் என்னை? நீ யெனக்குப் பிள்ளையாயினை! அன்றியும் என் அன்பரிற் சிறந்தாய்! நீளிடைநின்றும் போந்தாய்! நினக்கு வேண்டுவனயாவும் அளிக்க நின்றனன்; கேட்கவென்று திருவாய்மலர்ந்தருளினார். எம்பெருமானைக் கண்டு இன்புற்று மெய்யெல்லாம் புளகம்போர்ப்பப் பின்னரும் நான்கு முறை வலம்வந்து புகழ்ந்து புனிதநீர் தாங்கிய புனிதா! எந்தாய்! அன்பர் காவல! அடியேன் கோடிசங்கரத் தலத்தைக் குறித்துச் சென்று ஆங்கிருந்த அன்பர்களுக்குரிய வேட்கையை முடித்துத் திருக்கைலை சென்றேன். ஆண்டு எந்தையீர்! என்றாயுடன் அன்பர்களனைவர்க்கும் அருள் செய்தற் பொருட்டுத் தண்டகாரணியத்தின் நடுவில் இத்தலத்தில் என்றாயுடன் தொண்டர் சூழ வந்து எழுந்தருளியிருப்பதாக மாணிபத்திரனால் மறுவறத் தெரிந்து இவண் வந்து உமது திருவடித்தலத்தை யெய்தினன். இறைவீர! நுமது திருவடிக்காட்சியாலெய்தும் இன்பமேயன்றி யான் இனி வேண்டத்தக்கது யாதுளது?

அங்ஙனமாயினும் அத்தனுனீர்! நுமதிடத்தில் என தன்படியார் பொருட்டு அரிய வரம் பெற எனக்கு அவாவும் மீதூராநின்றது. அதையும் இப்பொழுதே வேண்டாநின்றேன். இப்புனிதமான தலத்தில் நுமக்கும், எனக்கும், உரிய வழிபாடு நிமித்தம் மக்களில் உயர்ந்தோர், முனிவர், தேவர் முதலிய எவர்கள் வரினும், அனைவர்களும் அடியேனைக் கண்ணுற்று விடைபெற்ற பின்னரே அன்னையிற் சிறந்த நும்மைக்

கண்டு களிப்பாராக. இல்லையாயின் இடையூறுருக. அடியனை முதலில் எதற்குஞ் சான்ருக அடுத்துக் காண்பாராயின் அவர் எண்ணியன எய்துவாராக. அவையும் ஒருமுறையே வணங்கின வளவிலே அடைவாராகுக. அன்றியும் என்முன் நெய்சேர்த்த வெல்லமாவின் நெய்விளக்கு ஒன்ருயினும், ஒளிரச்செய்து பொற் காணிக்கையுடன் ஒரு வெற்றிலைப்பாக்கேனும், என்முன்வைத்து வணங்குவாரேல் அவர் வேட்கையை விரைந்து முடிப்பேனுகுக. இவையெல்லாம் இதுமுதலே நிகழ்வனவாகுக. எவரும் உமது வழிபாடனைத்தும் இயற்றின பின்னரும், என்பால் விடைபெற்றே போதல் வேண்டும்.

இன்னும் எந்தையீர்! எல்லாத் திருவிழாக் காலங்களிலும், நாள்வழிபாட்டிலும் திருமணம், யானையேற்றம், குதிரையேற்றம், படைக்கலப் பயிற்சி, நெல்வாங்கல் விற்றல் முதலான வாணிபம், ஊடல், யாகம் முதலிய எல்லாவற்றினுந் தோற்றுவாயில் என்னைப் பூசிப்பவர்களுக்கு அவையனைத்தும் இடையூறின்றி இனிது முடிப்பேனுகுக. ஆகையால் எப்போதுமே என்னை முன்னிட்டே உமக்கு வழிபாடும், எப்போதும் என்னை முன்னிட்டே வெளிப்போந்தருளலும், வேண்டும். இரக்க நிலையீர்! "இவ்வரங்கள் அனைத்தும் ஈந்தருள்க" வென்று இரந்தனர். இறைவனும், அகமகிழ்ச்சியோடு அப்பிள்ளையார்க்குக் கேட்டவை முற்றும் அளித்தருளினன். அவ்வரங்கள் முற்றும் பெற்ற ஆனைமுகராகிய சான்று பிள்ளையார் சூலத்திருக்குளநீரில் திளைத்தாடித் திருநீறிட்டுத்திருக்கண் மணிபூண்டு (அக்ஷதை) முழுவெள்ளரிசி முதலிய வழிபாட்டிற்குரிய வளங்களைக் கைக்கொண்டு புரட்டாசித் திங்கள் சுக்கிலபக்கச் சதுர்த்தியிலே தந்தையைத் தாமே பூசிப்பாராயினர். தொடக்கத்தில் அப்பெருமான் கட்டளையை முன்னிட்டுத்தன்னைப்பூசித்த பின்னரே அப்பெருமானை அன்புடன் வழிபாடியற்றினர். அதனு லன்றுமுதல் தந்தையாரருளினுலே அம்மூத்தபிள்ளையார்க்குச் "சான்றுபிள்ளையா" ரென்று காரணக் குறியுங்கலந்த தாயிற்று.

இவ்வாறே இறைவனையும், அப்பிள்ளையாரையும், இனிதாகப் பூசிப்பவர்கள் எல்லா நலங்களையும் எளிதாக எய்துவர். இன்னும் இச்சான்று பிள்ளையாரை எச்செயல்களினும் எண்ணுவாரே

வரும் எண்ணங்களை யினிதே யெய்தப் பெறுகின்றார்கள். இத னால் இத்தலத்தில் இம்மூத்த பிள்ளையாரும், நந்தி யெம்பெருமா னும், சிவ வழிபாட்டின் பயனைக் கொடுக்க முன்வந்துள்ளா ரென்று மூன்றுலகத்தும் புகழ்பெற்றனர்கள். இதனால் இத்த லத்தில் வந்தனை, வழிபாடு இயற்றுபவர்கள் முதல், முடிவு இரண் டிடத்துஞ் சான்றோனைக் கடவுளிடம் விடைபெறத் தக்கவ ராவார் கள். இதைச்சொல்லுவார் கேட்பார் எல்லா நலமும் எய்தி இன் புறுவர்.

திருச்சிற்றம்பலம்.

4-வது மூத்தபிள்ளையார் வந்து வரம்பெற்றபடலம் முற்றிற்று.

---

## 5-வது மலைமகள் தவம்புரிபடலம்.

திருச்சிற்றம்பலம்.

---

முன்னொரு காலத்திலே பிருங்கிமா முனியென்பவர், நந்தி பருப்பதத்தில் பதினாயிரமாண்டு உமையை விடுத்து இறை வனையே தியானித்து என்றுஞ் செய்தற்கரிய அருந்தவத்தைச் செய்தனர். இவ்வாறு நிகழ்வதைக்கண்டு இறைவனுடன் இறைவி சொற்போராடினள். அதன்பொருட்டு அப்பெருமானை அம்மை விட்டுப் பிரிந்து இறைவன் திருவுருவின் நேர் பாதியை எங்ஙன மாயினும், எய்தவேண்டினள்; அதற்காக மலைமகள் திருக்கழுக் குன்றென வழங்கும் வேதமலையை அடைந்து, வேததீர்த்தத் தில் மூழ்கி ஆயிரமாண் டருந்தவம் புரிந்தனள்.

அக்காலத்தில் கோடிசங்கரத் தானம், மூகாம்பிகைமலை, காஞ்சி, காமகிரி, திருப்புள்ளமங்கை, திருமங்கலக்குடி, சுவாமி மலை, பிருதுத்தலம், பூவனம், சந்தனவனம், சுவேதாரணியம், விளையாட்டுமலை, நீர்மலை, யானைமலை, பொன்னூர், திருப்பாற் றுறை, கொடுரமலை, வீரவனம், பிரமகிரி, வழுவூர், கிருபாபுரி, மாயூரம், கிளிக்குடி, ஆலங்காடு, கோகர்னம், கோபிலம், காகாசுர புரி, சிவபுரி, திருநெல்வேலி, மதுரை, திருக்குவளை, சிவாலயம், கருசம், கபிலவனம், சங்குபுரி, அரித்துவாரமங்கலம், முனிநகர், ததியோதனபுரம், பெருஞ்சேரி, திருச்சேய்ஞலூர், இந்திரபுரம், குரக்குநகர், குருத்தலம், திருவிற்குடி, வித்தியாரணியம், சித்திர வனம், தேவசோதிபுரம், சந்திரத்தானம், திருவையாறு, திருத்

தெங்கூர், கோட்டத்தானம், அரசூர், திருச்சத்திமுற்றம், பட்டீச்சுரம், நமச்சிவாயபுரம், பராசரவனம், கூத்தனூர், பசுபதீச்சுரம், திருவாளொளிப்புற்றூர், திருப்பனந்தாள், பந்தணை நல்லூர், சானுபதம், தேரழுந்தூர், திருபங்கிபுரம், பிரணவபுரம், தில்லைவனம், விருத்தகிரி, கங்கைகொண்ட சோழபுரம், தருமபுரம், திருவேட்களம், சித்தர்காடு, திருத்தலைக்காடு, அத்தியூர், திருமுல்லைவாயில், அம்மாபேட்டை, வீரஆடகம், குற்றாலம், திருவாவடுதுறை, கஞ்சனூர், திருவிடைமருதூர், முதலிய தலங்கள் சென்று ஆங்காங்கருந்தவம் புரிந்து தன் எண்ணம் முடிவு பெறாமை கண்டு திருவிடைமருதூரிற்கு நிருதித் திசையிலும், திருக்குடந்தைக்குக் கீழ்த்திசையிலும், திருநீலக்குடிக்கு மேற்கிலும், அரிசொல் நதிக்கு வடக்கிலும், ஆகிய சண்பகவனம் வந்து மனவொழிவடைந்து இனியான் எங்குச்செல்வேன்? இத்தலத்திலேயே மேலான தவத்தைச்செய்து இறைவன் உருவப் பாதியை யெய்தாது போனால் இவ்விடத்திலேயே இவ்வுருவையும் ஒழிப்பேனென்று எண்ணித் துணிந்துகொண்டு தவம் புரியத் தொடங்கினாள்.

இரவில் சூலத் திருக்குளத்தில் தூயநீராடித் திருநீறு குங்குமமணிந்து வலஞ்செய்து சங்கரனாகிய நாகேசருக்கு வடபாகத்தில் மலைமுலையாளுக்குத் தெற்கிற் சான்று பிள்ளையாருக்குச் சிறிது மேல்பாகத்தில் ஆறுயிரமாண்டு மருந்தவம் புரிந்து அன்று பிருங்கிக் கருள்புரிந்த பெருமான் அப்பிருங்கியுடன் தேடி எல்லாந் தெரிந்தனரே யாயினும் நாரதர் விண்ணப்பஞ் செய்ய அறிந்து அப் பெருமாட்டியை அழைத்திடத் திருவுளங்கொண்டு தண்டகாரணியத்தின் நடுவண் ஐந்து நெருப்பிடையில் யாரும் வியக்கத் தக்க அருந்தவப் படிவத்தோடு தூயளாய் அரிய தவமியற்றி நின்ற அம்மைக் கிரங்கி யருளி ஆங்கே தனது கூறுந் தான்மொழிந்தருளிய மறை ஆகம நூல்களின் வடிவுமான சண்பகமரத்தை நிழல் செய்ய விடுத்துப் புரட்டாசித் திங்களில், இறுதிநாளில், நந்திப்பெருமானுக்குத் தோற்றியருள்செய்த அப்பொழுதிலே அப்பெருமாட்டி முன்னாகத்தோன்றி யருளினர். அவ்வாறு அருந்தவம் புரிந்த அம்மையார் அக்காட்சியைக்கண்டு களித்துத் துதிசெய்வா ராயினர்.

இன்பினை யளிப்பாய் உலகினுக் கிறைவா
இரண்டற நின்றவா வாதி
யன்புடன் வந்து தஞ்சமென் பவர்தம்
அயர்வினை யகற்றுவா யருவாய்
மன்புகழ் உருவ மில்லவ வெறுப்பும்
வருவிருப் பதுமிலா யெவையுந்
தன்பக லெனவலராய் இன்புரு வானாய்
தாவடை யூர்பவ போற்றி.

அறவடி வானாய் அவ்வறம் பற்று
மண்ணலே தொன்மையாய் நின்றாய்
திறமுடை அணுவாய் அவ்வணுக் கணுவாய்த்
திரிபுர மெரித்தவா தேவா
நிறைமுடை உலகந் தாமம்போல் உருவில்
நிகழ்வுற நின்றனை யென்றன்
மறமல மெரிப்போய் வைரநல் வடிவா
மகிழமூன் றியற்றுவாய் போற்றி.

அளகையன் றோழ விடைக்கொடி
யுடையாய் அனவடி வானவென் றுதா
வளமுறு குடும்பக்காட்டினை யெரிப்பாய்
மாரனை யெரித்திடு மறையோய்
அளவுறு மறிஞர்க் கபயஞ்செய் பவனே
யங்கிங்கு நிறைந்தவ மேலோய்
களமுறு கால வுருவனே யந்தக்
காலனிற் காலனே போற்றி.

காலமே யறியாக் கண்ணுத லெங்கும்
கண்செவி யுடையமுக் கண்ணா
காலமேன் மண்ணைச் சமைப்பவ மாயை
கருதுறத் தோற்றுத லுள்ளாய்
ஏலவேயுன்றன் கால்விரல் நுனியா
லெதனையும் நடுங்குறச் செய்வாய்
மாலவன் முதலோர் மகிழ்வுறும் பயனை
வழங்குவாய் வணக்கம் பல் வணக்கம்.

எனறு கூறி இடையிடையே வணங்கி நான்குமுறை நல்வலஞ் செய்து கண்ணுற்று மகிழ்ந்து நின்ற மலைமகளைக் கருணை நோக் களித்த கடவுள், மலைமாதே! நின்தவத்தாலும், துதியாலும், நீள மகிழ்ந்தனம். நினக்கு வேண்டுவன, அனைத்தும் அளித்தருள

வே இப்போது ஈங்கு வந்தனம். இதுபோலவே ஒவ்வொரு கற்பத்திலுங் கருதினவரங்களை இத்தலத்திலேயே எய்தப்பெற்றாய். இப்போழ்தும் அவ்வாறே எய்திடுகவென்றருளினர். அஃது அறிந்த அம்மையார் மனமகிழ்ந்து மீட்டும் வணங்கி இருகைகளையும், எழிலுறக் குவித்து நின்று எண்ணிய வரங்களை இயம்பத் தொடங்குவாராயினர்.

திருச்சிற்றம்பலம்.

5-வது மலைமகள் தவம்புரிபடலம் முற்றிற்று.

---

## 6-வது மலைமகள் வரம்பெறு படலம்.

திருச்சிற்றம்பலம்.

---

தவஞ்செய்து கொண்டிருந்த எம்பெருமாட்டி, நமது இறைவனை சிவபிரானை நோக்கித் தான்குறித்த வரங்களை வேண்டுவாளாயினள் "தலைவனே! நினது திருத்தொண்டரான அன்பர்கள் என்னை விடுத்து உன்னை வேறாக நினைக்காது ஒன்றாக நினைக்கும் வண்ணம் உனது திருமேனியில் அடியேன் ஒரு பாதியாதல் வேண்டும். இனிச் சூலத்திருக்குளத்திற்கும் மலைமுலையாளுக்கும், வடக்கிலே சண்பகமரத்திற்கு ஈசான்யத் திசையிலே எனது தவம் செய்கின்ற இவ்வடிவம் தவவேடத்துடன், கற்ப முடிவளவும் என்று மழியாமல் அன்பர்கள் கண்டு களிக்க நிற்றல் வேண்டும் இனி அதுதான் எனது தனிவடிவமாய் இருத்தல் வேண்டும். அஃது அவ்வாறே யழியாமை பெறவேண்டும் எனதுபேர் "மலைமகள்" எனல் வேண்டும். உன்னருளால் அடியேன் எப்பொழுதும் இத்தலத்திற் சிறப்பாகத் தலைமையுறல் வேண்டும். நின் சண்பக மரத்தடியில் இறைவா! நாகேசன் என்னும் மூலலிங்க வடிவமும், அர்த்த நாரீசவடிவமுமான இரண்டும், என்றும் இருத்தல் வேண்டும். அந்த லிங்கவடிவம் நீல இரத்தினம் போற் கருமையாய் இருத்தல் வேண்டும்" என்று வேண்டி நின்ற அம்மையார்க்கு எம்பெருமான் அனைத்தும் வழங்கி யருளினன். இதனால் அத்தலம் எம்பெருமாட்டியாகிய இறைவியாருக்குரிமை ஆயிற்று. இத்தலத்தில் எம்பிராட்டிக்கு இரண்டு வடிவங்களும், எம்பெருமானுக்கு இரண்டு திருவுருவங்களும், அமைந்தன.

)னடியில் நாகேச்சுரர் சந்நிதியும், அர்த்தநாரீசர் சந்நிதியு மின்னுங் காணப்படுகின்றன. சண்பக மரமானது இறைவன் வடிவாகவுள்ளது. அவன் வடிவமானமையால் அகில உலகத்திலும் புகழ்பெற்றுச் சிறந்தது.

இத்தலம் சிலகாலங்காணப்பட்டும், காணப்படாமலும், இடிதலுற்றும், பின்னர் நன்குதிருத்தப்பட்டும், புதுமையுற்றும், இருந்தாலும் இந்நகர் எக்காலத்தும் இறைவிக்கே தலைமையுள்ளது. இதனால் இறைவனைப்பூசிப்பவர்கள் இத்தலத்து மலைமுலையாளைப் பூசித்த பின்னரே பூசிப்பார்களாக. இல்லையேல் அப்பூசை முற்றுப்பெற்று அவர்களுக்குப் பயன் அளிக்காதென்க. இனித் தீர்த்தத்தில் மூழ்கல், செபம், தபம், சிவபூசை, சிவத்தியானமுதலியன செய்கின்ற காலத்தில் இத்தலத்தின், மலைமுலையாளைத் தியானித்தால் காசி, பிரயாகை, மாயூரம், திருக்குடந்தை, திருக்கேதாரம், குருத்தலம், திருவானைக்கா, முதலியவற்றில் ஓராண்டுஅவற்றைச் செய்தபலனும், அவற்றை மதுரையில் ஒரு திங்களும், காஞ்சியில் அரைத்திங்களுஞ் செய்தபயனும், திருவிடைமருதூர், வேப்பத்தூர், திருக்கோகர்னம், திருவாரூர், இவற்றில் மூன்று நாட்கள் அவற்றைச்செய்தபயனும், சிதம்பரத்தலத்தில் அவற்றை ஒரு நொடிப்பொழுது செய்த பலனும் ஒக்கும். இஃதுறுதியென்க. காஞ்சியில், நூறாண்டு துலாப்புருடதானஞ் செய்த பலனை இவ்வனத்தில் ஒரு சிவலிங்க தானத்தாலும், கோகர்னம், மதுரை, இவற்றில் ஆறுதிங்கள் கன்னிதான பலத்தை இங்கே கணப்பொழுது வசித்தாலும் பெறுவார்.

வேப்பத்தூர், திருவானைக்கா, மதுரை, குருத்தானம், திருக்கழுகுவனம், திருவாலங்காடு இரத்னகிரி, முதலியவற்றில், இரத்தினமலையைத் தானஞ்செய்த பலனை இத்தலத்தில் ஒரு சிவலிங்க தானத்தாலும், கோடி சங்கரத்தானம், விமேசம், பாரதிவனம், சீதளபுரம், பழமலை, முதலியவற்றில் செய்த பூமிதானப் பலனை இங்கு விபூதிதானத்தாலும், அண்ணமலை, வீரகிரி, நாளகூடம், சிவாலயம், முதலியவற்றில் பொற்பசு ஆயிரந் தானஞ் செய்த பலத்தை இங்கு ஒரு கோதானத்தாலும், பருப்பதம், சடாநாதம், பிதிர் முத்தித்தலப், காட்வனங், காளகூடம், மந்தரபருவதம், திருவையாறு, சங்கத்தானம், முதலியவற்றில் ஆயிரம் இரத்

தினப்பசுதானப்பலத்தை இங்கொரு குதிரைதானத்தாலும். பிரமேச்சுரம், பருப்பதம், சத்தகன்னித்தலம், வில்வவனம், திருவெண்காடு, நீலோற்பலவனம், புலியூர், திருவீழிமிழலை, சந்தனவனம், திருப்பழனம், திருச்சாய்க்காடு, திருவாடானை, வெட்டுத்தானம், வேதபுரி, புட்பவனம், பெரும்புலியூர், திலத்தானம், திருநெல்வாயில், கழுகுவனம், பூரணமுத்திபுரம், நரிமுத்தித்தலம், நமச்சிவாயபுரம், காமதேனுபுரம், திருத்தெங்கூர், கழுகுவனம், சித்திபுரம், அத்திபுரம், திருமுல்லைவாயில், பஞ்சாக்கரபுரம், அக்கபாதபுரம், குஞ்சாவதம்சம், குருபுரம், வஸ்திரப் பிராவரணம், மனோதயபுரம், திருவலஞ்சுழி, ஆகியஇவற்றில் கோடிஅந்தணர்க்கு உணவளித்தபலன் இத்தலத்தில் ஒரு அந்தணனுக்கே அளித்த உணவாலும், பெறத்தகுமென்க.

காசியிலே சூரியகிரகண புண்ணிய காலத்திலே பழக்குவியல் தானஞ்செய்த பலன் இதில் ஒரு பூசணிக்காய்த் தானத்தாலும், கங்கைசங்கமத்தில், பன்னிரண்டாண்டு செய்த யாகபலன் நாகேசன் ஒரு நாட்பூசைக்காட்சியாலும்பெறத்தகும். இனி (கிரிகன்னிகை)மலைமகளை, ஒருமுறை தரிசித்தால் யோகீசனுவான். (கிரிகுஜாம்பிகை) மலைமுலையாளை, ஒருமுறை வணக்கஞ்செய்தால்அவன் நினைத்தவைகூடும். (அர்த்தநாரீசர்) மங்கைபாகத்தலைவரை, ஒருமுறை தரிசித்தால் மூன்றுகோடி பிறப்பிற் செய்தபாபம் பிரிந்துவிடும். நாகேசரானமூலத்தானத்தை நாளும்ஆராதிப்பவன் அரனுவான். வேதம், இதிகாசம், முதலிய கலைவடிவான அதன்கொம்பினிடையால் இடபத்தைத் தொட்டுக்கொண்டே நாகேசரைநயந்து பார்ப்பவர், எல்லாக்கலைஞானத்தையும் அடைந்து அவிர் சடைக்கடவுளாவர்.

சண்பகமரத்தினடியில் அடிக்கொரு வணக்கஞ்செய்து வலம்வருபவர், பூமியைக்கோடிவலஞ் செய்தபலன் பெறுவர். சண்பகமரத்தை அங்கவலஞ்செய்தால் அங்கத்தின் எத்துணைத் தூளிகள் அத்துணைப் (பிரமகத்தி) பெரும் பாவமனைத்து மகலாநிற்கும். எந்தச் செல்வமும், அவ்வலம் வந்தவர்களுக்கு வரிசையான் வருமென்க இதனைச் சொல்பவர், கேட்பவர், எந்நலமு மிசைவரென்பதுண்மை.

திருச்சிற்றம்பலம்.

மலைமகள் வரம்பெறு படலம் முற்றிற்று.

## 7-வது இறைவியர் கண்ணாடித் திருவிழா வியற்றிய படலம்.

திருச்சிற்றம்பலம்.

---

மலைக்கொங்கையாளும், தவவடிவத்தினளாகிய மலைமங்கையுமான இருவரும், ஒருவரேயாயினும் வடிவத்தால் வெவ்வேறாக நிற்றலின் இருவரும் ஒருங்கு கூடி நாகநாதர்க்குக் கண்ணாடித் திருவிழா இயற்றக்கருதி இறைவனுடைய திருவுளக் குறிப்பின் படியே புரட்டாசித் திங்களிறுதி நாளில் ஒரு நாட்டிருநாளுக் காக மயனை நினைத்தனர் அஃதறிந்த மயன் விரைந்து வந்து அவ்விருவரையுமடைந்து வணங்கி வலஞ் செய்து அஞ்சலித்து நின்றனன். அது கண்ட அம்மையார் இருவரும் அம்மயனைக் கடைக்கணித்துத் தச்சர் தலைவனே! கண்ணாடித் திருநாளியற்றக் கருத்துடையேமாதலால் அதற்கேற்பச் சித்திரக்காவணம் படிக் கட்டுகளால் ஒளிரவியற்றித் தருகவென்று அவர்கள் கட்டளையிட்டருள அறநெஞ்சினனான மயன் அப்பணியை அஞ்சலித் தேற்றனன்.

மிகவிரைவில் முத்து, பவளம் முதலிய பற்பல மணிகளாலும், பொன்னாலுங் கண்ணாடிகளாலும் வியக்கத்தக்க பதினாயிர மேனிலைகள், பல்கணிகள் படிக்கட்டுகள் முதலியன அமைக்கப்பட்ட பதினாயிரக்கால் மண்டபம், அவற்றின்மேல் பதினாயிரம் மேற்கட்டிகள், மணித்தோரணங்கள், வாழை, கமுகுகள், அவைகள் கட்டப்பெற்ற பதினாயிர மணிமதிற் சுற்றுகள், மணிமன்றங்கள், வட்டமான காட்சிச்சாலைகள், அவற்றில் அன்னம், குயில் முதலிய பறவைகள், யானை, குதிரை, சிங்கம், மான் முதலிய அணிவிலங்கு நிரைகள், மேனிலைச்சாளரங்களிலே கிங்கிணி, வெண்கவரி, கொடிகள், நாற்கால் மண்டபங்கள், ஒன்பதுகால் மண்டபங்கள், ஆயிரக்கால் மண்டபங்கள், பலமண்டப மிமிருங் கொடிகட்டிய கோபுரங்கள், இவைகளில் பூங்கொத்தணி நிரைகள், கமுகுநிரைமாலை நிரைகள், யானைகள், தேர்கள், குதிரைகள், ஆகிய இவைகளால் தனித்தனிப் பலகாற் சுற்றும் பலவலயநிரைகள் மணிமண்டபங்களில் யந்திர ஆலயம், மாணிக்கவிளக்கு ஒளிரவும், பலவகைத்தீர்த்

தங்களில்செந்தாமரைப் பூக்கள் நீர்க்கரைகள் படிக்கட்டுகள் மண்டபங்கள் ஆகிய இவை தோற்றியிடவும், யந்திரக்கண்ணாடிகள் நான்குவீதிகள் மேற்கட்டி, வாழை, கமுகு, தோரணம் முதலியன கட்டப் பெற்ற தெருக்கள், புட்பமண்டபங்கள், பொன், மணி, தாமரை முதலியபூக்கள், விதானம், கொடி முதலியவற்றால் அணிசெய்து சித்திரப்பேரழகு பொலியும் ஐந்து விமானங்கள் ஆகிய இவைகள் முற்றுங் கணப்பொழுதில் செய்து முடித்துப் பெருமாட்டிகளாகிய மலைமுலையாள், மலைமாது, இருவரையுங் கண்ணுற்று வணங்கித்தன் அரும்பெறற்றொண்டை அறிக்கை செய்தனன்.

அது கண்டருளிய அம்மையாரிருவருந் திருவுளமகிழ்ந்து அவனுக்கு விடைகொடுத்து விடுத்து அத்திருநாளுக்கு வேண்டுவன யாவும் ஆராய்ந்து நாகேசராகிய இறைவனாரிடம் விடை பெற்றுத் திருநாள் தொடங்கினர். அவர் திருவிழாக் காட்சிக்குச் சுரர்முதலாயினோர் அவரவர் சுற்றங்களுடன் வர எண்ணினர்

எண்ணவே திருமால், பிரமன், இந்திரன், உருத்திரர், மருத்துவரிருவர், திசைகாப்பாளரெண்மர், திங்கள் முதலியதேவர்கள், இயக்கர், கந்தர்வர், கிம்புருடர், கின்னரர், தானவர், முதலிய அமரகணத்தினர், இருடிகள். முனிவர், ஆகிய எல்லோருந் தத்தம் மனைவியார், புதல்வர் நண்பர், முதலிய அவரவர் சுற்றங்களுடன் சண்பகவனம் வந்து நிரம்பினர்.

அரம்பையர், திலோத்தமை, முதலிய தேவமாதர்கள் வந்தனர். அங்ஙனம் வந்தவர்களில் வேதம், ஆகமமுதலியன கற்றுத் தெளிந்தன்புடையாராய பெரியார்கள் அனைவரும் புனித நீராடித் திருநீறு, கண்மணி முதலிய சிவவேடம் பூண்டு அஞ்சலியங்கையராய், இறைவியரிருவரையுங் கண்ணுற்று வணங்கி இன்புற்றார்கள்.

இனிப்பிரமா முதலியவர்களோடு இறைவியாரிருவருந் திருநாள் காண முயன்று நான்மறைகள், பதினெட்டு வாச்சியங்கள், முழங்கவும், நடனம் நடத்திடவும், அன்பர்கள் இன்புடன் ஆரவாரிக்கவுஞ்சான்று கணபதியிடம் விடைபெற்றுக்கொண்டு நாகே

சருக்கு அபிடேகஞ் செய்யத்தொடங்கினர். ஆயிரம் பாற்குடங்கள், அவற்றின் இருமடங்கு தயிர்க்குடங்கள், நூறு தேன்குடங்கள், ஆயிர நெய்க்குடங்கள். இரண்டாயிரங் கருப்பஞ்சாற்றுக் குடம், நூறு மரக்காற் சர்க்கரை, அளவிலா இளநீர், அளவிலா எலுமிச்சம்பழங்கள், அளவிலாத சந்தனக்குடங்கள், பன்னீர்க் குடங்கள், வாசனைத்தைலங்கள், கந்தப்பொடிகள், ஆகியஇவற்றால் விதிப்படி மகாபிடேகஞ் செய்து, நிரம்ப இடையிடை சாட்டித் திருநீறு, நல்லுடை, கலைவச சாந்து, மாணிக்க மகுடம், மணி மாலை, முதலிய அணிகளாலும், தாமரை, கருநெய்தல் முதலிய பல பூக்களாலும், வில்வமுதலிய பசிலைகளாலும் அணி செய்து நூறு மரக்காற் றயிரன்னம், அவ்வாறே வெள்ளன்னம், உழுந்தன்னம், மிளகன்னம், வெல்லன்னம் முதலிய திருவமுது உழுந்து வடை, சர்க்கரையதிரசம், பலகறிவகைகள், திரட்டுப் பால், இன்னும் பலவித சிற்றுண்டி முதலிய வற்றால் நிவேதித்தனர்.

இப்படியிருக்க இருக்கொடு தோத்திரமியம்பினர் இன்னிசை வீணையர், யாழினர் ஒருபால், துன்னிய பிணைமலர்க்கையினர் ஒருபால், துவள்கையர் ஒருபால், அழுகையர் தொழுகையர் ஒருபால், சென்னியிலஞ்சலிகூப்பினர் ஒருபால், இவ்வாறு அடியவர் குழாங்கள் அன்புடன் திகழாநிற்க நறும்புகையான தூமந தீபம் முதலிய பதினாறு வகையான உபசாரங்களினால் இறையைப்பூசித்தனர். அவ்வாறேசான்றுகணபதியையும் முருகப் பெருமானையும், அர்த்தநாரீசரையும், கிரிகுசாம்பாளையும், சண்டேசரையும், விமானத்திலிருக்கின்ற தெய்வகணங்களையும் பூசித்தனர். (இறைவியிருவரும் பூசிக்கின்றவர்களாயும், பூசிக்கப் பெற்றவர்களாயு மித்தலத்திலிருக்கிறார்களென்ப துணர்க) அதனோடு அன்றிரவில் நாகேசுரப் பெருமானைப் பிராட்டியாரிருவரும் பற்பல மணிகளாலிழைத்தவூஞ்சலில் எழுந்தருளச் செய்து ஆடல், பாடல், குழலொலி, யாழொலி, கூத்தொலி, வேதொலி, எங்கும் விழவொலி, விண்ணளவுஞ் சென்று விம்மி மிக அப்பிரமன் முதலியவர்களோடு திருவிழாக் கொண்டாடி மகிழ்ந்தார்.

அதன் பின்னர் அவ்வம்மையாரிருவரும் அணி, பூ, ஆடை, முதலாக வேண்டுவன வந்தவர்க்களித்து எல்லாமிறைவனுக்கே

ஏற்பித்தனர். பின்னர் நாள்விழா, பக்கவிழா, மாதவிழா, முதலியனவும் நாகேசப்பெருமானுக்குச்செய்தனர். சண்பக நாதர்க்கு இந்த இறைவியர்களாற் செய்து கொண்டாடப் பெற்ற இத்திருநாளைப் புரட்டாசித் திங்கள் இறுதி நாளில் யாவர் புதுக்கிச் செய்கின்றனரோ, அவர்களனைவரும் எம்பெருமானை நாகநாதர் திருவருளால் அவர்வடிவத்தையே பெற்று இன்புற்று அமர்வார்களென்பது.

திருச்சிற்றம்பலம்.

7-வது கண்ணுடித் திருநாளியற்றிய படலம் முற்றிற்று.



## 8-வது புழுகுக் காப்பிட்ட படலம்.

திருச்சிற்றம்பலம்.

---

இந்திரன் வருகையை இறைவியார் என்னென்று வினவ இறைவனார் கூறுவாராயினர்.

ஒரு காலத்தில் இந்திரனுக்கு உடலில் தீநாற்றமுண்டாக அது கண்ட இந்திரன் பொறுக்காமல் வருத்தமுற்று அது நீக்க முயன்றும் நீங்காமை கண்டு தன் ஆசிரியன் வியாழனை வணங்கி விண்ணப்பஞ்செய்து அப்பெருமான் அது நீங்குஞ் சூட்சி கூறக் கேட்டுச் சண்பகவனம் வந்து சார்ந்தனன்

அவ்வனத்தில் தைத்திங்களில் முதல் நாளிலே விதிப்படிப் பலவகையான மணங்கலந்த புழுகினைப் பல சிறப்புகளோடு வழிபாடுசெய்தனன். பின்னர் இதனை எனதுடலில் தீநாற்றம் போய் நறு நாற்றம் நிகழ இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவியாகிய எம்பிராட்டி மலைமுலையாளுக்கு அணிகின்றேனென்று மனத்தில் நினைத்துக்கொண்டு முறைப்படி மணங்கலந்த அத்திருப்புழுகாகிய மான் மதத்தை எம்பிராட்டிக்குத் திருமேனி முழுதுந் திகழ அணிந்து ததி, சர்க்கரையன்னம், முதலிய திருவமுது பாயசம், திரட்டுப்பால், தேன்பாகு, தேன்குழப்பு முதலிய

சிற்றுண்டி, தாம்பூலம்முதலிய முகவாசம் எல்லாங்கொண்டு நிவே தித்துத் தூபம், தீபம் முதலிய பதினாறு உபசாரங்களும், பல்கச் செய்து அஞ்சலித்து வலஞ்செய்து வணங்கி மகிழ்ந்தனன்.

பின்னர்ச்சூலத்திருக்குளத்தில்முழ்கி அவ்வழிபாட்டால் தன் னுடலில் தீ நாற்றமுற்றகுங் தீராமல் சிறிது எஞ்சி நிற்றலைக் கண்டு மனம புழுங்கிக் கண்ணார்வார அஞ்சலித்து நின்ற இந்திரனுக்குப் புழுகு அம்மையான மலைமுலையாள், கருணைசெய்து அரசனே! எனது வடிவாய விளங்கா நின்ற தவநாயகியான கிரி கன்னிகை யென்னும் மலைமகளையுஞ் சிறப்பாகப் பூசித்து இவ்வாறே மணங் கமழா நின்ற களபச்சாந்தால் மகிழப்பெருந்திருவிழாச் செய்தால் உன்னுடலில் எஞ்சிய தீ நாற்றம் போய் நறுநாற்றந் திகழாநிற்கு மென்றருளிச்செய்தனள். அது கேட்ட இந்திரன் அம்மையை வணங்கி எனது தாயகமே! எனக்குச் சந்தனக் காப்புத்திருநாள் எந்நாள்? எவ்வாறு கொண்டாடவேண்டும்? அதனை யியற்றிப் பய னடைந்தனர் யாவர்? அவ்வியல்பை முழுதும் விதிப்படிக் கூறி யருளல் வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தனன்.

அது கேட்டருளிய நாகநாதர் தேவியாகிய அம்மையார் அவ் வாறு அருளிச்செய்யத் தொடங்குவாராயினர். சித்திரைத்திங்கட் பிறப்பில் அத்த நட்சத்திரம், ஞாயிற்றுக்கிழமை கூடிய நன்னாளில் சந்தனக்காப்புத் திருநாள் செய்தால், பதினாயிர வேள்வி யியற்றிய பலனும். திங்கட்கிழமையானால் இருபதினாயிர வேள்விப் பலனும். சனிக்கிழமை, பதினாயிர பௌண்டரிக யாகப்பலனும். செவ்வாய்க்கிழமை, வியாழக்கிழமையானால் அரசியலாகும். சித் திரை நட்சத்திரமானால் சிவன் அறிவும், சிவன்பால் அன்பு முண் டாகும் உத்திர நாளில் மனத்தில் நினைத்தவை யெல்லாநிகழும்.

சித்திரை மாதப்பிறப்பில் சூல நீராடி எட்டு நாகங்களையும் எண்ணி வணங்கி யன்புடன் முழுவெள்ளரிசிகளாற் பூசித்துச் சண்பக மூலத்தை வணங்கி வலஞ்செய்து எட்டு விளக்கிட்டுப் பாயசம் நிவேதனஞ்செய்து சண்பகப்பூ, வில்வம் முதலியவற்றாற் பன்னிரண்டு நாமங்கள் சொல்லித் தேங்காய், பழம், பாக்கு, வெற் றிலை வைத்து அருச்சித்துத் திருநாகேச்சுரருக்கு மகாபிடேகஞ் செய்து தூபம் முதலியன கொண்டு சந்தனக் காப்புத் திருவிழாச்

மசெய்ய முயலுகின்றேனென்று, வணங்கி வேண்டுதல் செய்து மலைமகளை வணங்கித் தம்முடலின் தீ நாற்றத்தினெச்சமுந் தொலைத்தருள வேண்டிக்கொண்டு எவ்வுலகுக்குந் தாயாகிய மாதேவி! சண்பகக்காட்டு இறைவியே! சம்பகநாதப்பிரியாய்! என்று, துதித்து வணங்கிச் சந்தனத்திருவிழா வியற்றற்கு விடைபெற்றுக் கொண்டு பொன், வெள்ளி, செம்பு, மூன்றுங்கொண்டு செய்த செப்புக்குடங்கள் ஆயிரம் நிறுவி மாவிலை, தருப்பை, நல்லுடை, தேங்காய், பழம், பாக்கு, வெற்றிலை, பொற்பூ, முதலியன வைத்துப் பூசித்தல் வேண்டும். இல்லாதேல் ஆயிரத்திற் பாதி, அதிற் பாதி, அல்லது நூறு இவற்றுள் ஒருவகை எண்கொள்ள நிறை குடங்கள் நிறுவுதல் வேண்டும்.

அக்குப்பங்களுக்குக் கீழ்த்திசையில் ஆகம விதிப்படி நந்தி, சான்றுகணபதி இருவரையுந் நிறுவிப் பூசித்த பின்னரே பிராட்டியாருக்கு அபிடேக மாரம்பஞ்செய்க. அதன் முறையுங்கூறுவன். நூறு குடம் பால், அதிற்பாதித்தயிர், இருபது குட நெய், அதிற்பாதித் தேன், அதிற் பாதிச்சர்க்கரை, பத்துக்குடங் கருப்பஞ்சாறு, பதினாயிரம் வாழைப்பழம், பதினாயிரமெலுமிச்சம்பழம், குங்குமப்பூக்குழம்புக்குடம் மூன்று, பச்சைக் கற்பூரம் நூறு குடம், பன்னீர்க்குடம் மூன்று, விளாமிச்சை ரசம் நூறு குடம், மணஞ்சேர்ந்த சந்தனக்குடம் நூறு, நன்னீர் வாசனைத் திரவியம், பன்னீர்க்குடம் இரண்டு, அதற்குமேல் இடையிடை நன்னீர் மூன்றுகுடம், இவ்வகையாக முறைப்படி அபிடேகஞ்செய்து அமரரேறே! அதன் பின் பன்மணங்கமழுந் தைலம் மூன்றுகுடம், மணப் பொடிநீர் பத்துக் குடம், பன்மணப்பொடி கலந்த நீர் பத்து மரக்காலுள்ள குடம்மூன்றும் ஆட்டிப் பின்னர்ப்புனிதநீராட்டி, நல்ல மென்மைப் பட்டுடையுடுத்தித் திருவமுது, பாயசம், தூய பால், பாலில் நெய்யும், மணமுஞ் சேர்த்துத் திரட்டிய பாற்குழம்பு, பத்து மரக்காலுக்குக் குறையாமல் வைத்து நூறு பெருநெய்விளக்கிட்டுப் பூசித்து, வலமும் வணக்கமுஞ் செய்து, விடைபெற்றுயர்ந்த சந்தனமரத்திலுண்டான ஏழுபாரஞ் சந்தனத்தில் குங்குமப்பூ ஏழுபலம், அவ்வளவு கொண்ட பச்சைக் கற்பூரம், அதிற் பாதியளவு கொண்ட கோரோசனை யாகியவற்றைச் சேர்த்தாக்கிய கலவையை ஒன்பது

மணிகளாலிழைத்துச் செய்யப்பட்ட மணிக்கலத்தில், வைத்து அதைப் பல்லக்கிலேற்றி மெல்லிய ஆடைசாத்திப் பூசித்து இரண்டிற் பௌத்திரந் தரித்த கையினராய் அந்தணர்களைக் கொண்டு வேதமந்திரத்தாற்றெட்டு மந்திரித்துப் பாட்டொலி, கூத்தொலி, நால்வகை வைசக்கருவியொலி, மறையொலி முதலிய வெல்லாம் மல்க. மாழ்கவியான இறைவியின்மறையான "எழுசதிமறை, துர்க்கைமறை" பதினுயிரமாக மூல எழுத்துடன் உருவேற்றி வெற்றிலை, பாக்கு, பழம்முதலிய நிறைவித்து அறிவித்து அக்கலவையை வலர், வணக்கஙகள் செய்க.

பின்னர், அப்பலலகளை வீதிவலஞ் செய்வித்து இறைவி திருமுன்கொணர்ந்து சிறிது சந்தனத்தை எடுத்து பலேமகளின் திருககரத்தில் வைத்து இதனை அம்மையேயேற்றருளி அடியேனையுய்யக்கொண்டருள்கவென்று பேரன்புடன் வேண்டுதல் செய்து முன்னர்த் திருநாகேசப்பெருமனுக்கு அர்ப்பணஞ்செய்து அம்மையார்க்குத் திருச்சந்தனக்காப்பணிந்து, அணிகள், சாதி முதலியவற்றல் தொடுத்த மாலைகள், பூக்கள், மெல்லிய ஆடைகள் முதலியன முறையாகவணிசெய்து, தயிரன்ன முதலிய அமுது வகை, பாயசம், வெல்லநீர், தேன்குழல், முதலிய சிற்றுண்டி வகை, பழநிரை, தாம்பூலம், தேஙகாய், முதலிய வெல்லாம் வைத்து, அறிக்கை செய்து சித்திரைத் திஙகட்பிறப்பில் மாலைக்காலத்திலே முதற்கூற்றிலே அடியேஙகள் செய்தனவெல்லாவற்றையும், ஏற்றருள இறைவியை வேண்டுதலோடு தோத்திரஞ்சொல்லி வணஙகல் வேண்டும். இதுவே சந்தனக் காப்புத் திருவிழாவாகும். இதனை இவ்வாறேயியற்றிஞல் இமையவரேந்தால்! நின்னுடல் தீநாற்றம்போய் நன்னுற்றம்பெற்றுப் பேரொளி பெருகாநிற்கும்.

இதனைச் சொன்னவர், கேட்டவர், நினைத்தவர் யாவரும் நலமும் பெற்று இந்நிலத்தில் இன்புற்று நிற்பர்.

திருச்சிற்றம்பலம்.

8-வது படலம் முற்றிற்று.

# 9-வது இந்திரனுக்கிறைவி சந்திரசேனன் வரலாறுரைத்த படலம்.

---

மண்மகளுக்கு மணமிகுத்த சந்தனத் திருநாள் இயற்று மாறு மலைமுலையாளாகிய கிரிகுசாம்பிகையம்மையார் அமரர்கோ னுக் கநுமதி தந்தருளி, அத்திருநாளருமையும், பெருமையும் அடி யேங்களுணர்ந்துய்யத் திருவுளங்கொண்டு அத்திருநா ளியற்றிய சந்திரசேனன் வரலாற்றையும் நன்குணர்த்துவாராயினர்.

சந்திரசோதிப்பட்டிணத்திலே சந்திரகுலத்திலே சிவபிரான் றிருவடிக்கீழ்ச் செறித்தநெஞ்சும், சிவனெறியிற்றலைப்பட்ட செம் மையுணர்ச்சியும், சிவபுராணமே கேட்டுறும் விருப்பும், சிவனுக் கே வழிபாடான செயலும், சிவத்தொண்டரிற் சிறந்தவாற்றலும், என்றுந் திருநீறிட்ட உடல்முழுதும் விதிப்படி உருத்திராக்கம் பூண்டொளிருஞ் சிவவேடமும் முதலாயினவற்றால் மேம்பட்டு எவ்வகை யாகங்களுமியற்றலும், எவ்வகையான பகைகளை யுமிகத்தலும் முதலிய நற்செயலுடையவன், செய்ந்நன்றி யறி தல், சிதையாவண்மை, சேர்ந்தார் பாலன்பு, நடுநிற்றல், உண்மை மொழியுரைத்தல், பொறையுடைமை, முதலிய குணங்களை முறை யே யுடையவன், பொறாமை, வெறுப்பு முதலிய குற்றங்களனைத் துமற்றவன் அறத்தின் கொள்கலமானவன் விரதங்களைச் சர தமாக வியற்றவல்லவன், அழகிற்கணிகலமன்னவன், என்றுமழி யாதநிதிக்குவியல் (பண்டாரங்கள்) உடையவன், இத்தகைய சந் திரசேனனென்பானொருவன் அந்நகரை அரசுபுரிவானாயினன். அவன் ஒருநாள் திங்கட்கிழமையிலே ஸ்ரீ சைலமென்னும் பருப் பதத்தில், பரமனைப் பூசிக்கத்தக்க பெருவேட்கை யுடையவனாய்ப் புட்பம், தாம்பூலம், பழவகைகள், அணிகலம், பட்டாடை, பொன்னாடை, சந்தனம் முதலான பூசைக்குவேண்டும் பொருள் களோடு புரோகிதர், மனை, மக்கள், சுற்றம், நண்பர், ஏவலா ளர் முதலானோர் எல்லோருந் தன்னைச்சூழ்ந்துவர அத்திருப்பதி யை யடைந்தனன். அங்கண் எழுந்தருளிய அருட்கண்ணரா கிய மல்லிகையர்ச்சுனர் பெருமானை அகங்குளிரக் கண்டுகளித்து அஞ்சலி, வணக்கம், வலஞ்சூழ்கை, முதலிய வந்தனைசெய்து பா தாளக்கங்கையில் மூழ்கி, விபூதி, கண்மணி விதிப்படியணி னன்

வெள்ளையுடுத்திப் பேசாது அஞ்செழுத்து நெஞ்சுதொடுக்க அவ் விறைவனுக்கு வடதிசையில் அரசமரத்தடியில், அக்கங்கைக்கரை யின் தென்பாகத்தில், நந்தியம்பெருமான் திருமுன்னரே சென் றனன். ஆண்டு நட்சத்திரபதியாகிய தண் கதிர்ச்செல்வன் தவம் செய்யச் சிவபிரான் தன் சடையிற்றரித்துத் தண்ணருள்புரிந்த அவ்விடத்திலேயே அவனுக் கருள்புரிந்த அந்நாள் முதல் அப் பெருமான் ஞயவள்முடியனென்று திருப்பெயரெய்தினன். "அதில் ஏகசிலை" யென்று ஒன்று, அச்சிவனால் நிறுவப்பெற்றுள்ளது. அது தன்னைபடித்தவரானவர்க்கும் எப்பெருஞானங்களையும், எளி தின் ஈயவல்லதாய் இன்றும் நின்றது. அத்தகைய ஏக சிலையில், (பத்மாசனம்) தாமரைமணையிருந்து இறைவன் திருவடியில்ஒருப் பட்ட மனத்துடன் அன்பால் சிவனிரவில் ஒருமுறை அஞ்செ ழுத்தை நெஞ்சால் தொடுப்பவன் மூன்றுகோடி குலத்தினரை மேற்கதிச்செலுத்தித்தானும் சிவனேயாவன் என்பது ஐயமில்லை. அவ்வாறே சந்திரசேனனும், அவ்வேகசிலையில் விதிப்படியிருந்து, ஐந்தெழுத்தைப் பதினாயிரமோதித் திருக்கோயிலுள்ளே சென்று தொந்திவிநாயகரை வணங்கித் துதித்து விடைபெற்று எவ்வுல கிற்குமிறைவனாகிய மல்லிகையர்ச்சுனரை நான் முறைப்படி நீராட்டி வெல்லவன்னம், உழுந்துவடை முதலிய சிற்றுண்டிகள், வெண்பாயசம் முதலியனவாக அறிக்கைசெய்து, நறும்புகை, திருவிளக்கு நயமுறக்காட்டி, வழிபாடுமுடித்து, மாபெரு மண்ட பத்தில் மகிழ்ந்து சென்று, சிவபிரான் திருவிளையாட்டமுறைதச் சிந்தையுறக்கேட்பான் புக்கனன். சிவன் திருநீற்றின்சிறப்பு, சிவனிரவின் சிறப்பு, உருத்திராக்கமணிச் சிறப்பு எல்லாப்பாபமு மிகக்கும் வில்வத்தோட்டம், அதன்பூசைப்பலன், முதலாயினவற் றைத்தொடர்ப்பு பெறக்கேட்டு மகிழ்ந்தனன். இவ்வமயத்தின் மிகு ந்த வறுமையுற்றுப்பொள்ளல் உடைபுனைந்த சதர்சனன் என்னும் ஓர் அந்தணன் தொந்திக்கணபதியைப் பூசித்துப் புனிதநீரால் எங் கள் பெருமானாகிய இறைவனை நீராட்டி, அம்மைக்கும் அவ்வாறே அப்புனித நீராட்டி, விளக்கின் கொள்கலத்தில் நீரிட்டுத் திரியிட் டுத் தீக்கொளுந்தச்செய்து, பேரன்புடன் தீபங் காட்டினன். அப் போது அத்தீபம் செங்கதிர்ச் சுடரைப்போலத் திகழ்ந்தொளி வீசியது. அதனைக்கண்ட சந்திரசேனன் வியப்புற்று அவ்வந்த

ணனை அழைத்து நீரிட்டவிளக்கு நிலையாக நின்று எரிகின்றதே பான் பலரைக்கொண்டு திரி, நெய்யிட்டு விளக்குகள் நன்கிடப் பெற்றும் அவை நன்றாக ஒளிரவில்லையே; அன்றியும் நடுவில் அணைந்துவிடுகின்றன. இடையிடையே தூண்டினாலும் அடங்கி விடுகின்றன. காரணமறியேனென்றனன். அதுகேட்ட அச் சதர்சனன், அரசே! சிவபிரானிடத்தில் எஞ்ஞான்று செம்மை பான அன்புண்டாகுமோ அன்றேதான் இயலாதகாரியமெல் லாமெளிதில் இயலுமென்றான். அதனை அவ்வரசன் கேட்டு பானே இறைவனாகிய சிவபிரானிடத்தில் சிறந்த அன்புடைய னாகியே. அப்பெருமானைப் பூசிக்கின்றேன். என்னைப்போல் நீர் பூசித்திலீர் என்றான். அதுகேட்டு அவ்வந்தணன் அங்ஙனம் நம் இறைவனை வழிபட்டால் தண்ணீர் விளக்குத் தழைத்தெரிய லாமே என்று கேட்டனன். அரசனும் பொருளில்லாதவனுக்கு ஈசனிடத் தன்பு பொருந்துமோ? என்பாலன்பிருந்தமையால் இப்பெருமானுக்குக் கோபுரம், மண்டபம், பூஞ்சோலை, முதலி பன செய்வித்து எவரும் மகிழத்தக்க பூசைத்திரவியங்களெல்லாங் கொணர்ந்து மிகுந்தஅன்புடன் இறைவனைவழிபட்டேத்தினேன். இவற்றுள் ஒன்றுமில்லாத மூடனுக்கு ஒருசிறிதேனும் அன்புண் டாகுமா? மிகுந்தபொருளுடையேனாதலால் அங்ஙனஞ் செய்தே னென்று அரசன் கூறச் சிவனிரவின் முதற் சாமத்தில் இருவரும் ஒருவருக் கொருவர் வினவிடை நிகழ்த்திக்கொண்டிருக்கு மள வில், அவ்விருவர் தலையிலும் அப்பருப்பதத் திருக்கோயின் மண்டப மிடிந்துவிழ மாண்டனர். சிவகணங்கள் வந்து அந்தச் சதர்சன அந்தணனை "வலவனேவா வானவூர்தி" யில் ஏற்றிக் கொண்டு திருக்கைலைக்குச் செல்ல முயன்றனர். இயமதூதர்சந்திர சேனனைப் பிடித்தீர்த்திடவந்து அச்சதர்சனனைக் கைலைக்குச் செ லுத்தாநின்ற அக்கணங்களை நோக்கிச் சிவதூதர்காள்! அவ்வந்த ணனே கையில் ஓர்காசுமில்லாதவன். இறைவனை வெறுநீராட்டித் தண்ணீர்விளக்கு இட்டவன். தானம், ஓமம், செபம், விரதம், தவம், விதி, விலக்கு முதலிய உண்மைப்பொருள் ஒன்றும் அறி யாதவன். அத்தகையானைமட்டும் அருட்கண்ணியாகன் விமா னத்தில் ஏற்றவருள்புரிந்தனன்.

அச் சந்திரசேன னென்பான் உண்மைப் பொருளுணர்ச்சி,

பூசைவிதி, சிவராத்திரி விரதம், தானத்தில் விருப்பம், முதலிய எல்லா நற்குண நற்செயல்களுமுடையவன். மல்லிகையர்ச்சுனப் பெருமானுக்கு மகிழ்ந்து ஆலயம் வகுந்தவன். சிவனிரவில், தீர்த்தக்கரையில், அரசமரத்தடியில், "ஏகசிலை" யிலிருந்து அஞ்செழுத் தோதினவன். அப்பெருமானுக்கு விதிப்படி புனிதநீராட்டி நறும்புகையெடுத்து நற்றீபங்காட்டிப் புனிதமாய்ப் பொள்ளலில்லாத நல் வில்வத்தைதையெடுத்து அருச்சித்துத் திருவமுதிட்டு வழிபாடுமுடித்து அச்சிவபிரான்றிருவிளையாட்டமுதைச் செவியிற் பருகிச் சிந்தை மகிழ்ந்தவன். இவ்வியல்பினனை அக்கைலையெம்பெருமான் ஆண்டழைத்துப்போக அருள் புரிந்திலன் இதற்குக் காரணம் என்னை? கூறுவீராக வென்ன, அதுகேட்ட சிவகணத்தோர் சிரித்த முகங்கொண்டு தூதர்காள்!

> படையமே மிகுத்து மாண்புடை யீகையு மின்றி
> யுடைமையே யிலனு யுணர்வுடை நூல்களும் பயிலான்
> புடவியில் வறிஞன் போந்தன னென்னினு மன்பிற்
> கடமைய னுயின் கண்ணுத லடியிணை சார்வான்.

இறைவன்பால் அன்புடையவன் எத்துணைத் தாழ்ந்தவனாயினும், அவ்விறைவனை யாவனென்றுணர்க; இஃதுண்மையென்றுரைத்தனர். இதனைக் கேட்பவர், சொல்லுவோர் எல்லாரும், இறைவன்பா லன்பராய் எண்ணியது பெற்று இன்புறுவ ரென்பது.

திருச்சிற்றம்பலம்.

9-வது இந்திரனுக்கிறைவி சந்திரசேனன் வரலாறுரைத்தபடலம்.

முற்றிற்று.



## 10-வது தூதர் வினவுரை நிகழ்த்தியதுரைத்த படலம்.

சிவத்தொண்டர்கள், இனிச் சந்திரசேனன் முன் வரலாற்றைச் சொல்லுவான் றொடங்கி, காலதூதர்காள்! கடவுள் அன்புக்குக் கருதிய பொருள் காரணமன்று. வேத நூல்கள் வேள்வி

கள், ஆடையணிகள், அரசூழியம், பெரியோர்களின் நன்குமதிப்பு, தானம், செபம், தவம், தியானம், தருப்பணம், நீராடல், நீர்க்கரையிருப்பு, சிவத்தல விருக்கை, விரதம், அறநெஞ்சு முதலாயின காரணமல்லவே; அன்பொன்றே கடவுள் அருளுக்குக் காரணமாகும் இறைவன் யாவராயினு மன்பரன்றி யறிபொணு மலர்ச்சோதியனுதலால், அஃதொன்றாலே எங்களிறைவன் இன்புறுவன். இவ்வாறின்றி இம் மன்னனே முற்பிறப்பில் வணிகன்; பெருஞ்செல்வமுள்ளவன் எளியவர்க் கீயாதவன் ; சிவத்துரோகஞ்செய்தவன் ; மாபாதகன் ; சிவன்பொருளில் வேட்கைமிகுந்தவன்.

இதனால் சிவபிரான் றிருக்கோயிலைச்சிதைய இடித்தவன் சிவத்தலமான திருக்கழுக் குன்றத்தில் முப்பொழுது திருமேனி தீண்டும் வஞ்சகமறையவனுக்கு மலிந்த நண்பன் ; அந்த வஞ்சகன் கொண்டுவரும் ஆடை, அணி, அரிசி, முதலிய சிவன் பொருள்களை அடைவாக அறவே வாங்கி, அப்பொய்த் தொண்டனுக்குடன் பட்டவனாய் அவனுக்கொருபாகமும், தனக்குஇரண்டு பாகமுங் கொண்டு உயிர் வாழ்ந்தவன். அந்த ஆதிசைவனும் தன் பாகத்தைப் பிறரறியின் அரசனுமறிந்து, அளவிலதாகத் தண்டிட்பானென்று அஞ்சி, அதனை மீட்டும் அவனிடத்திலேயே வைத்திருந்தனன்; இவ்வாறே அப்பொருள்களை நாடோறுந் தன் கணக்கில் எழுதிக்கொண்டு கணக்கன் வாயிலாகவே வரவு செலவு செய்து வந்தனன் இதனால் அவனும் பெருஞ் செல்வனானன்.

அந்தக் கொடும் பாவத்தால் கொடியவயிற்றுவலி வந்துவருந்தப்பெற்றான். இக்கொடியோன் ஒரு நாள் சிவன் இரவில் ஒரு கணப்பொழுதே சிவபெருமான் றிருக் கதையமுதைச் செவியாற் கேட்டனன் அன்றியும் ஒரு நாள் சிவனிரவில் இரண்டாம் இயாமத்திலே இறைவனுக்கியற்றிய தீபாராதனையை இயல்பாகவே காணப் பெற்றனன். இப் புண்ணியப் பயனென்றாலே இப்பிறப்பில் இவ்வரசனானன்

ஆயினும் முன் பிறப்பினிற் செய்த தீவினையினால் எம்பெருமானிடத்தில் உறுதியான அன்பு உண்டாக வில்லை இதனால் இப்பிறப்பில் எவ்வளவு எண்ணெய் விட்டு அவன் எரியேற்றினும் அஃது தெரியாது அமைந்து கொண்டே போயிற்றென்க

திங்கணன் சடையோன் றன்பாற்
செயற்கரும் பிழைகள் செய்தோ
றங்குபின் பிறப்பிற் செய்யுந்
தன்னறங் கடைபோ காவா
மங்கணு நரகிற் காளாய்
அளவிலாக் கால மன்னி
வெங்கணே யுறுவனென்றே
யிருமறை யியம்பு மென்ப.

சிவ பிரானிடத்தில் குற்றம் இழைத்தவன் இயற்றிய தருமங்கள் முற்றும் பழுதாவன வல்லமால், அவனும் பெருநரகிற் சென்றுபெருந் துன்பத்தைப் பெறுவ னென்று, பெருமறை முதலிய நூல்கள் நுவலுமாதலின், அவன் இடை யிடையே தூண்டி முயன்றிட்ட விளக்கு முற்றும் விளங்காமல் போகவே, இவ்வாறு வந்தனன். ஆதலால் நீங்கள் இவனைக் கொண்டு செல்லுவீராக.

இறைவ னன்பில் லார்பூசை யிறையன்பிற் பகையாய் நிற்பார்
மறைமுத லான நூற்கு வன்பகை யாக வாழ்வோர்
கறைமிட றுடையான் செல்வங் காப்பவர் கோயில் வீப்போர்
நிறைகுளங் கூவல்தூர நிகழ்த்திஞேர் கூற்றைச் சார்வார்.

வெள்ளவார் சடையான் பூசை விமலன்கண் மணிக ணீறு
வள்ளிய பள்ளித் தாமம் வெளவிய கலதி யாரே
ரொள்ளிய பூவார் சோலைக் குமைபரன் விரதந் தொண்டை
யெள்ளியே யிடையூ றிடுவோ ரியமனைச் சார்வார் அந்தோ.

இன்பமா மிறைநூ லறிவோ டினிதவன் வழிபா டுறுகை
துன்பிலான் கோயில் காணறாயாம் விரத மேற்றன்
மன்புகழ் நீற்றுக் கோலம் வான்றனைத் தவருக் காட்சி
யன்புடனிவற்று ளொன்று மணைந்தவர் சிவனைச் சார்வார்.

மழைதரு மிடறன் பூசை மகிழன்பா லளிப்போர் பூங்கா
தழைதரு வில்வம் வைப்போர் தம்பிராற் கதனைச் சேர்ப்போர்
விழைதரு விழாவைச் செய்வோர் விழவினை விரும்பிக் காண்போ
ருழையணி புகழைக் கேட்போ ருரைசெய்வோர் சிவனைச் சார்வார்.

இதனால் இச்சதர்சனனென்னும் அந்தணன் மூன்று பிறப்பிலும் அரும் பெரும் சிவபுண்ணியங்களைச் செய்தவன்; முதற்பிறப்

பில் வில்வத் தோட்டம் வளர்கவைத்தவன்; இரண்டாவது பிறவி யில் தும்பை முதலிய அளவில்லாத பூக்கள் நிரம்பிய பூஞ்சோலை பொலிவுறச்செய்து சிவன்பாலன்புடன் சிவபூசைக்குத் திருத் தொண்டு செய்தவன்; மூன்றும் பிறவியில் திருப்பருப் பதத்தில் எஞ்ஞான்றுந் திருவலகிட்டு நீரினால் தீபந்திகழச் செய்திட்ட வன்; ஆனால் வேறு நூல்களொன்றும் அறிகிலன்; சிவ வழிபாட் டின் விதி, வேள்வி, முதலியன முற்றுமறிந்திலன். மூன்று பிறப்பி லும் முக்கண்ணன்பால் முனைந்த அன்புள்ளவன்; இன்னும் இவ் வந்தணன் பொறுமைபூண்டு உற்றவர்க்கேயுதவி செய்தும், மனைவிமக்கள், மாண்புடைய நண்பர்கள், மல்கப்பெற்றும், மாதர் பால் மாலுடையவனுயினும் அவையெல்லாம் அருட் கண்ணராகிய அரனருளாலாவனவென்றே அகத்தில் துணிந்தவன்; இதனால் இவ்வந்தணர் சிகாமணியை எம்பெருமான் கட்டளையால் திருக் கைலைக்குக் கொண்டு செல்கின்றோமென்று கூறினர்.

இதனைக் கேட்டுக் கொண்டிருந்த சந்திரசேனன் சிவத் தொண்டர்களை நோக்கி அன்பர்காள்! மெய்ம்மை யுருவானீர்! தம் பிரான் கட்டளையைத் தலையிற்கொண்டீர்! சிவநாமங்களைச் செவ் வனே கூறுவீர்! நுமது திருவடிகளைச் செங்கை கூப்பிச் சிந்திக் கின்றேன்.

"யான் எஞ்ஞான்று நரகினின்றும் விடுதலைப் பெற்றெழு வேன்? எக்காலம் எம்பெருமானுகிய அருட் கண்ணரை யடை வேன்? எப்போது அவன் திருவடிக்கண் அழுத்தமான உள் ளன்பு பெறுவேன்? இவற்றை எளியேன் விளங்க எடுத்துரைப் பீராக" வென்று விண்ணப்பஞ்செய்யாநிற்க, அதுகேட்ட தொண் டர்கள் மகிழ்ந்து சொல்லுவாராயினர்.

அரசே! நீயோ நரகமே நற்கதியாக நயந்தவன்; அதனால் பதினுயிரயாண்டு நரகிற் பதிந்து, பின்னர் இந்தத்திருப்பருப்பதத் தில் செங்கோலரசாகப் பிறந்து, அத்தலத்தில் எழுந்தருளிய தம் பிரானைப் பூசித்து, அப்பெருமான் திருவிளையாடல்களைக் கேட்டுச் சிவனிரவு விரதத்தைச் செவ்வனே முடித்துப் பின் பிறப்பில் காவேரிக்குத் தென்கரையில், திருந்துதேவன் குடிக்குத் தெற்கில், திருவிடைமருதிற்கு நிருதித்திசையில், மனேக்கியநாதனுரெழுந்

தருளிய திருநீலக்குடிக்கு மேற்கில், திருக்குடந்தைக்குக் கீழ்த்தி சையில் உட்பட்டுச் சண்பகவனமென்னும் பேருடையதும், கைலைக் கொப்பானதுமான அத்திருத்தலத்தில், பிராமணகுலத்திலே பிறந்து முன்பிறவிகளிற் செய்த வினைகளைவிடுத்தும் எச்சத்தால் மேனியிற்றீ நாற்றஞ் செறியப் பெற்றவனுவாய்.

பின்னர்ச் சௌனகரால் அருளப்பெற்று அத்திரு நகரில் எழுந்தருளிய மலைமகளாகிய கிரிகன்னிகைக்குக் கிளர்ச்சியோடு சந்தனத்திருநாள் அபிடேக ஆராதனைகளியியற்றி, அப் பெரு மாட்டியினருளால் அத்தீநாற்றமகலப் பெற்று, அந்நகர் வாசத்தாலும், அத்திருநாளியற்றிய அறப்பயனுலும், அரன்பாலன்பு மிகுந்து, அப் பெருமான் திருவடிப் பேறு பெற்றின்புறுவா யென்றருளிச்செய்து, அன்னப்பறவைகளால் சுமக்கப் பெற்ற தும், விடைக்கொடி விரவப்பெற்றதுமான "வலவினைவாவான ஷீர்தி" யான விமானத்தில் சதர்சனனென்னும் அந்தணர் பெரு மானை ஏற்றி, அணிகலங்கள் அணிந்து, தேவதாசிகள் சேவிக்கப் பற்பல மணங்கமழா நிற்கச் சிவத்தொண்டர்களிற் சிறந்தவனுகப் பிறப்பிறப்பில்லாத பெருங்கைலைப் பதவியில் பிறங்கச் செய்தனர்.

காலதூதர்கள், இச்சந்திரசேனனைக் கடிய பாசங்களால கட டியீர்த்துச் சென்று அச்சமுற அரு நரகிற்றள்ளிப் பதினுபிர மாண்டு பலமாகத் தண்டித்தனர். அவ்வாறு தண்டிக்கும்போது சிவன்பால் தீங்குசெய்தனையே யென்று சொல்லிச் சொல்லி அக் காலமுடியத் தண்டிக்க, அதினின்றும் மீண்டு திருப்பருப்பதத் தில் அத்தொண்டர்கள் சொன்னவாறு துதித்துச் சிவனிரவு விர தத்தை முடித்து அப் பேறத்தால் இச் சண்பக வனத்தில் மறை யவர் குலத்தில் வந்து தோன்றினன்.

இதற்கு ஏழாவது முற்பிறப்பில் சிவத்தொண்டர்களில் ஒரு வனுன ஆதிசைவன் சிவ பூசைசெய்து வெய்யிலின் வெப்பத்தால் வேதனை யுற்று வந்தனன். அதைக் கண்ணுற்றிரங்கிய அவ்வந் தணன் திருக்கோயிலில் சிவ பூசைக்கு வைத்திருந்த சந்தனத்தில் சிறிது எடுத்துப் பூசிக்கக் கொடுத்துச் தாபந்தீர்த்து அதன் எச் சத்தை எம்பெருமானுக்கு அணிவித்த பாவத்தால், இப்பிறப்பில் மெய்யில் தீ நாற்றஞ்சேரப் பெற்று அதனுல் அளவிலா மனக்

கவற்சி கொண்டு திருநாகேச்சுரர் திருக்கோயிலிற் பன்னாள் தொண்டு செய்து நின்றனன்.

இந்தக் கதையைக் கேட்டவர், உரைத்தவர், இதற்குதவி செய்தவர், எல்லோரும் பெரும்பாவத்தைச் செய்தவராயினும் அவை முற்றும் நீங்கப் பெற்றுப் புண்ணியராவார்கள் என்பது.

திருச்சிற்றம்பலம்.

10-வது தூதர் விஞவுரை நிகழ்த்திய துரைத்த படலம் முற்றிற்று.

---

## 11-வது சந்திரசேனன் வரலாறு கேட்டுச் சந்தனத் திருநாளியற்றிய படலம்.

திருச்சிற்றம்பலம்.

---

)ச்சண்பகவனத்தில் மறையவனுகப் பிறந்த சங்கரனென பவன தனது மெய்யில் தீ நாற்ற செறியக்கண்டு மனம் புழுங்கி அதனை அகற்றப் பலவாறு முயன்றும் முடியாமையினுல் தலயாத்திரை தொடங்கித் திருப்பருப்பதஞ் சென்று வீமேசுரம், திருக்கேதாரம், திருவாரூர், திருக்கோகர்னம், மதுரை, திருவானைக்கா, சீகாழி, வில்வக்காடு, பிரப்பங்காடு, திருமறைக்காடு, திருவாலங்காடு திருநெல்வாயில், திருவெண்காடு, திருமாந்துறை, கொன்றை விருட்சபுரம், பழமலே, திருவிளநகர், அரசங்காடு, மாலதிவனம், அத்திக்காடு, மாயூரம், தூர்க்கைவனம், விலாமிச்சங்காடு, மதுரை, திருநறையூர், கழுகுவனம், காகாசுரவனம், திருத்தெங்கூர், தில்லைவனம், திருப்பனந்தாள், பிதுர்முத்திபுரம், இலந்தைவனம். எண்டிசையாளர்புரம், கரவீரவனம், மூவலூர், சந்தனவனம், நீலோற்பலவனம், புண்டரீகவனம், திருவையாறு, திருக்கண்டியூர், புலியூர், திருப்பழனம், திருநெய்த்தானம், ஒத்தூர், புட்பவனம், திருக்குடந்தை, பட்டீச்சுரம், திருவெண்ணெய்நல்லூர், எழு கன்னிபுரம், குறுக்கை, பாலூர், குத்தாலம், திருவாவடுதுறை, திருவிடைமருதூர் முதலிய திருப்பதிகளில் சென்று நீராடி இறைவனை இனிதாகக்கண்குளிரக்கண்டு வழிபாடியற்றி வணங்கியேத்தியுமே தனது தீ நாற்றம் தீராதிருத்தலைத்தெரிந்து மனம் வருந்திப் பின்னும், பலதலங்கள் காணத்தொடங்கினன்.

ரசப்பிறப்பில் திருக்கோகர்னஞ் சென்று கோமுத்தீ சனைப் பணிந்து கடல் நீராடிக் கரையேறிப் போமளவில் நைமிசக்காட்டில் வாழ்பவர்களும், நீர், காற்று, சருகு, முதலிய வைகானசிய யுண்டுயிர் வாழ்பவர்களும், இரக்கம், அடக்கம் முதலிய எல்லா நற்குணங்களும், வாய்ந்தவர்களும், சிவபிரான் றிருவடிக்கீழ்ச் சிறந்த உள்ளன்பு நிறைந்து சிவநாமங்களையே செப்பா நின்ற செந்நாப் போதாருமாகிய சௌனகமா முனிவர் முதலிய அந்தணர் கூட்டங்கள் முற்றும், தைத்திங்கட் பிறப்பில், சமுத்திர நீராடிச் சந்திரசேகரனைத் துதித்து, மீளும்போது அந்தணர் அம் முப்புரிநூலனைக்காணா அவ்வறு தொழிலாளனும், அம்முனிவர்களைக் கண்ணுற்றுக்கரங்குவித்து வணங்கிநின்றுதன் வினையைத் தெரிவித்து இந் நாற்றக்கழுவாய் எவ்விடமாகுமென இனிது வேண்டாநின்றனன் அதுகேட்டஅந்தணர்பெருமானான சௌனகன் ஒரு முகூர்த்தம் ஒருப்பட்டிருந் துணர்த்துவானாயினான். அந்தணர் பெருமானே! நினது பிறப்பிடமான திருநாகேச்சுரத்தில் திங்கட்சடையோன் அண்மையிற் சிறந்து நின்றகூலநீரின் சிறப்போ சிந்தித்து எவராலும் செப்புதற்கரிதே. ஆண்டு இரண்டு வடிவங்கொண்டு வீற்றிருக்கின்ற இறைவியார் பெருமையையும் இப் பூமிபடைத்தோனுடைய ஈரிரண்டு நாக்களாலும், இயம்புதற்கரிது. எத்தலம் நினைத்தமாத்திரத்தில் நீண்ட பாபங்களெல்லாம் நீங்கப்பெறுவது? எத்தலம் வசித்த வளவில் வந்த தீவினைகளனைத்தும் மாறி வாய்த்தற்கரிய மாண்புடைய நன்மைகள் அனைத்தும் வரப்பெறுவது? அத்தகைய சிறப்புடைய தலத்தை இத்தனைநாளும், அகன்று வீண்முயற்சியெடுத்துத் திரிந்தீர். இன்னும் கங்கைக்கரையிலுள்ளார் அத்தலத்தை விரும்பா நின்றார். நீர்மட்டும் அயல் தலத்தை அடைய ஆசைப்படுகின்றீர்? ஆகையால் உம்முடைய திருநகருக்கு விரைவில் சென்று தைத்திங்கட் பிறப்பில் முதல்நாளில், மலைமகளாகிய கிரிகன்னிகையை நீராட்டி விதிப்படிச் சந்தனக்காப்புத்திருநாள் கொண்டாடினால், அதன்பயனால் நும் உடம்பில் உளதான மிகுசெடி நாற்றம் மாறி மேலான செம்மை மணம் திகழா நிற்கும். இப்போதே எழுகவென் றருளினர். கடல்நீர் மூழ்கிக் கோகர்ன நாதரைப் பணிந்த

அந்த மறையவன் அம்முனிவர் மொழிப்படியே மீண்டும் இச் சண்பகவனம் வந்தனன்.

அதன கண்ணுள்ள சூலதீர்த்தத்தில் மூழ்கிச் சண்பகமரத்தடி சென்று அஞ்சலித்து வலஞ்செய்து வணங்கி, எட்டுத்திசைகளிலும் எட்டு விளக்கு இட்டுப், பாயச முதலான அமுதுகளை நிவேதித்து, வில்வங்களால் அர்ச்சித்துப் பன்னிரண்டு நாமங்கொண்டு அம்மரத்தைப் பூசித்து, நாகேசப்பெருமானை இடபத்தின் கொம்பினிடையால் கண்குளிரக்கண்டு துதிசெய்து, குன்றை முலையாளுக்குப்புழுகுக்காப்பணிந்து சித்திரைமாதப் பிறப்பில், சிவனுக்கினியையான அம் மலைமுலையாளுக்கு மகா நீராட்டல் விதிப்படிசெய்து, மெல்லிய பட்டாடையணிந்து தூபம், தீபம், நிவேதனம் அன்புடன் தந்து, மணங்கமழாநின்ற கலவைச் சந்தனத்தைத் தூயகலத்தில் துலங்க வைத்துப் பூசித்து, விதிப்படி வீதிவலம் செய்வித்து, அன்று மாலைக்காலத்தில் இசைக்கருவி, இசைப்பாட்டுகள் இனிது முழங்கா நிற்க, நிர்த்தனம் நிகழ, மறை முழங்கத் தவவடிவினளாகிய மலைமகளுக்கு (பாதாதிகேசம்) அடிமுதல் முடிவரை சந்தனக் காப்பிட்டு நிறைய விளக்கு நிகழ்த்தி, விதிப்படி அமுதுடன் அரிய இப்பூசையாற்றினேன். இதனை ஏற்றுக்கொள்க வென்று வேண்டுகோள் செய்து, துதித்து விடைக்கொடியரான திருநாகேச்சுரப்பெருமானுக்கும் அவ்வாறே பூசித்து வணங்கி, மங்கை பாகத் தலைவரையும், கிரிகுசாம்பாளையும், சிறப்பாகப் பூசித்து வணங்கி, வலம்நான்கு செய்தனன். மறையால் துதிசெய்து மகிழ்ந்தனன். அவ் வமயத்திலே தனது உடல்நாற்றம் மாறி உயர்மணம் வீசியது. பின்னர் அப்பெருமானருளால் அருள்ஞானமடைந்து அத்தலத்தைவிட்டகலாமல் அன்பர் பலரால் அகமகிழ்ந்து, கொண்டாடப் பெற்று, இறுதியில் முத்தியும் பெற்றின்புற்றான்.

அதனால் அமரரேறே! நீயும் யான்கூறிய விதிப்படி கிரிகன்னிகையானமலைமகளுக்குச்சந்தனவிழா வியற்றினால், உனக்குள்ள தீநாற்றம்போய் நறுமணந் திகழப்பெறுவாயென்று கிரிகுசாம்பாள் கருணையாற் கிளர்ந்தருளியது கேட்டு, அப்போதே அகக்கிளர்ச்சியுடையவனாய் இறைவன் இன்னருளை முன்னிட்டு மிக முயன்று தனது தூதர்களைத் துரத்தி வாயுக்களனைவரையும் அழைத்து, அவர்களைவிடுத்து,விண்ணிலுள்ள அருக்கர் பன்னிருவர், மருத்து

வசிருவர், வசுக்களெண்மர், சித்தர் முதலிய கணங்கள் பதினெண்மர், ஆகிய எல்லாத் தேவர்களையும் இச்சித்திரைத்திங்கட் பிறப்பு முதனாள் இவ்விடம் அழைத்துவரச் செய்தனன். அவனனுமதிப்படி அவ்வாயுவினால் அனைவருங் கொண்டுவரப்பட்டனர். அவ்விந்திரன் ஏவல்தாங்கி இயமனும் நாகேச்சுரப்பெருமானுக்குக் கூப்பிடு தூரமளவாகமண்டபங்கள், அம்மையாரிருவருக்கும் திருக்கோயில், காவணங்கள், சாலைகள், கூடங்கள், மேடைகள், பிரகாரங்கள், கோபுரங்கள், இவையெல்லாம் பொன்னுருவமாகக்கட்டி, அவற்றை மணிகளால் அணிசெய்து, சித்திரவேலை, மணிவேலை, பூவேலை முதலிய அருமைத்தொழில்கள் அடங்கச்செய்து முடிந்த முறையைத் தன்முதல்வனுக்கு விண்ணப்பஞ்செய்தனன். இந்திரன் இவற்றைக் கண்டு மகிழ்ந்து, சித்திரைத் திங்கட் பிறப்பில் மாலைக்காலத்தில் அமரர் துந்துபி முழங்க, அரம்பையர் நடிக்க, அந்நாட்டுக் கற்பகப் பூமாரி பொழிய, வசிட்டர், வாமதேவர், முதலிய இருடியர்கள் எழில்மறை முதலியனவோதப், பதினெண் இசைக் கருவிகள் பலமாய் இசைத்திட, விதிப்படிச் சந்தனக்காப்பணிந்து, நாகேச்சுரப்பெருமானையும், அம்மையாரிருவரையும்வீதிவலஞ்செய்வித்து மனநிறைவாக இனிய அத்திருநாளைக் கொண்டாடினன். வந்தவர் அனைவர்களுக்கும் அன்னம், ஆடை, அணிகள் முதலியன வழங்கி அவர்களையுங்கொண்டாடினன். அதனால் அவன் தீநாற்றமாறி நறுமணங்கமழப் பெற்றனன். தன் அமரச் சுற்றத்துடன், பெருமான் பெருமாட்டியாகிய இருவரிடத்தும் பிரியாவிடை பெற்றுத்தனது வெள்ளை யானையின்மீதேறி வானுலகு மகிழ்ந்து சென்றனன். இன்னும் இவ்வாறே ஒவ்வொரு ஆண்டும் தைத் திங்கட் பிறப்பில் முதலில் மாலைக்காலத்தில் மகிழ்ந்து வந்து அவ்வாறே பூசித்து மகிழ்ந்து போகின்றனன். இத்திருநாள் வரலாற்றைச் சொல்வோர், கேட்போர் எவரும் எண்ணிய நலங்கள் எய்தப்பெற்று இன்புறு நிற்பரென்பது.

திருச்சிற்றம்பலம்.

11-வது இந்திரன் சந்திரசேனன் வரலாறுகேட்டுச்சந்தனத் திருநாளியற்றிய படலம் முற்றிற்று.

## 12-வது கௌதமர் தவத்திற் கிந்திர னிடையூ றியற்றின படலம்.

### திருச்சிற்றம்பலம்.

உமையே! கௌதமர் சிவவழிபாட்டாரில் அடைந்த பேற்றை உனக்குச் சொல்லுவன். ஒருமைப்பட்ட மனத்துடன் உற்றுக் கேட்பாயாக வென்று சிவபெருமான் கூறுவாராயினர்.

ஒரு நாள் மிதிலைக்கண்மையில் ஓர் வனத்தில் சொல்லுதற் கரிய பெரும் புகழ்வாய்ந்த அறவோரான கௌதமர் அகத்தவளான அகலிகையோடு அரும்பெருந் தவம் இயற்றுவான் றொடங்கினர். பிரமவித்தை யென்ற மெய்க் கல்வியை முற்றுங் கற்றவர்; வேதம் அங்கம் முதலிய நூல்களின் நுண்ணறிவு வாய்ந்தவர்; சிவ வழிபாட்டை அன்பிற் செவ்வனே செய்பவர்; அடங்கிய குணமமைந்தவர்; சிவபெருமான் றிருநாமங்களையே செந்நாவில் வரச் செய்பவர்; ஐயந்திரி பறியாமை யென முக்குற்றங்கள் முழுதுங் களைந்தவர்; காம, வெகுளி, மயக்கங்களை யறவே ஒழித்தவர், எஞ்ஞான்றும் அகத்திலின்ப மணுகப் பெற்றவர். ஏழாயிர மாண்டு காலங் கடந்தவர்; இத்தகைய மாணுக்கர்கள் சூழநின்று,

> ஒன்றதின் சார்பிற் சார்வ ரொருகுண முருவ மில்லார்
> துன்றிய குணமோ டுருவர் தூய்வடிவின்ப மாவார்
> நின்றநல் யோக ராலே நினைத்திடத் தகுவர் யோகர்
> ஒன்றொரு பிறப்போ வில்லார் உலகினிற் சாரா ரெம்மான்.

> பிறவியே நாளங்கல்விப் பிறங்குகோங் கிருநான் கிதழோ
> டுறவுய ரருளாக் கலையே யுலாவுநல் லல்லி யாக
> வுறவிரண் டிலதாம் பொருட்டி னுயிரக முண்டகத்தி
> னறவென மணந்தே நிற்பர் நயந்துதந் தமரோ டெம்மான்.

என்று இவ்வாறே நினைந்து அப் பெருமானுகிய மதுவைத் தெவுட்டுற வுண்டு பித்துடையார் போற் களித்துக் கண்டனவெல்லாம் பொய்யென நினைந்து வேறிடத்து நினைவொன்று மில்லாமல், யானே அப்பரம் பொருள்; யானே அந்த இன்ப வுருவம்; இதில் ஒரு சிறிதும் ஐய மில்லை யென்றிவ்வாறு அம்மாணவர் குழாங்க

எல்லோர்க்கும் இனிதெடுத்துரைத்து, எப்போதும் இரண்டறக் கலந்து நிற்றலாகிய கடலில்மூழ்கினர். அங்ஙனமூழ்கினும் எல்லாக் குணங்களும் இயல்பிற் பெற்றவளும், எல்லா வுறுப்பினும் எழில் நிரம்பினவளுமாகிய அகலியையை அடைந்த கௌதமமுனிவர், முதிர்ந்தவராயிருப்பினும் நீரில் மூழ்கல், சிவபூசை, சபம், ஓமம், அத்துவிதவுணர்ச்சி, ஸ்மிருதி, வேதம், சாஸ்திரம், முதலியஆராய்ச்சி ஆகிய வெல்லாமியற்றுகின்ற எக் காலத்திலும், அகலியை யென்றே சொல்லிக்கொண்டு அவளையே நினைத்து அவளால் சொல்லப்பட்டதே சத்தியமெனக்கருதி, அவள்சொல்லுவன அனைத்துந் தனக்கு இதமெனவே நடத்தி வந்தனர்.

இவ்வாறு அளவிலாக்காலம் கடந்தன. ஒரு நாள் பனிக் காலத்தில் மார்கழித்திங்களில் இக் கௌதமர் தவத்தால் வருத்தமுற்றசுரர்கள் எல்லோரும் இந்திரனை நோக்கி இமயவர் அரசே! கௌதமர் தவத்தில் பெரியராயினும் எஞ்ஞான்றும் மாதர்கூட்டுறவிலேயே மாதவத்தை நிலைநிறுத்துகின்றார்

ஆயினும், மிதிலா நகரத்தின் அண்மையிலே உபவனத்திலே எவ்வகையான பயனையும் பயக்கக் கூடிய அத்துாய நிலத்திலே தம்மாணவர் குழாங்களுடன் எப்போதும் எல்லாவற்றினும் மேலான இன்பவமிர்தத்தை யேற்றுண்டு கொண்டே இந்திரபதவியை இச்சித்தே தவஞ்செய்யா நின்றார். இதனால் இத் தவநிலையார்க்கு யாம் இடையூறு இயற்றியிடல் வேண்டும் என்றனர்.

அது கேட்ட இமயவர் வேந்தன், சிந்திப்பானாயினன். இப்போது அதற்கு என்செய்யலாம். தவமுனிவர்களும் விரும்பத்தக்க அரம்பையர்களை யனுப்பலா மெனில், அரம்பையரினும் மிகுந்த இன்பஞ் செய்யத்தக்கவளும், மூன்றுலகையும் வென்ற அழகுடையவளும், இளமையும், பெருத்துயர்ந்த தனங்களையு முடையவளுமாய அகலியை யென்பாள் அம்முனிவருக்கு மிகப் பிரியமாய் நிற்கின்றாள். அம்மாதின் கடைக்கண் ஒன்றாலேயே, நீர் சருகு, காற்று, முதலிய உணவுடைய முனிவர்கள் ஊசிமுனையில் உருவநின்று தவமியற்றுகின்றவர்களே யாயினும், போகம் நுகரத்தக்கவர்களே யாவார்கள். அம்மட்டோ, உருப்பசி முதலிய தேவதாசிகளும் அம்மாதினைக் கண்டவளவில் தலை

குனிந்து நடப்பார்கள். அம்மாதின் குணத்தையும் அழகையுங்கண்டால் தவத்தால் உடல் வலியின்றி இந்திரியத்தளர்ச்சியுற்ற முனிவர்களே யாயினும், முழுது முடல் வலியும் இந்திரியத்தேர்ச்சியும் பெற்று இன்புறுவார்கள்.

ஆகையால் விண்ணகரிலுள்ள இத்தேவதாசிகளை விடுப்பதால் யாதொரு பயனும் எமக்கு விளையாது. அக் கௌதமர் தவத்தைத்தடுக்கு மாறென்னை என்று ஆராய்ந்தனன். அவ்விந்திரன் பின்னர் நாமே முயன்று சென்று இக்காரியத்தை முற்ற முடித்தல் வேண்டும். மறையவனுக் "குடலிற்பாதி மனையா ளென்று கூறப்பட்டமையால் அம் மனையாளுக்குக் குறை நேர்ந்தால் அவர் முழு உடலிற் குறை நேர்ந்ததாகு மன்றோ! இதில் ஐயமில்லை. எவனுக்கு இல்லாள் தூய்மை யில்லையோ அவன் இல்லம் இற்றதேயாம். எவன் மாசுள்ள மனையாளோடு வாழ்வானோ அவன் குலம் முதலியன அறவே ஒழியும். ஒருவன் இல்லறக்கிழத்தி கிருதயுகத்திலே பிறனால் பார்க்கப்பட்டாலும் திரேதாயுகத்தில் காமவேட்கை மொழிகளைப் பிறரால் அவளோடு மொழியப் பெற்றாலும், துவாபரயுகத்திலே அவளைப் பிறர் காம வேட்கை கொண்டு கையாற் றொடினும், கலியில் அவளோடு ஒரு முறை பிறர் புணர்ந்தாலும் மாசுடையளாவாள். இத்தகைய மாசுற்றவள் எவ்விதத்திலும் தீயளே. எங்ஙன மென்றால், அவள் இல்லிலிருந்து செய்யுங் கடவுட்காரியங்கள், பிதிர்க்காரியங்கள், எல்லாமும் பயனற்றனவாம். அவள் தொடப்பட்ட பொருள்கள் சுடலையில் இடித்த அவல் போலவும், நாயால் தொட்ட நலமில் பொருள் போலவுமாம். அவள் விரும்பத்தக்க கணவரும், இல்லில் அவ்வில்லாளைத்தொட்டுச்செய்யும் ஸ்நானம், சந்தி, ஜெபம், தபம், ஓமம், வேதமோதுகை, பிதுர்த்தருப்பணம், எல்லாமுமே அவளால் இழக்கப்பெற்றவரேயாவர். நற்குடிப்பிறத்தல், சிவபூசை, திருநீறு கண்டி புனைதல், எஞ்ஞான்றும் அத்துவிதப்பயிற்சி, சிவநாமங்களைச்சிந்தித்தல் முதலான இவற்றுள் யாது செய்தானாயினும் அம்மாசுடைய மனையாளுடன் கூடின், அனைத்துமில்லாதவனாமென்பது உறுதி. எந்த இல்லறக் கிழத்தி எவனுக்குத் தூயளாக அமைவாளோ அவனுக்குப் பிறப்புத் தூய்மைமுதலிய அந் நலங்களில் ஒன்றேனும் இல்லையாயினும் அனைத்தும் பெற்றவனாய்

இறைவனுகிய சிவனேயாவான். இதில் ஐயுற வொன்றுமில்லை. ஒருவன் மாசற்றவளான மனையுடன் கூடின், அவன் செய்த அறமனைத்தும் சாம்பலிற் செய்த ஆகுதியே யாகும்.

ஆகையால் அழகும், மாசற்ற மனமும், கணவன்பாலன்பும் மிகுந்த வாழ்க்கைத் துணையாயிருக்கின்ற அகலிகை என்பாருடைய தூய்மை தொலைந்தால், அக் கௌதமருக்கு எல்லாந் தொலையுமென்று எண்ணி, எவ்வாறு அவள் தூய்மை தொலைப்பது? அவளை எங்ஙனம் நான் அடைவேன்? என்று சிந்திப்பானுயினன். அகலிகை எப்போதுமே கொண்டவனோடு கூடியுள்ளாள். அக் கொண்டவனுகிய கௌதமனுல் யான் பார்க்கப் படுவனேல் பயனற்ற சாம்பலாவேன். அவள்தான் என் செய்யக் கூடும்? அக் கௌதமருடைய மாணவர்களால் பார்க்கப்பட்டாலும் யான் சுடுசொல்லுக்காளாவனென்று இவ்வாறு ஆராய்ந்துள்ள இந்திரனுக்குத் தன் விதிப்பயனுல் ஒரு உணர்ச்சி உண்டாயிற்று. அஃது என்னையெனில்?

அவ்வமரர் வேந்தன், "யானே அம்முனிவர் வடிவங்கொண்டுசென்று, அம்முனிமனையாளை மாசுடையளாக்குவேன்" என்று துணிந்து கொண்டனன். அவ்வாறு துணிந்த இந்திரன் கௌதமர் இளைப்பாறுவதாகிய ஆச்சிரமமென்னும் இல்லம் புகுந்தனன். அது சமயத்தில் கௌதமர், அகலிகை, மாணவர்யாவரும் ஆங்கே தூங்கினர். யாதொரு ஓசையும் ஒய்ந்திருந்தது. அவ்விடத்து மகிழ்ச்சியுடன் சென்ற இந்திரன் இந்த நடுஇரவில் மிதிலையின் மிகத் தூய்மையான இவ் வனத்தில் எங்ஙனம் எனதிச்சை நிறைவெய்துமென்று ஆராய்ந்தனன். அவன் பின்னர்க்கோழியாய்க் கூவினின்றான். அதைக் கேட்டவளவில் கௌதமர் விழித்தெழுந்து கையிற்கடத்தைக் கொண்டு கங்கையைக் கருதி நடக்கத் தொடங்கினர்.

தொடங்கும்போது தலையில் இடித்தது. கால் இடறிற்று. இவற்றை நோக்கிச் சிறிது மீண்டு திண்ணையிலிருந்து, வேள்வி மண்டபம்போய் வலஞ்செய்து வணங்கி, மீண்டுங் கங்கைநதியைக் கருதி அடுத்தார். முனிவர் சென்றதை நோக்கின இந்திரன் தமது வாகனமாகிய மேகங்களை அழைத்து விரைவில் மழை பொழிவித்தான். மழையாலுங் காற்றாலுந் தாக்குண்ட மாமுனி

வர் மின்னலாலும், இடியாலும், மிகுதியான வருத்த முற்றனர். என் செய்வார் பாபம்!

அது அமயம் அம்முனிவர் வடிவு கொண்ட இந்திரன் என்பான், பள்ளியில் படுத்திருந்த அகலிகையை யென்பாளை அடுத்துக் கையால் தொடவே, நித்திரை விட்டு எழுந்த நங்கையை முறுவல் பூத்தமுகத்துடன் வடிவுடையநல்லாய்! நின்னிடத்தில் இமையவர் வேந்தனுகிய யான் புணர்ந்து நோாத இன்பம் நிகழப் பெறுவான், வேட்கையுடன் விரைந்து முனிவடிவாகி வந்தனன்; என்னை யேற்றுக் கொள்ளுதல் வேண்டும். இதுதான் எனது வேண்டுகோள்; என இதமுடன் கூறிக், கொக்கோக நூல் விதிப்படிப் பல வகையான காமப்புணர்ச்சி விளையாடல்களைச் செய்ய, அதில் மகிழ்ந்து ஐயமுற்ற அகலிகை, இந்திரனை நோக்கி நீர் யார்! உண்மை புகல்வீராக; இல்லையேல், இன்றே சபிப்பேன் என்று கூறியிடக் கண்ட இந்திரன், நான் வானவரரசு; என் பெயர் இந்திரன்; நின்பால் போக இச்சை கொண்டு போந்தனன் என்றலும், இருவரும் அச்சத்தோடுகூடியிடக் கௌதமர் தவத்தைக் கலைப்பவனும், வானவர்க்காக்கம் வளர்ப்பவனுமான இந்திரன், அகலிகையோடுங்கூடுங்கூட்டத்தைக் குறித்து அமரரனைவரும் அகமகிழ்ந்தனர். இந்தக்கௌதமர் மனைபான அகலிகையின்பால் இந்திரன் வரவைக் கேட்பவர் சொல்லுவோர் யாவர்களும் தத்தங் குற்றங்களினின்று நீங்கி இன்புறுவார்கள் என்பது.

திருச்சிற்றம்பலம்.

12-வது கௌதமர் தவத்திற் கிந்திரன் இடையூறியற்றிய படலம் முற்றிற்று.

## 13-வது கௌதமர்க்கு வியாசர் அருண்மொழி பகர்ந்த படலம்.

திருச்சிற்றம்பலம்.

---

இரண்டு நாழிகை கடந்தபின்னர் மாமுனி மனையாளாட அகலிகை புன்முறுவலோடு விண்ணரசைநோக்கி விண்ணவரேறே! நுமக்கு வணக்கஞ் செய்வன். முனிவர் வருமுன்னரே விரைந்து ஏகுக. அவர்காண்பரேல், அகலாத சாபத்தை அளித்திடுவார்.

அதற்கு முன்னரே நின்வடிவத்தை மாற்றுக. அமராவதியை அணைந்திடுகவென்று விடை கொடுத்தனள். அதுகேட்ட இந்திரனும் அப்பன்னகசாலையை அகன்று வெளியே விரைந்து போவானாயினன்.

கங்கையைப்படுத்த குடக்கையரான முனிவர் இந்திரன் ஏவலால மேகங்கள பொழிந்த மிகு மழை, மின்னல், இடி, இருள், காற்று, குளிர், முதலியவற்றால் வருத்தமுற்றனர். அங்ஙனம் வருத்தமுற்ற அமயத்தில் இங்ஙனம் நிகழ்தற்குக்காரணமென்ன? நடு இரவில் கோழியோ, கூவியது. அதனை ஆராயாமல் நாமும் நடந்தனமே. இங்கு நிகழ்ச்சியோ பலவாறாக இருக்கின்றது. இப்பாதி இரவில் பன்னகசாலையில் என்ன நிகழ்ந்திருக்கின்றதோ? பகுத்தறியோமே. நமக்கும் இந்தக்குளிர் தாங்கவில்லையே. குளிர் நம்மை நிரம்பவும் வாதிக்கின்றதே. நமது இயல்பு இப்படியாயின் பன்னகசாலையிலே அகலிகை இப்பெருங் குளிரால் என்ன அரும்பாடுபடுவாளோ? அறியேமென்று நெகிழ்ந்து நினைந்து பன்னகசாலைவாயிலில் வந்து பார்ப்பாராயினர். அங்ஙனம் பார்க்கவந்த கௌதம முனிவர்க்குப் பயந்து உடல் நடுக்கங்கொண்டு அச்சத்தோடு மெல்ல மெல்ல நடந்து தன்னூரை நயந்து முனிவர் வடிவத்தோடு செல்லும் இந்திரனை நோக்கிக் கௌதமர் கோபத்தால், புருவம்நெரியக் கண்சிவந்து நெருப்பெழ மூக்கில் உயிர்ப்பான புகைமுழுதுமுலாவப் பற்களைக் கடகடவெனக்கடித்து இந்திரனுதலை அறிந்து ஏடா இந்திரா! என்ன காரியஞ்செய்தனை? ‘பிறன் கேடுசூழற்க, சூழின் அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன்கேடு” என்பதனையும் அறியாது கேடுசூழும் நினைவுடையனாயினை! நீ எஞ்ஞான்றும் தூய்மையான எனதில்லிடத்தையும் இல்லாளாகிய என்னன்புக்குரிய அகலிகை என்பாளையும் மாளா மாசுபடச்செய்தனையே! இதனால் இப்போதே நினைக்குச் சுடுசொல் வழங்குகின்றேன் பெறுக! அயன் மகளிரது மெய்யுறு புணர்ச்சியில் வேட்கை யுண்டாதற்குக் காரணம் நினது விதையென்னும் விருடணமும் அழகிய வடிவமுமேயாம். ஆதலால் அவற்றுள் விதைதான் விழுந்து விடுக. இழிவான குறியில் இச்சை வைத்தமையால் அவ்வடிவமுழுதும் அக்குறியேயாகுகவென்று சுடுசொல்லாற் சுட்டனர். அச்சுடு

சொல்லைப் பெற்ற இந்திரன் அம்மாதவர் மலரடிகளில் புகலெனப் புகுந்து விழுந்து நுதி செய்து அச்சுடு சொற்கழுவாய் வழங்கக் கேட்டனன். அதுகண்ட கருணைக்கடலாகிய அம்முனிவர் பெரு மான் அதற்குக் * கழுவாயுங் கழறுவாராயினர்.

அம்முனிவர் பெருமான் தன் வாழ்க்கைத்துணையான அகலி கையின் அரியவினையை மனத்தில் வைத்துக்கொண்டு இந்திரனை நோக்கிவிண்ணவரரசே! நின்னால் நமக்குக்கேடு விளைந்ததே யெ னினும் நீ வணங்கித் துதித்து வேண்டினமையாலும், அற்பத்திற் காசைப்பட்ட நீ மூவுலகிற்கும் முன்னவனாக இருந்ததாலும் உன்வடிவத்தில் காணப்படும் பெண்குறிகள் அனைத்தும் நினக்கே அக்குறிகளாகத் தோன்றினும் அயலாருக்கு அரிய கண்களாகத் தோன்றுகவென்றருளினர்.

இந்திரன் மீட்டும் அம்முனிவர் பிரானை வணங்கித் துதித்து அடிகாள்! தேவர்களுக்கரசனான யான் தேவகாரியமாகவே வந்து, இச்செயலை அவர் பொருட்டாகவே இயற்றினேன்; ஆதலால் தயை செய்து பொறுத்தருளல் வேண்டுமென்று மீட்டும் பன்முறை வணங்கி விண்ணப்பஞ் செய்து வேண்டி நின்றனன். அதுகண்ட அந்தணர் பெருமான் விண்ணரசே! வானவர் பொருட்டே வந்து இச்செயல் செய்தனையென்றால், தேவர்கள் அனைவர்களுக்கும் தம் மனைவியர் மாட்டு, புதல்வர் இல்லாமற் போகுக. உன்னை இது முதல் ஆயிரங் கண்ணனென்று யாவரும் கூறியிடுகவென்று இந் திரனுக்கு அச்சுடுசொல் மாற்றங் கூறி விடை கொடுத்து விடுத் துத் தன் மனையாளிடஞ் சென்றனர். விண்ணோர் வேந்தனும் விரைந்து தன் அமராவதியை அடுத்தனன். பின்னர்க்கௌதமர் தம் மனைவியாகிய அகலிகை அச்சமுற்றுக் கலங்கியிருத்தலை நோக்கி மாதே! நீ அயல் ஆடவன் புணரும்போது களித்துக் கற்போற் கிடந்தமையால் கல்லாகக் கடவையென்று சாபம் வழங்கினர்.

அவ்வாறு ஆயிரமாண்டு கல்லாக இருக்குமளவில் விசுவாமித் திரருடன் இராம இலட்சுமணர் கால் நடையுடையராய் இவ்விடம் வருவார்கள், அது போது அவ்விராமன் காற்றூளி நின்னுருவில்

* நீக்கும்வழி

கலந்த மாத்திரத்தில் உன் பெண்ணுருவம் பெற்று என்னுடன் வருவை! என்று அச்சுடுசொல் மாற்றமும் வழங்கி விடுத்த இலந்தைவனஞ் சென்றனர். அவர் ஆங்கு வியாச முனிவனைக் கண்ணுற்று வணங்கித் தன் வரலாற்றை முற்றும் மொழிந்து

தூதனுக் கரசுந்துப்பினுக் குபயமதுலகுறு மக்களுக் கெங்கள்
நாதனுக் குரியநல்வழி பாடும்நல்லயோ கிகட்கெழுத் தஞ்சும்
காதலுக் குரியா ட்னக்குற கணவன் காண்குரு வினுக்குநற்கேட்போர்
காதலுக் குரிய தீயுமே யென்றுங்கருதுறும் வலியெனப் படுமால்.

அழுகையுஞ் சிறுவர்க் கழகியகன்று மாவிற்குத் தவமுநன் முனிக்கே
தொழுகையுந் தொண்டர்க் கிறகும்நற்புட்குத் துலங்குறு முயிர்தனைக் [குணவுப்
குழுமிய வேடர் தமக்கொரு கொலையுங் கொற்றவன் றனக்திருதோளும்
விழுமிய மறையும் அந்தணர் தமக்கு விளம்புறு வலியெனப் படுமால்.

புரியவாம் பொருளைப்பகர்வணி கர்க்குப்புகழ் தருவாணிப மொன்றும்
கரியவாங் களிற்றிற் கங்குசம் பரிக்குக் கலினமும் பயிர்களும் பூமிக்
குரியதாந் தடியும்முடவனுக் குயரும் உடல்பழுத் தவர்க்குரி யாளும்
அரியதாங்கேள்வி பயில்பவர் தமக்கும் ஆரியன்வலி எனப்படுமால்.

இவைபோல் எனக்குத் தாங்களே தாய், தந்தை, குரு, சுற்றம் நண்பர் முதலான எல்லாருமாக விளங்குகின்றீர், ஆகையால் ஆயிரம் ஆண்டளவும், யாதாமோரிடம்போய்த் தவஞ்செய்தால் என்ன பலனையடைவார்களோ அந்தப் பயனை ஒரு கணப்பொழு தில் அல்லது அரைக் கணப்பொழுதில் அடையத் தகுந் தவத்தை அடியேனுக்கு அருளிச் செய்தல் வேண்டும். இன்னும் மாணுக் கனுன எனக்கு வந்த வெகுளிக்குக் கழுவாயாதலும் வேண்டு மென்று விண்ணப்பஞ் செய்தனர்.

அதுகேட்டருளிய வியாச முனிவர், ஒரு மூன்றே முக்கால் நாழிகையளவாகப் பேசாது இருந்து, பின் வருவாயறிந்து அரு ளிச்செய்வாராயினர். கௌதம முனியே நின் வெகுளிக்குச் சாந்தமும், கழுவாயும் உண்டாகத் தகுந்த தலத்தைச் சொல்லு வன் கேட்பாயாக. நின்னைச் சார்ந்தோர் யாவருக்கு நிலையான இனபதனை யெய்துவிப்பதும் எவ்வுயிர்க்கும் எண்ணியன அளிக் கும் இயல்புள்ளதும், வீட்டின்பத்திற்கு வெண்முளையானதும், ஆயுளையளவில்லாமல் அளிப்பதும், இப்பூ தலக்கைலாசமானதும்,

முதல் முறையிலேயே ஒரு முறை கண்ட அளவில் வடிவமுத்தியை வழங்குவதும், அத்தலமேயாகும். அது தான் சண்பகக்காடு என்று கூறப்படும். இன்னும் அது நாகர் பெருமானால் நன்கு பூசிக்கப்பெற்றதாதலின் இம்மூவுலகும் நாகேச்சுரமென வழங்கா நிற்கும் கிரிகன்னிகை என்னும் மலைமகளால் வழிபாடியற்றப் பெற்றமையால் கிரிகன்னிகை வனமெனப் பெயர் பெறும். பல மாமுனிவர் பலகாலுந் தவம் பயின்று பாவத்தை நீக்கிப் பயன் பெற்றமையால் தவவனமெனப் பெயர்பெறும். அந் நகரில் சண்பக மரமானது இறைவனருளால் கையிலையினின்றும் வரப்பெற்று அப்பெருமான் அருள்வடிவாய் விளங்குதலின் அதைக்காணல், தொடல், வலம் வருகை, அதனடியில் வாசஞ் செய்கை முதலிய வற்றால் எப்பாவங்களையும் இறைப் பொழுதில் அறவேயழிப் பதென்பதறிக. நந்திமுதலான அன்பர்பொருட்டுத் தரப்பெற்ற சூலதீர்த்த முதலிய புனித நீர்நிலைகள் பல சூழப் பெற்றுச் சித்தி தலத்திற்கு வடக்கிலும் திருந்து தேவன் குடிக்குத் தெற்கிலுமாகக் காவேரிக்கரையில் விளங்கா நின்ற அத்தலம் இறைவனுக்கு மிகுந்த அன்புவாய்க்கப் பெற்றது.

அத்தலத்திற் சென்று சூலதீர்த்தத்தில் மூழ்கிச் சான்று கணபதியையும், நாகநாதனையும் மங்கைபாகதலைவரையும் மலைமகளையும், மலைமுலையாளையுங் கண்டு களித்து இன்ப அன்புடன் இடைவிடாது வழிபாடியற்றி அப்பெருமானை இடபத்தேவர் இரு கொம்பினிடையால் இன்புறக்கண்டு சண்பகமரத்தின் பாற் சென்று சிறப்பாக ஐந்தெழுத்தோதிப் பன்னிரண்டு திருப் பெயர்களால் வில்வங்கொண்டணிந்து சிறப்பாக, நறும்புகை, திருவிளக்கு, பாயசம் முதலியவைகளை அம்மரத்திற்குக் கொடுத்து வழி படுவையேல் இராமனால் நின் மனையாளுக்கு முன்னுருவம் வரப் பெற்று அவளால் அரும்பெரும் பயனையடைவாய். கருதிய கருமமுங் கைகூடும் என்று இவ்வாறு கூறியருளிய வியாச முனிவர் அருண்மொழியை அன்புடன் கேட்டு அக் கௌதமர் மகிழ்வாராயினர். இக் கௌதமர் அருண்மொழி கேட்டவரலாற்றைக் கேட்பவர் சொல்லுவோர் எல்லாச் சிறப்பையும் எய்தப் பெற்றின்புறுவரென்பது.

திருச்சிற்றம்பலம்.

13-வது கௌதமருக்கு வியாசர் அருண்மொழி பகர்ந்த படலம் முற்றிற்று.

# 14-வது அகலிகை சாபமகன்ற படலம்

*திருச்சிற்றம்பலம்.*

கௌதம முனிவர், வியாச முனிவரது அருண்மொழியைக் கேட்டு அம்முறையே சண்பகக்காடு போந்து பற்பல மரச் செறிவுகள், பறவைகள், மீன்கள், தாமரைகள், நெய்தல், கோங்கு முதலியவைகளால் அணிசெய்கின்ற அத்தலத்தைக்கண்டுமகிழ்ந்து பல மணிகளால் அணிசெய்த படிக்கட்டுக்களையுடைய சூலப் புனித நீரில் மூழ்கி, எட்டு நாகங்களையும் எழில்பெற இறைஞ்சி, நறும் புகை, விளக்கு முதலியன இட்டுத் தூய்தான மூழ்வெள்ளரிசிகளால் அர்ச்சித்துச் சூலநீர் முதலியவற்றை வலம் செய்து சான்று பிள்ளையாரை வழிபட்டு நந்திபெம்பெருமானிடம் விடை பெற்று அன்புடன் நாகேசப்பெருமானை நிலமுறப்பணிந்து நீராட்டித் திருவமுது, நறும்புகை, திருவிளக்கு நிகழ்வித்து அறிக்கைசெய்து அன்புடன் பணிந்து, அர்த்தநாரீசரான மங்கைபாகத் தலைவரையும், மலைமகளையும், மலைமுலையாளையும் வழிபடு முறையால் வழிபட்டு அப்பெருமான் திருவடிவாகிய சண்பகமரத்தடி வந்து நறும்புகை நல் விளக்கு எடுத்துப் பாயசம் அறிவித்துப் பன்னிரண்டு திருப்பேர் கொண்டு வில்வ அர்ச்சனை செய்து அம்மர நிழலில் தாமரைப் பீடத்திருந்து முன்முறை ஆசமனஞ் செய்து கையில் பவித்திரம் பூண்டு தாபனுக்கீழ்த் திசைமுகமாக இருந்து நாகேசனையும் மலைமுலையாளையும் மனத்தில் நினைத்து நியாசமும், தியானமுஞ் செய்து, மாமந்திரத்தை உருவேற்றினர். ஒவ்வொரு நாளுந் தவறாமல் ஆயிரமாண்டு இடையூறில்லாமல் தவம் புரிந்து அந்நகரிலேயே அமர்ந்தனர்.

இங்ஙனங் கௌதமர், தவஞ் செய்கின்றபோதே வியாச முனிவர் தமக்கு விளம்பியருளிய அருண்மொழியை மனத்திற் கொண்டு மலைமுலையாளுக்குத் தைத்திங்கட்பிறப்பில் புழுகுக்காப் பிட்டும், மலைமகளுக்குச் சித்திரைத் திங்கட் பிறப்பில் சந்தனப் பெருவிழா இயற்றியுங்கார்த்திகை மாதத்தில் ஞாயிற்றுக்கிழமைக் காலையில் சூலதீர்த்தத்தில் மூழ்கிச் சர்க்கரை, எள், புதிய அன்னம், கோதுமை, முதலியவற்றைத் தானஞ் செய்து காணிக்கையு

டன் வெற்றிலைப்பாக்கு விருப்புடன் அளித்தும், அன்புடன் அஞ்ஞாயிற்றுக்கிழமையிலே அருள் வடிவாகிய நாகேசப் பெருமானை வழிபட்டும், அம்மதியில்பெருந்திருநாளெனப்படும் மகோற்சவஞ் செய்தும், அத்திருநாள் முடிவில் இறுதி முழுக்கு முழுகியும் நித்தியநைமித்தங்களாகிய இவற்றையெல்லாம் மனமகிழ்ச்சியோடு நியமமாக நிகழ்த்திவருவாராயினர். இங்ஙனமாறே அளவில்லாத ஆண்டுகளாயின.

இது இங்ஙனமாக அலரவன் முதலிய அரிய பெரியவானவர்களால் வணங்கி வேண்டப்பெற்றவாறு இராவணனையிலாதழிக்கத் திருமால், திருவுளம் இரங்கித் தசரதனுக்குத் தகுந்த கௌசலையின்பால் இராமனாய் இனிது தோன்றினன். அப்போதே தனது கூறாய்த் தோன்றிய இலட்சுமணர், பரதர், சத்துருக்கநர் ஆகிய இந்த இளைஞருடன் எழில்பெற விளங்குவாராயினர். இவ்விதம் விளங்கிநின்ற ராமர் விசுவாமித்திரர் வேண்டுகோளுக்கு இணங்கி இலட்சுமணர் தம்முடன்வர அம்முனிவரோடுசென்று சித்தாச்சிரமத்தில் அவர் இயற்றிய யாகத்தை இனிது நிறைவெய்தச்செய்து சனகன் இயற்றும யாகத்தை அவனால் விடுக்கப் பட்ட தூதர்களால் அறிந்து பல வேதியர்கள் சூழத் தம்பியாகிய இலட்சுமணர் தம்முடன்வர, அவ்விசுவாமித்திரமுனிவர் முன்செல்லப் பலவண்டி மக்கள் பெருக்கமாக எழுந்து மிதிலைநகரை நோக்கி விரைந்து போவாராயினர்.

அங்ஙனம் போகுமளவில் மிதிலை நகரத்தின் அண்மையிலுள்ள கௌதமர் ஆசிரமங் கிட்டியது. அது கண்ணுற்ற இராமர் விசுவாமித்திரரை நோக்கி "ஐயா! மக்கள் ஒருவரேனுமின்றியும், ஓமம், தூபம், வேதஒலி முதலியனவற்றுள் ஒன்றேனுமின்றியும் ஒய்வுற்றிருக்கிறது. இவ் வாசிரமம் இங்ஙன மாவதற்குக் காரணம் இசைத்தல் வேண்டும்" என்று கேட்க, அம்முனிவர் முன் நிகழ்ந்தன யாவும் முறையே புகன்றனர். அதைக் கேட்டு இராமர் புன்முறுவல் பூத்திடக் கண்ட விசுவாமித்திர முனிவர் கல்வடிவாகிய அகலிகையென்பாளைக்காணவேண்டிய இராமபிரானை ஆண்டு இனிதாக அழைத்துச் சென்றனர். அதுபோது அக்கல்லில் இராமர் தம் காலை வைத்திடவே அக் காலால் தூய்மையடைந்த அகலிகை எழில்மிகுந்த இனியவுடலுடன் கூடித்தேவ

மாயை திருவுருவெடுத்தாற் போலவுந் தூளியில் படுத்துத் தூங்கி யெழுந்தவள் அத்தூளினையத் துடைத்து நிற்பதுபோலவும் அழகி யாய் எழுந்து அங்கண் நின்ற இராமரைக் கண்ணுற்று வணங்கிக் கை குவித்து நின்றனள்.

அவவாறு வணங்கிய அகலிகை மாதின் வடிவத்தைக்கண்ட யுழகராகிய இராம இலட்சுமணர் இருவரும்,

அன்னவடி வமரழகோ அறத்தினுரு விளைவழகோ
பொன்னிய னற் றண்டாமோ புயறடித்தின் கொடியாமோ
துன்னியபன் மயிற்சாயல் துலங்கியநல் லெழில்வடிவோ
வின்னவடி வெனலரிதே யிவ்வகலி கையடிவே.

என்று அதிசயித்து நின்றனர்.

இவ்வாறு வியக்க நின்ற அம்மையாகிய அகலிகை அவ்விரு அரசிளங் குமாரர்களையும் வலஞ் செய்து வணங்கி நின்றனள். அதுகண்ட இராமர் இரக்கமுற்று அந்த அம்மையின் வழி பாட்டை மனத்தினால் பெற்று மாமுனிவர்களுடன் சண்பகக் காட்டில் அன்பாக நாகேசப் பெருமான் திருவடியைப் போற்றுங் கௌதமரைச் சிந்தையில் சிந்தித்தனர். அக்கௌதமரும் அந்நா கேசப் பெருமான் திருவருள் திகழப் பெற்றுத் தமது ஆச்சிரமத் தில் இராமர், இலட்சுமணர், விசுவாமித்திரர் முதலியவர்களோடு வந்து அருள் செய்யத் தமது மனைவியாகிய அகலிகை முன்னுரு வம் பெற்று விளங்குவதை நாகேசப் பெருமான் நல்லருளால் அறிந்து விரைந்து விதிப்படி நாகேசப் பெருமானையும் அம்மையா ரிருவரையும் வழிபட்டுப் பிரியா விடைபெற்றுச் சித்தபாது கையில் அந்நகரை வலம் வந்து மிதிலை ஆச்சிரமத்தில் விரும்பி நின்ற இராம இலக்குமணர்களோடு விரவிய உவகை நண்பராகிய விசுவாமித்திர ரை அன்பாற் றழீஇ இன்புற்றனர். இராம இலக் குமணர்களும், கௌதமராகிய முனிவர் பெருமானை முன் வந்து வணங்கினர். அங்ஙனம் வணங்கி அஞ்சலித்த ஆங்கையரான இராம பிரான் விசுவாமித்திரர் திருவுள்ளக் குறிப்பை யறிந்து அம்முனிவர் பெருமானோடு அகலிகையம்மையை மருவி யமரச் செய்தனர்.

அப்போதே யதையறிந்த தேவர்கள், கந்தருவர், கின்னரர் இவர்கள் பூமழைபொழிந்தனர். தேவதுந்திபிமுழங்கின. அரம்பை திலோத்தமை முதலியோர் அருமைபெற நடித்தனர். அவ்விருவர் களும் இராமர், இலக்குமணர் விசுவாமித்திரர் ஆகியஇவர்களுக்கு விருந்திட்டு அன்புடன் முகமனளித்து மகிழ்ந்தனர். கௌதமர் இம் மகிழ்ச்சி யெல்லாம் நாகநாதனருளாம் வந்தன வென்று அக லிகையாகிய இல்வாழ்க்கைத் துணையோடு மீட்டுஞ் சண்பகக் காட்டைச் சார்ந்து முறைப்படியே அம்மையாரிருவரையும் நாக நாதக் கடவுளையும் பல்வகைச் சிறப்புக்கள் பலசுப்பண்ணி வழிபா டியற்றி மகிழ்ந்து வாழ்ந்தனர்.

அக் கௌதமரிடம் விடை பெற்றுக் கொண்ட விசுவாமித் திரர், இராம இலக்குமணர்கள், மிதிலையிற்சென்றனர். அவண் இரா மர் அருமைத் திருவாகிய சானகியைப்பெற்று மணம்பெற்ற தம்பி மார்களோடு அயோத்தி நகரடைந்து இன்புற்று வாழ்ந்தனர். இதனைக் கேட்பவர் சொல்வாரெவரும் பெரியாரைப் பிழைத்தல் முதலிய குற்றங்களினின்று நீங்கி இறைவன் திருவருளைப் பெற் றின்புறுவ ரென்பது.

திருச்சிற்றம்பலம்.

14-வது அகலிகை சாபமகன்ற படலம் முற்றிற்று.

---

## 15-வது இருதுபன்னனுடன் நளன் வரவு கூறிய படலம்.

திருச்சிற்றம்பலம்.

சிவபிரான், நற்கண்ணியாகிய உமையை நோக்கி நாகநாதனு டைய பெருமையை இன்னும் சொல்லுகின்றேன். இதனை யாருங் கேட்டவளவில் எல்லா நலன்களும் இனிதே எய்தப் பெறுவர் என்று கூறுவாராயினர்.

நிடத நாட்டில் வீரசேன அரசனுக்கு அரும் புதல்வராய்ப் பிறந்தவன்; அடக்கம், பொறுமை, சீலம், அனுவும் பாபமின்மை,

மிகுபுகழ், பெருஞ்செல்வம், எவ்வுயிருக்கும் இதமே புரிதல், எச் செயலையும் எளிதாக வியற்றும் வண்மை, எவ்வுயிர்மாட்டு மிரக்க முடைமை, முதலிய நற்குண நற்செய்கைகளை நனியுறப் பெற்றவன்; விற்றொழில் முதலிய தொழிற் கல்வி முற்றுங் கற்ற வன்; வெற்றிக் கொள்கலனும் வெகுளியின்றி அந்தணராய ஆன்றோர் பலர்சூழ் இருப்பவன்; பெரியார்பால் பெருவிருப்ப முடையவன்; எல்லா வேள்வியும் இனிதே இயற்றி என்னுட்டர சரினும் மேலாய் அந் நாட்டை அழகுபெற ஆளும் நளனென் பான் ஒருவன் உளனாயினன்.

அந் நளன் ஒரு நாள் மாலைப் பொழுதில் கை, காலிரண்டுங், கழுவிக் கடிக விரைந்து (மாலைக்கடன்) மாலைவணக்கம்புரிய மனத் துடன் [illegible] டு செல்லத்தலைப்பட்டனன். முன் பிறப்பில் சிவத் தொண்டர்பாற் செய்த தீவினை யுருத்த, தனது வலதுகாலில் பின்புறம் நன்கு கழுவப்படாமையாலுற்ற, வழுக்கண்டு பன் னிரண்டாண்டு வருத்தக் காத்திருந்த கலி, அவ்வழுவாயிலாக அவன்பால் புகுந்தனனென்று சிவபிரான் அருளிச் செய்தனர்.

அது கேட்ட அம்மையார், சிவபெருமானை நோக்கி, எல்லா மறிந்த கருணைக் கொள்கலமே! இன்பமுண்டாக்குகின்றவனே! எம்பெருமானே! இந்நளன் தான் முற்பிறப்பில் சிவத்தொண்டர்பா லியற்றிய பெரும் பாபமென்னை? அதனைத் தேவரீர் அடியேனு க்கு அருளிச்செய்தல் வேண்டும் என்னும் விண்ணப்பஞ் செய்த னர். அப் பெருமான் அதனை அறைந்தருள்வாராயினர்.

இந் நளன் அப் பிறப்பில் ஆறலைக்கும் வேடனாயினன். எஞ்ஞான்றும் கையில் கத்தியும், வில்லுங்கொண்டு காட்டிற் சென்று நெறியில் நேர்வாரனைவருக்கும் அல்லல் செய்யும் மறத் தொழிலே பூண்டு மகிழ்ந்தவன். சிவ வழிபாடு சிறிது மில்லாத வன். ஒருநாளும் திருமால் திருக்கதை செவிக்கொள்ளாதவன். திருடர்களில் தெளிந்த மேலோன். வயிற்றை நிரப்பலே வழி பாகக் கொண்டவன். பார்ப்பார்க்கெல்லாம் பயத்தைச்செய்பவன். இதனால் இவன் (பயங்கரன்) வெருவுதரு வேடனெனப் பெயரும் பெற்றனன். ஒருநாள் அருங்கலை முற்றிய அந்தணராயுஞ் சிவ

நெறியதத்தலைவருமான மசமமையோர் சிலர் அந் நெறியே ஆறலைப் போர்க்கும், புலி முதலியவற்றிற்கும் அஞ்சியும், கல்லிலும் முள்ளிலும் கலக்கமுற்றும், வழியறியாமல் வந்தனர். அவர்களைக் கண்ணுற்ற இவ்வெருவுதரு வேடன் நமக்கு இவர் தாம் வந்தகப்பட்டரென மகிழ்ந்து பல மறவருடன் அப்பெரியார்களை அச்சுறுத்து அடித்துக்கொன்று அவர்கள் பொருள் முற்றும் அறவே பற்றிக்கொண்டு, அந்நடுக்காட்டில் வழிபாடு அற்றிருந்த மங்கை பாகன் ஆலயத்தில் புகுந்து இரவில் அப் பொருளைப் பங்கிட்டுக் கொள்ள விடியற்காலை வரை அக்கோயிலில் விளக்கிட்டனன். அவ் விளக்கொளி கொண்டு அதுபோது அவ்விரவுமுழுதும் அக்கோயிலிலிருந்து எல்லாப்பொருள்களையும் சமமாகப் பாகமிட்டுக் கொண்டு, வைகறைப்பொழுதில் அவ்வேடர்களோடு வீடுபோகப் புறப்பட்டான். அவ்வமயத்தில் அக்கோயில் மண்டபம் இடிந்து விழ, அதனால் அக்கள்வர்கள் எல்லோரும் அழிந்தனர். அவ் வெருவுதரு வேடன் ஒருவனே இறவாது எஞ்சி நின்றனன். அப் பொருள்கள் அனைத்தும் எடுத்து வியப்புடன் விரைந்து தனது வீடுபோய்ச் சேர்ந்தனன்.

பின்னர், அண்மையிலுள்ள துங்கபத்திராநதிக் கரையில் ஓர் சிற்றூரில் காத்தியாயின பரம்பரையில் வந்த திருதமா முனிவரென்பாரைக் கண்டு இப் பொருளெல்லாம் எடுத்துப்போய் அவர்க்கு வேண்டுவன வழங்கி வணங்கி, வழிபாடு செய்து, அடிகாள்! நேற்று இரவில் களவு செய்த பொருள்களை எடுத்து என்னுடன் அடுத்த கள்ளர்களோடு கலந்து, இறைவனார் திருக்கோயிலிற் சென்று சேர்த்துப் பிரித்துக் கொண்டு விடியற் காலத்தில் அவர்களோடு வெளிவர அமைந்தேன். அப்போதே அக்கோயில் மண்டபம் இடிந்து விழுந்திட என்னுடன் எழுந்து வந்த அக் கள்ளர்கள் எல்லோரும் இறந்தனர். அதில் யான் மட்டும் இறந்திடாதெஞ்சிய காரணம் யாது? அது எனக்கு வியப்பாக இருக்கின்றதே; அதனை எனக்கு மொழிந்தருள வேண்டுமென்று துதித்தும் வணங்கி வேண்டினான். அவ்வெருவுதரு வேடனை கள்வனை நோக்கித் திருதமா முனிவர் கணப்பொழுதே ஈசனை இருதயத்தெண்ணி இயம்பத் தொடங்கினார்.

வெருவுதருவேடா! உன் வரலாறுரைப்பன் உணர்க. நீ எல்

லாப் பெரும் பொருள்களையும் எடுத்து எல்லாக் கள்ளர்களோடும் சிவாலயஞ் சென்று அப் பொருள்களைப் பகுக்கு மெல்லையில் வழி பாடு ஒன்றுமில்லாத மங்கைபாகன் திருமுன் கார்த்திகைத் திங்க ளில் திங்கட்கிழமையில் திருவிளக் கிட்டவனுனுய். விளக்கிட்டும் அதனைக் கதிர்படு காலைவரை விளக்கமுற எரியத்தூண்டி வந்தனை.

தெறுகாலனன்மதியிற் றிகழ்திங்கட் கிழமையினி
லுறுவினையோ ரெவரேனு முமைபாகன் கோயிலகஞ்
சிறுவிளககு மிட்டனரேற் சிந்தையினி லன்புமிக
மறுவிலா திந்நிலத்தில் வாணுளு மிகப்பெறுவார்.

அப்புண்ணியப்பலனுல் உனககு மட்டும் உயிர்ச்சேதம் நேராதிருந் தது. யார், கார்த்திகைத் திங்களில் திங்கட்கிழமையில் அரைக் கணமாகினும், ஒருகணமாகினும் பசு கறக்கும் போதாயினும், விளையாட்டுக் காயினும், வேறு காரணம் பற்றியாயினும், சிவ பிரான்றிருமுன் தீபம் திகழ்வித்தவர் அளவுகடந்த ஆயுளைப்பெறு வர். இன்னும் அன்புடன் அழகிய விளக்கிட்டார் அமரர் பெரு மானுகிய சிவனேயாவர். அளவிலாத் திருவெல்லாம் அடையப் பெ ற்று அணிநகருக்கரசராவார். அவர்களுக்கு எப்பொழுதும் இடை யூறில்லை. ஒன்றை நினைந்து கார்த்திகைத்திங்களில் மதி வாரத் தில் மகிழ்விளக்கிட்டால் அரசியல் பெற்று, நினைத்தவைகளையும் பெறுவார். இதில் ஐயுறவில்லை. ஆதலினுல் வேடா! நீ இன்னும் இரண்டரை நாழிகையளவில் உணவுண்ணுவாய். அவ்வமயத்தில் உன்னுயிர் போய்விடும். ஆயினும் நீ அறிந்து விளக்கிட்டார்க்கு அரசியலளிக்கும் சோமவாரத்தில் விளக்கிட்டமையால், மறுமை யில் நிடதேயத்தில் மன்னர் மன்னனுவாய். ஆயினும் சிவத் துரோகத்தால் அவ்வரசியலை இழந்து துன்புறுவாய் இம்மையில் இப்பொருளைப் பெரியார்க்களித்த பேற்றுல் அதனை மீட்டும் பெறுவாய் என்று அம் முனிவர் கூறியருளினுர்.

அது கேட்ட வெருவுதரு வேடன் அம்முனிவரை வலஞ் செய்து வணங்கி பொருள்களனைத்தும் அவரடியில்வைத்து விடை பெற்று அவணின்று எழுந்து வீடு போய்ச்சேர்ந்தனன். அம்முனி வர் அருளியபடியே, நடுப்பகலில் அன்னத்தை எடுத்துண்ணு மளவில் அதுநெஞ்சில் அடைக்க நிலைதடுமாறி ஆருயிர்விட்டான்.

அவன்றான் பின்னர் மறுபிறப்பில் நிடத நாட்டில் வீரசேனன மகனாய்ப் பிறந்து நளனெனப் பேர் நவிலப் பெற்றுக் காமனினுங் கட்டழகடைந்து முழங்காலுற்ற முன்கையுடையனாய் எல்லா அறங்களையும் இனிதே யறிந்து அவ்வறமுற்றுஞ்செய்ய விரும்பிக் கல்வியறிவில் மிகுந்து வளராநின்ற காலையில், அது கண்ட அவன் தந்தை வீரசேனன், தன் முடியைச்சூட்டி அரசியலைத் தந்தனன். அந்நளன் அதனைப்பெற்று மிகு புகழோடு மூவுலகத்தினுமுள்ளவனாய் அந்நகர் அமர்ந்து வந்தனன். அங்ஙனம் வாழ்ந்து வருகையில் அந்நளன் முன்பிறப்பில் முபன்ற தீவினையால் கலியானவன் அவனோடு கலக்க, புட்கரனோடு சூதாடித் தொகுத்த பொருளெல்லாம் துலைத்து அப் புட்கரனால் வெல்லப்பட்டான். குண்டின புரத் தரசனான வீமன் மகளும், மிகுந்த வடிவழகிப்புடைய, கணவன் கருத்தறிந்து ஒழுகும் கற்புடையவளுமான தமயந்தியென்னும், தன்மனைக்கிழத்தியுடன் மாபெருங்காடு அணுகி அம்மனையாளையும் அதன்கண்ணே விடுததுப்பிரிந்து கார்க்கோடகனால்கௌவப்பட்டு அவன் நஞ்சால் நல்லுடல் கருகிக்குறைய அழகற்ற அவ்வுடலுடன் சாகேத புரத்தில் அரசாளும் இருதுபன்ன அரசன்பாலணுகி பாகுகன் என்னும் பெயர் பெற்று அவனுடைய குதிரைப் பந்திக்குத்தலைவனாயினன். சிலநாட்கள் சென்ற பின் வசிட்டர் வாய்மொழிகேட்டு எல்லாப் பகைவர்களையும் எளிதில் வெல்ல விரும்பிப் பெரும்பொருள், நால்வகைச்சேனை இவற்றோடு, சண்பக வனம் சார்ந்தனன்.

அவன் சென்று ஆண்டெழுந்தருளிய நாகேச்சுரப்பெருமானை வழிபட்டு, அப்பெருமானுக்குச் சிறிது வடக்கில் எழுந்தருளியகிரி கன்னிகையாகிய மலைமகளுக்குச்சந்தனத்திருநாளியற்றி அந்தஅம்மையார்க்கு வடக்கில் எழுந்தருளியுள்ள மங்கைபாகத்தலைவரை அன்புடன் பூசித்து, அவருக்குக்கிழக்கில் சிறிது தூரத்திலெழுந்தருளிய மலைமுலையாளுக்கு மான்மதத்திருநாள் செய்து, வழிபட்டனன் பின்னர்ச் சண்பகமரத்தடியில் போந்து, ஐந்தெழுத்தையுருவேற்றி, வாய்மூடிச் சிவத்தியானஞ்செய்து, இருந்தனன். அவ்வமயத்தில் பாகுகன்என்னும் பெயர்பெற்றுக்கருத்துக்குள்ளான நளனானவன் மிக்க நல்லஅன்புடன் சூலதீர்ப்படிந்து, எட்டுநாகங்களையும் இனிதாக வணங்கி, சான்று கணபதியையும் பூசித்து,

நந்திப்பெருமான் விடைபெற்று,நன்னீர்,வில்வம், முழுவெள்ளரிசி முதலியன கைக்கொண்டு திருவமுதளித்துத், திருவிளக்கிட்டு, நாகேச்சுரப் பெருமானையும் மலைமகளையும் அந்த அமைக்கு வடக்கில் அமர்ந்த மங்கைபாகத் தலைவரையும் மலைமுலையம்மையையும் வழிபட்டு ஒருமண்டலமாமளவும் இருந்து, தூயனாய், நீரொன்றே யருந்திப் பின்னர் அதையும் விடுத்து, இறைவனை எண்ணி வேண்டி வானயினன் எம்பெருமானே! என் வாழ்க்கைத் துணையாகிய எழிலுடைய தமயந்தியையும், எனது நிலத்திருவையும், இனியாவது விரைவில் யான் பெறத் திருவருள புரிதல் வேண்டுமென்றே வரங்கிடந்தான் இருதுபன்ன மன்னனும் பகைவெல்லப் பரம்பொருளை வேண்டி வரங்கிடந்தான். அவ்விருவர்க்கும் இறைவன், கனவிற் சென்று அவர்கள் விரும்பியபடியே அருள் புரிந்தனன் அப்பெருமான் அருள்பெற்று இருதுபன்னன் அப் பெருமானருளால் கிடைத்த வாள்கொண்டு சென்று தன்பகை முற்றுங்கடந்து, தன்னாட்டில் அரசியலை நடாத்தி அகமகிழ்ந்து இருந்தனன். நளனும் அவனுடன் சென்று, அவனரண்மனை யகத்தே அம்மன்னன் பணியேற்றுச் சண்பகநாதன்றிருவருளாசிநைதயில் நிறீஇத்தமயந்தியோடு சேர்த்தருள வேண்டுமென்றே வேண்டிக்கொண்டும், அதற்குரிய காலத்தை நோக்கியும் அந்த இருதுபன்னன் அரண்மனையிலே அமர்ந்தனன். இதைக்கேட்டவர், சொன்னவர், இதற்குதவி புரிந்தவர், எல்லாரும் எம்பெருமானருளால் அறம், பொருள் முதலிய நான்கும், அவற்றிற் கேதுவான சாதனங்களும், அழிவில்லாத ஞானமும், வைராக்கியமும், பெறுவரென்பதாம்.

திருச்சிற்றம்பலம்.

15-வது இருது பன்னனுடன் நளன் வரவு கூறிய படலம் முற்றிற்று.

---

## 16-வது நளன் இழந்த மனைத்திரு நிலத்திரு வெய்திய படலம்.

திருச்சிற்றம்பலம்.

---

பின்னர் இறைவி, நளன் தன் மனைத்திருவை எய்திய கதையைச் சொல்லியருள வேண்டுமென்று விண்ணபஞ் செய்யச் சிவபிரான் அதனை அருள்வாராயினர். சில நாட்களாயினபின் மக்களைத்தழிஇய தமயந்தி, தன் தந்தை வீமசேன மன்னன் அரண்

மனையில் வாழ்ந்து வருகையில் தன்னைக்கொண்ட மன்னர் மன்னனாகிய நளனை அடைதற்கு ஒரு சூட்சி செய்தனள். ஒரு அந்தணனால் அயோத்தி நகரில் இருதுபன்ன மன்னன் அரண்மனை யகத்தில் அமர்ந்துள்ள நளனை யறிந்து நாளைக்காலை நற்போதில் என் பெண் தமயந்தி சுயம்வரமென்று வீம அரசனால் அனுப்பப்பட்டது போல் தூதன் வாயிலாக ஓலை ஒன்று அனுப்பினள்.

அத்திருமுகத்தை அத்தூதன் அயோத்தியில் அரசாளும் இருதுபன்னனிடம் அளிக்க அதனைப்பார்த்து அவ்விருதுபன்னன் தமயந்தியின் தன்மையையும், அவளுக்குச் சுயம்வரம் நேர்ந்ததையும், அதற்குத்தான் விரைந்துசெல்ல வேண்டியதையும், குதிரைப் பந்திக்குத் தலைவனாகிய பாகுகனிடம் செப்பித் திருமுகத்தையும் தெரிவித்தனன்.

பின்னும் பாகுகனை நோக்கி பாகுகா! நீயோ குதிரை இலக்கணம் முற்றும் கற்றனை! உன்னை இத்தனை நாளாகவும் உணவளித்து உய்யச்செய்தேன். அப்படி உய்யும்படிச்செய்த எனக்கு எல்லா வுலகமும் எய்துங்காலமும் இதுவே. குண்டினபுரத்தில் வீமன் மகளும் காதலாவோடிய கண்ணுடையாளுமான கட்டழகித்தமயந்தி, பெண்ணிற்சிறந்த பேர்பெற்றவள். அதனை நீயு மறிவை. அவள் முன் நளனை மணந்து புட்கரன் சூதால் வெல்லப் பெற்ற நளனுடன் காடுசென்று ஆடையுமின்றி அக்காட்டின் அறச்சாலையில் அரை இரைவில் அயர்ந்த தூக்கத்தில் நளன் வினைவயத்தால் விட்டுப்பிரியத் தன் தந்தை வீம மன்னனிடம் தயங்கிச்சார்ந்தனள். அம்மன்னனுன நளன் இருப்பதும் இறந்ததும் அறியோம்; வீமன் மகளான தமயந்தி கட்டிளமைப்பருவத்தினளாகவும், என்றும் மங்கலமிசைந்த மங்கையாகவும் விளங்காநின்றனள். பதியில்லாத பங்கமொன்றே யுடையள். அதனால் அவள் தன் மணமகனைத் தேடுவாளாய் நாளைச் சுயம்வரமென்று அவளால் நமக்குத் திருமுகம் அனுப்பப் பெற்றுள்ளது. ஆகையால் என்னால் உய்ந்த நீ இற்றைநாள் மாலைக் காலத்தினுள் நான் அக்குண்டினநகரம் அடையும்படிச்செய்ய வல்லவனுதலையறிவன். அங்ஙனமே நீ செய்வாயாஞல், என் அரசியில் பாதியுனக்கே அளிப்பேன். என் மனமும் இப்போதே யாங்கே சென்றது. அதனால் யானும் விரைவிற்செல்லுதல் வேண்டும். அப்படியே அறிந்து

செய்கவென்று கூறினன். அதனைக் கேட்டுப் பாகுகன் புரவிப் பந்தி புகுந்தனன். அவன் அறிவாற்றலில் மிகுந்தவன். அறநெஞ்சுடையவன் அவன் மனைக்கிழத்தியான தமயந்தியும் அறக் கற்புடையவள் என்பதுண்மையாதலால் அதனை மனத்தில் மதித்துக் கொண்டு குதிரைப் பந்தியிற் புகுந்த பாகுகன் புல் நிறம்பூண்ட சிந்து தேசக் குதிரைகளை இரதத்திற் பூட்டி, கலினம் முதலிய அணிகளைக் கொண்டு அழகு பண்ணி இருதுபன்ன மன்னனிடம் சென்று அரசே! நினதுஉத்தரவின்படியே விரைந்து இத்தேரில் ஏறின் இன்று நண் பகலிலேயே அக் குண்டினபுரம் நண்ணக்கூடுமென்று விண்ணப்பஞ் செய்தனன்.

அது கேட்ட அம்மன்னன் பாகுகன்பால் மகிழ்ந்து அத் தேரில் ஏறிச் செலுத்த உத்தரவளிக்கக் கண்ட பாகுகன் குதிரைகளின செவியில் ஊதிய ஒலியுடன் அசுவ மந்திரத்தைச் சொல்லவே அவைகள் விண்ணில் விரைந்து பாய்ந்தன. அது கண்ட இருதுபன்னமா மன்னன் மனமிக மகிழ்ந்தனன். மூன்று முகூர்த்தமாகிய ஆறுநாழிகை யளவில் அப் பாகுகன் அரசனை நோக்கிக் குண்டினபுறமும் அதன் மதிலும் காணப்படுகின்றன காண்! என்று விண்ணப்பஞ் செய்ய அது கேட்ட அரசன் பாகுகா! நீ கலுழனோ! அன்றிக் காற்றோ! மனத்தின் மாபெருந்தலைவனோ! இத்தன்மையன்றோ னென்பதை யானறியாது, நின் சிறப்பு முற்றும் செப்ப என்னாலாகுமா? ஆயினும் இத்தேரினை இங்கேயே நிறுத்துக. இது குண்டினபுரம். இதில் வீரமா மன்னன் பூஞ்சோலை புதிதாகக் காணப்படுகின்றது. இதன் நடுவண் தங்கி இன்று மாலைப் போதில் மகிழ்ந்து போகலாமென்று இருதுபன்னமன்னன் கூறுமுன் அத் தேரும் பூமியில் இறங்கிற்று. அது அமயத்தில் அயோத்தி மன்னன் பாகுகனைப் பார்த்து நீ மிக்க அறிவாற்றலுடையவனாதலின் அண்மையில் தோன்றும் அம் மரத்தில் இலை, காய், கனிகள், நிரம்ப இருக்கின்றன அவற்றை எண்ணிச்சொல்ல வியலுமோ? என்ன, அது மந்திரத்தாலாகுமன்றி, மற்றதனாலாகாதென்று விண்ணப்பஞ் செய்ய அவ் வரசன் அவை இத்துணைய வென்று அறிந்து சொல்லவே, பாகுகனும் அம் மறையை அடியேனுக்குத் தந்தருளுக வென்று கேட்டுக் கொண்டனன். அதற்கு அத் தலைவன் அம்மறையைச் சொல்ல அதனைப் பெற்று அவனுக்குத் தெரிந்த அசுவ இருதய மென்னும் அருமையான

மந்திரத்தை உமக்கு உரைப்பேன்; அதைப் பெற்றுக்கொள்ளு மென்று கூறியிடவும், அதுகேட்ட இருதுபன்னன் பாகுகா! அஃதுன்னிடமாகவிருக்க யான் சுயம்வரத்திற்குப் பின்னர்ப்பெற்றுக்கொள்வே னென்று கூறினன். அதுபோதே கார்க்கோடகனால் கொடுக்கப் பெற்றது முற்றும் பாகுகன் வாயினால் கக்க அக் கார்க்கோடகன் அவற்றைப் பெறவே, பாகுகனுடல் கருமையுங் குள்ளமு நீங்க முழுமதிபோல் ஒளிராநின்றது. அக்காட்டில் உடுத்திய அரை ஆடையுடன் பாகுகன் நின்றனன்.

இருது பன்னன் குண்டினபுரஞ் சென்று வீமனைக் கண்ணுறச் செல்ல அங்கு சுயம்வரத்திற்குரிய செயல் யாதொன்று மில்லாமையால் அவ்வீமன் வந்து அரசே! இவண் என் பால் நல் வரவுக்குக் காரணமென்னை? என்று கேட்டிட அதற்கு நாண முற்று அரசாளீர்! நம்மைப் பார்க்க அவா வுடையவனாய் அடைந்தே னென்று இனிதாக இசைத்துத் தழுவி ஆண்டு தன்னகஞ்சென்றனன். பாகுகன் குதிரையைப் பந்தியில் சேர்த்துப் பாகஞ் செய்யும் பள்ளியிற்போக, வீமன் மங்கையாகிய தமயந்தி பாகுகனைப் பார்க்கக் கேசினி யென்னும் தோழியை விடுத்து, அவன் தன்மை முற்று மறிந்து, நளனேயென்று துணிந்து, நயந்து, மகிழ்ந்து, புன்முறுவலோடு, அவன்பால் புகுந்து, அவன் அரைஆடையைக் கண்டுமனமுட்புழுங்கி, பெரியதொரு ஆடையைப் பிணித்திடவேண்டிக் கொடுத்து, அந்நளனை தன் தலைவனைத் தன்னிருகையாலுங் கட்டித் தழுவி அளவிலா வின்புற்று அக மகிழ்ந்தனள். இது கண்ட தேவர் பூமாரி திகழப்பெய்தனர். துந்துபிமுதலிய தேவ வாத்தியங்கள் தெளிவாய் முழங்கின. இயக்கர், கந்தருவர், இன்னிசை பாட, அரம்பையர் அழகுற நடித்தனர். இதனைக் கண்ட நகரமாந்தர்களும், வீமமன்னனும், இருது பன்னனும் எல்லாரும் அக வியப்புற்று அக மகிழ்ந்தனர். பூமிதேவியும் புகழ் பெற்றனள். வீமமன்னனால் வேண்டுவன தந்து நல் வரவேற்றமைக்கு மகிழ்ந்த இருதுபன்னன் அந் நளனையுங் கண்டு மகிழ்ந்து, அவன் அசுவ இருதய மறையைக் கற்றுப் பிரியாவிடைபெற்றுத்தன்னகர் விரைந்து சார்ந்தனன். நளமன்னனும் தன் மைந்தர்களாகிய இந்திரசேனன், இந்திரசேனை இருவரும், மணமகளாகிய, 'தமயந்தியும் உடன்வரத் தன்னகர் மாவிந்தஞ்சென்று ஆங்கரசு செலுத்திய புட்கரனோடு மறு சூதாடி வென்று, இழந்த அரசியலை

அடைந்து, அந்நிடதநாட்டை ஆண்டு வாழ்ந்தனன். இவ்வாறு திருவான தமயந்தியும், நிலத்திருவான தன்னாட்டையும் பெற்றமை சண்பகவனப் பெருமான் அருளேயெனத்துணிந்து இடைவிடாது அதனைச் சிந்தித்து இன்புற்று வாழ்ந்தனன். இதனைக் கேட்பவர், படிப்பவர், எல்லாரும் எண்ணிய திருவெய்தி திகழப் பெற்று இன்புறுவ ரென்பது

திருச்சிற்றம்பலம்

16-வது நளன் இழந்த மனைத்திரு நிலத்திரு
எய்திய படலம் முற்றிற்று.

---

## 17-வது நளன் தமயந்தியோடு திருநாளியற்றிய படலம்.

திருச்சிற்றம்பலம்.

---

மலைமாதே, இழந்த தமயந்தியைப் பெற்ற மாவிந்த நகர மன்னன் அரசியலேற்றபின் அறம் பல செய்து அமைச்சர்பால் அரசியலை அமைத்துவிட்டுச் சேனைகள், வேண்டும் பொருள்கள், பசுக்கள், ஆடையணிகள், பல்வகைப் பல்லியங்கள் முதலியவற்றோடு தமயந்தியை அழைத்துக்கொண்டு சண்பக வனம் வந்து அன்போடு அக்காட்டை வலஞ்சூழ்ந்து வணங்கி, இருதுபன்னன் தங்கின இடத்திற்றங்கினன். அங்குத் தங்கின நளன் திருநாகேச்சுரத்திருக்கோயிலினுள்சென்று அப்பெருமானையும்,மங்கைபாகத் தலைவரையும், மலைமகள், மலைமுலையாளையும் மனத்தில் நினைத்துச் சூலத்திருக்குளத்தில் தூய்மைபெற மூழ்கி அப்புனித நீர்நிலையின் எட்டுத் திசைகளிலுமுள்ள எட்டுப் பாம்புகளையும் வணங்கி நின்று, பால், தயிர், எண்ணெய், நன்னீர், பன்னீர் முதலியவற்றால் நீராட்டிப் பொரி, மோதகம், நெய் சேர்ந்த எள்ளுண்டை முதலியன நிவேதித்து, பொன்னுடை, பூணூல், சந்தனம் பூ இவற்றால் அணிசெய்து தூமம், தீபம் கொடுத்து வெற்றிலைப்பாக்குக் காணிக்கையிட்டு சர்ப்பன், அனந்தன், சேடன், கபிலன், நாகன், கலிங்கன், சங்கபாலன், பூதரன் என்னும் எட்டு நாகங்களுக்கும் எண் முறையாக வலம் வந்து வணங்கினன். உடனே தன் மனையாளா

கிய தமயந்தியை நோக்கி மாதே, இந்தச் சூல தீர்த்தக்கரையில் கிழக்கு முதல் எட்டுத் திசையிலுமிருக்கின்ற எட்டு நாகங்களும் சிவபிரானுடைய விடைபெற்று இவண் வாழ்கின்றனர். இந்நீர் நிலையில் மூழ்குகின்ற புண்ணியர்கள், இவர்களை வழிபடாதொழிந் தால் அப்புனித நீர்நிலையின் பயனைப் பெறமாட்டார்கள். அம் முழுக்கும் பயனற்றுப் போமென்பதுண்மை. ஆதலால் இருது பன்னனுடன் வந்து யான் தனித்துச் செய்த இப் பூசையை நாம் இருவரும் செய்யலாமென்று சொல்லிக்கொண்டு அவ்வெட்டு நாகங்களுக்குந் துதி சொல்லுவானாயினன்.

எந்நாகர் சேடன்முத லாகவிருந் தலரவன்வா ழிடத்தில் வாழ்வார்
எந்நாகர் வாசுகிதான் முதலாமால் வைகுந்த மெய்தி வாழ்வார்
எந்நாகர் தக்ககனே முதலாக வுருத்திரநல் லிடத்தில் வாழ்வார்
அந்நாகர் எனைக்காக்க முன்வந்தே யகமகிழ்ந்தே யருள்செய்வாரே.

எப்பாம்பர் காண்டவத்திற் பெயர்ந்தெந்த வுலகினிலும் இருக்கப்பெற்றார்
எப்பாம்பர் சர்ப்பமக மதுபுரிய வத்திகரால் அருள்பெற் றாரோ
எப்பாம்பர் மலையமலை கார்க்கோடன் முதலாக இருத்தல் பெற்றார்
எப்பாம்ப ரியமந்திக் கடலுள்ளா ரவரவரை யிறைஞ்சி வாழ்வாம்.

இன்னும் நீர், மலை, குகை, சந்தி, நகர், காடு, பூமி, புதர், கீழறை முதலிய எல்லா விடங்களிலும் வசிக்கும் நாகர்களை வணக்கம் செய்து துதித்து, மீட்டும் நறும் புகை, திருவிளக்கு திருவமுது முதலியனவெல்லாம் தனித்தனி அறிக்கை செய்து தந்து பின்னர் நெல்லு, கோதுமை, உழுந்து, எள்ளு, பயறு இந்த ஐந்தையும் ஐந்து மரக்காலாக அந்தணர்களுக்கும் வெற்றிலைப்பாக்குக் காணிக் கையுடன் அளித்து வணக்கஞ் செய்தனர். அதன்பின்னர் நாகே சப்பெருமான் கூறுய் அவர் அண்மையில் விளங்கும் சண்பகமரத் தடியிற்சார்ந்து நான்குபக்கம் மேடைகள் உயர்ந்து செய்து எட்டுப் பக்கத்தில் எட்டு விளக்குகள் எரிய ஏற்றி அத்திருவிளக்கங் களில் திருமகளை எழுந்தருளச்செய்து முழுவெள்ளரிசி(அக்ஷதை) பூக்கள் இவற்றால் அவ்விளக்கங்களை எழில் பெறச் செய்து எட்டுத் தேங்காய் உடைத்து, அறிக்கை செய்து பின்னர் அம்மரத்தைப் பன்னிரண்டு திருப்பேர்கள் சொல்லிப் பாயசம், ஐந்தமுது, படைத்து நன்னீர், சந்தனம், வில்வம், பூக்கள் செம் மைமுழுவரிசி என்பவைகளால் இன்ப அன்புடன் எழில்பெறப்

பூசித்து அம்பரத்தை யாகமுறத் தழுவி மேடைகளுக்கடிப் பாகத்தில் எட்டு நெய்மா விளக்கு நிமிர்ந்தொளிரவேற்றிக் காணிக்கை வெற்றிலைப்பாக்குகள் வைத்து அவற்றைப் பிறருக்கு அன்புடன் அளித்து வணங்கினர். அதன்பிறகே நாகேசப் பெருமான்றிருக் கோயிலினுள்ளே திருப்பேர் நவின்று சென்று நந்திபெருமானுடைய விடைபெற்று, சான்று விநாயக வழிபாடு விளங் கச்செய்து காமிக ஆகம விதிப்படி நாகேசப்பெருமானுக்கு நயமுற நீராட்டத் துணிந்துகொண்டு நூறு மரக்கால் பால் அதிற்பாதி தயிர், இருபது மரக்கால் நெய், இருபதுமரக் கால் தேன், பத்து மரக்கால் சர்க்கரை, நூறு மரக்கால் கருப் பஞ்சாறு, பதினாயிரம் பழம், முப்பதுமரக்கால் நறுமண எண் ணெய் நலம் பெற ஆட்டிப் பின்னர் நன்னீருங்கொண்டபிடேகஞ் செய்து கலவை சாத்தி நறுஞ்சுண்ணநீர், புனிதநீர்நூறுகுடம் நறுமணங்கமழுங் கங்கை முதலிய புனித நீராட்டி நல்லாடை மணிப்புண்டரவணிகள், நாகாபரணம் திருமுடி முத்தாரம் ஆபி ரம் வைரமணிகளால் இழைத்திட்ட மதிமாலை, முதலியனவெல்லா அணிகளும் அணிந்தனர். நறும்புகை திருவிளக்கு எடுத்தனர். முன்னூறு மரக்கால் அரிசித் தயிரமுது முந்நூற்றம்பது மரக்கால் கொண்ட பருப்பப்பொங்கள், அத்துணை உழுந்தமுது, அத்துணை கொண்டமிளகமுது, பாற்பாயசம், ஆயிரம் உளுத்தவடை, பதி னாயிரம் வெல்ல அதிரசம், நூறு தேன்குழல் அறுநூறு முறுக்கு வகைகள், முதலியன அளவிலாத் தின்பண்டங்கள் செம்மையிற் செய்தனவாக நிவேதித்து, நல்வில்வங்கொண்டு நயம் பெற நூறா யிரம் முறையில விதிப்படி வழிபாடு செய்து, இளமைப்பருவத் தாளும், தவவடிவத்தாளுமான மலைமகளையும், மலைமுலையாளையும் வணங்கி அந்தவம்மைக்கு மேல்பாகத்தில் அர்த்தநாரீசரானமங் கைபாகரையும், வழிபட்டு வேண்டிய தானங்கள் வியப்புற வழங்கி ஓராண்டு தன்மனையுடன் தங்கி நித்திய நைமித்தியங்களை நாகேசப் பெருமானுக்குச் செய்தனன். இன்னும் அப்பெருமான் வெளிப் பட்டு அருளிய மாலைக்காலத்தில் சிவபிரான் திருமுன் அன்பர் களுடன் மறையொலி, வாச்சியவொலி முதலியவொலியெலாம் முழங்கச் செய்து அப்பெருமான் அருட்டிறத்தைக்கொண்டாடி னர். பிரமனால் செய்யப்பட்ட கார்த்திகைத் திருநாளையும், தைமா தப்பிறப்பில் மலைமுலையாளுக்கு இந்திரனால் செய்யப்பெற்ற புழு

குக்காப்புத் திருநாளையும், மலைமங்கைக்குச் சித்;
செய்யப்பெற்ற சந்தனத் திருநாளையுஞ், சித்திரை,
பக்கம் ஆருவது புனர்பூச நாள் கூடிய நன்னாளில் அப்பருமானரு
ளால் கொடியேற்றி, ஒன்பது நாள் திருநாள் வரப்பல்லக்கு
வாகன முதலியவற்ருல் சிறப்பித்துக்கொடை, கொடி, கொடுகை
சாளரங்கள் குதிரை இவற்ருல் அணிசெய்யப்பட்டுச் சித்திரவேலை
செய்து சிறந்ததான ஐந்து இரதத்தில், சிவபிரான், அம்மை,
பிள்ளையார், முருகன் சண்டிகேசர் ஆகிய ஐந்து மூர்த்திகளையும்
விதிப்படி எழுந்தருளச் செய்து, இரதத்திருநாள் எழில்பெறக்
கொண்டாடிப் பத்தாநாள், விசாகங் கூடிய காலத்தில் சூலநீராடு
வித்து அந்நீர் நிலைக்கு மேல்பாகத்தில் நவமணிமண்டபத்தில் எம்
பெருமான், எம்பெருமாட்டி முதலியவர்களை எழுந்தருளச்செய்து
அபிடேகவாராதனை முதலியன நிகழ்வித்துத் திருவிழாவை நிறை
வெய்தச் செய்தனன். இவ்வாறே என்ஞான்றும் நித்திய நைமித்
தியங்கள் நடைபெற ஆயிரங் கிராமங்கள் வாங்கித் தானஞ்செய்து
தன் மனையாளுடன் வசித்து ஆண்டவன் ஆண்டவனிருவரிடத்
தும் அருள்விடை பெற்று அகமகிழ்ந்து தன்னகரிற் சென்று
இன்புற வாழ்ந்தனன். நாகநாதப்பெருமானுக்குத் திருநாள் செய்
கின்ற செம்மை மனத்தோர் மண்ணரசு விண்ணரசு பெற்று
எம்பெருமான்றிருவடிப் பேற்றையும் பெறுகின்ருர். வைசாகத்
திருநாள் வகையுற நடத்துவோர் குபேர நண்பராவர் அத்திரு
நாட்கள் தரிசிப்போரெல்லோரும் அமரர்வடிவினரா யின்புறுவர்.
அதற்குத்துணையாளர்களெல்லோரும் திருவும் புகழுஞ் சிறப்புறப்
பெறுவாராகின்ருரென்பது.

திருச்சிற்றம்பலம்.

17-வது நளன் தமயந்தியோடு திருநாளியற்றிய
படலம் முற்றிற்று.

---

## 18-வது பாண்டவர்கள் அரசியல் பெற்ற படலம்.

திருச்சிற்றம்பலம்.

---

இனிப் பாண்டவர் பூசித்த வரலாற்றைச் சிவபிரான் அருள்ப
வராயினர். ஒப்பிலா முலையுமையே! பாண்டுவின் மக்களான ஐவர்

களும் குருகுலத்தை அழகு பெறச்செய்து பொறுமை யாளராய் ஐம்பொறியடக்கமிசைந்து அறச்செயலே திறச்செயலாகப்புரிபவா எப்போதுங் கண்ணன்பால் திண்ணிய அன்புடையவர். மெய்யற் ஞர்களான அந்தணர்களுக்கு வழிபாடு இயற்றுகின்றவர். விற்றொ ழில் முதலிய அரசத்தொழில்கள் முற்றும் அறவே பயின்றவர் எல்லோரும் மகிழ எஞ்ஞான்றும் எல்லா யாகங்களையும் இயற்றுட வர்; தாயன்பு முதலான எல்லாவிரதங்களையும் எழில்பெறத்தரித்த வர். இவர்கள் அறநிலையாய் வாழ்ந்து வருகையிலே, மக்கள் உயிர் களில் மாண்பு பெற்றவர்களான அப் பாண்டவர்களுக்குப் பாவத் தைப் பயக்கும் பயனற்ற சூதாட்டத்தில் பாழான அவா அடங் காமலெழுந்தது. அதற்குக் காரணம் என்னவெனில்? இந்திரப் பிரஸ்தம் எனனும் புதியதோர் பட்டணத்திற்கு மேற்றிசையில் மூனறு படைபிடு தூரத்தில் பழமை பெற்றதும் கபிலர்க்குக் கணக்கிலாப் பயன் தந்ததும் யாவர்க்கும் நினைத்ததை வழங்குவ துமான சிவன் றிருக்கோயில் ஒன்று இருந்தது. அது ஒரு காலத்து இடி விழச் சிதைந்துபோயிற்று.

அது கண்ட முப்போதும் திருப்பணி தீண்டுவான் ஒருவன் உயிர்களில் உயர்வு பெற்றுத் தருமர்களான பாண்டவர்களிடம் சென்று ஐயரானீர்! அரை இரவில் மழைபால் இடிவிழக் கோயில் முற்றும் அழிந்ததென்று கூவினன். அதைக்கேட்டு அப் பாண் டவர்கள் இனி இன்று என் செய்யலாம் அதனை நாளை அறிந்து செய்வோமென்று அவனை அகற்றி விட்டு வறிதே இருந்து விட் டனர்.

சிவபெருமான் றிருக்கோயிற் சிதைந்ததெனக்
கேட்டாலுந் தெரிசித்தாலும்
பவமகற்ற வக்கோயில் பொருளிரந்துந்
திருத்தாது பார்த்து நின்றே
தவமியற்ற முயன்றாலுந் திருவுடையார்
திருவெலாந் தேய்ந்தே போமே
நவமியற்ற வக்கோயிற் புகுந்திடுவோர்
நம்பனென நவில வாழ்வார்.

இதனால் ஒருவன் தன் பொருள் கொண்டாவது, பிறர்பால் இரந்து பொருள் பெற்றாவது, சீர்கேடான சிவபிரான் றிருக்கோ

யிலேச் சிறப்புற இயற்றுதல் வேண்டும். இன்னும் அரசராயினோர் ஆலயம் நிலைமையைத் தாமே நன்கறிந்து அணிபெறச் செய்தல் வேண்டும். இவர்கள் எல்லா அறங்களும் அறிந்து அரசர்களா யிருந்தும் அறிவிக்கவும் அதனைத் திருத்திலர். ஆனால் அவர்கள் திருவிழுப்பதற்குக் காரணமிதுவே என்று வருத்தமுற்று இருந்தனன். அதனால் அவர்கள் திருவெலாமழியச் சூதாட நேர்ந்து, சகுனியால் வெல்லப் பட்டனர். அதனால் மிகக் கவலையுற்றுக் காமுகமென்னும் இடத்திலிருந்தே கண்ணனைக் கருதினர். எல்லார்க்கும் புகலிடமான கண்ணன் அவர்கள்பால் அன்புடையனாதலால் விரைந்து இரதமேறி அப் பாண்டவர்களிருக்கு மிடம் வந்தனன். தேவ தேவனும், சார்ந்தோர்க்கு நலமளிப்பவனும், நினைத்தவளவிலே முன்னிற்பவனுமுள்ள கண்ணபிரானைக் கண்டு முறைப்படி வழிபாடியற்றி, அஞ்சலித்த அங்கையராய் நின்று, விண்ணப்பம செய்வாராயினர். நீண்ட தோளனே; தீயோரைத் தொலைப்போனே; அம்மான்பிள்ளாய்; உன்னையொழிய எங்களுக்கு ஒரு புகலில்லை, எங்கட்குப் பகையான துரியோதனதியர்களை எங்ஙனம் வெல்லுவோம்? அந்த வழியை எங்களுக்கு அறைந்தருள வேண்டுமே, அன்றியும் வெளிப்பட்ட பன்னிரண்டாண்டு காட்டு வாழ்க்கையும் ஓராண்டு அறியா வாழ்க்கையும் எம்மை விட்டு எங்ஙனம் ஒழியும்? இனி எப்போது எமது அரசியல் பெறுவோம்? இதற்குய்யுநெறி எங்களுக்கு அருளிசெய்தல் வேண்டுமென்று விண்ணப்பித்தனர். எல்லாமறிந்தவனும், எல்லார்க்கு மிரங்கி யருள்பவனும் யோகதத்திற்குத் தலைவனுமான கண்ணபிரான், அதனைக் கருதி ஒரு இரண்டு நாழிகை யளவே ஒருப்பட்ட மனத்துடனிருந்து அவர்கள் பால் இரக்கமுற்றுச் சொல்லுவாராயினர். பாண்டவர்களே! இனி என்னால் இயம்பப் பெறுவதாவது அறம் பொருள் இன்பங்களை அடைய அளிப்பது பெரும்புகழ் பெறத்தகுந்தது எட்டுவகைச் செல்வத்தையும் எளிதில் அளிப்பது. பூமண்டலத்தில் பாபமனைத்தும் மாற்றுவது; கலியை அகற்றுவது; பூமியிற் கைலையையொப்பது; காவேரிக்குத் தென்கரையில் ஒரு கூப்பிடு தூரத்தில் பல பூக்கள் செறியப் பறவைகள் மிக அணிசெய்யா நிற்க, வண்டு பண்பாட, இளங்காற்று எழில் பெற வீச, இயக்கர், கின்னரர், கிம்புருடர், கந்தருவர், அரம்பையர், முப்பத்துமுக்கோடி தேவர், மாமுனிவர்களா

கிய இவர்களால் வணங்கப் பெற்றுள்ளது. அயன் முதலியவர்களால் அணிபெறப் பூசிக்கப்பெற்றது; யானும் உருக்குமணியையுடன் சேர உள்ளன்பால் பூசிக்கப்பெற்றது. அதுதான் சண்பக வனமென்று அறையப்படுவதோர் உயர்வுடையூராம். அதில் தீர்த்தமும் சிறப்புறு நின்றது. அந்நகரம் பார்க்கவும், இருக்கவும், நினைக்கவும் பரமசிவபதத்தை ஈவது. அத்தகைய பயனளிப்பதைப் பற்றி இன்னுமென்ன இயம்புவன்?

அதை நீங்கள் அணுகிக் கார்த்திகை மாதத்தில் ஞாயிற்றுக் கிழமையில் விரத அனுட்டானங்களை விருப்புறச் செய்து அதன் சூலதீர்த்தத்தில் அத்திர அரசோடு மூழ்கித் தானங்கள் வழங்கி எட்டு நாகங்களையும் எழில்பெறப் பூசிப்பீராக ஐந்து கிழமைகளிலும் ஐந்து மாபாவங்களையும் அகற்றுவதால் அக்கிழமை முழுக்கைத் தவறாமல் செய்தால் மேருமந்திரம் முதலிய வற்றிற்கொப்பான மாபாவமாயினும் ஒரு முழுக்கிலே யொழிப்பது திண்ணம். அன்றியும், பகைவர்களைப் பாற்றி யிநிர் ஐந்தெழுத் தோதிச சென்று நாகேசப்பெருமான், மலைமகள் மலைமுலையாள், மங்கை பாகர் சான்றுகணபதியாகிய இவர்கள் திருமுன் காமிகவிதிப்படி வில்வம், மல்லிகை, முதலிய பூக்கள் (அக்ஷதை) முழுவெள்ளரிசி முதலியவற்றால் வழிபட்டு அத்தலத்தில் புரட்டாசித் திங்களிறுதியில் சிறப்பாக பூசை நடாத்தித் தை மாதப்பிறப்பில் விதிப்படி புழுகுக்காப்புத் திருநாளும் சித்திரை மாதப் பிறப்பில் சந்தனத் திருநாளும் சிறப்பாக நடாத்தி மங்கைபாகருக்கு ஆவணி மாதம் சுக்கிலபக்கம், பௌர்ணமியில் மல்லிகை, மாலதி முதலிய பூக்களால் அணிசெய்து பாயசம் முதலியன அறிக்கை செய்து பூத்திருநாள் நிகழ்த்திச் சண்பகமரத்தடியில் நளன் பூசித்தபடியே பூசித்து ஓராண்டிருந்து வரங்கிடந்து அவ் வாண்டில் நிகழும் புண்ணிய நாட்களில் வருந் திருவிழா முழுதும் நடத்துவீராக. அத்தலத்தில் நளன் முன் வசந்தத்திருநாள் கொண்டாடினபடியே கொண்டாடினால் இழந்த செல்வத்தை இனிதாக எய்தி அரசியலையும் அடைவீர்களென்று அருளிச்செய்தனர்.

அது கேட்ட பாண்டவர்கள் காமுகத்தில் அக் கண்ணபெருமான் அருளியபடியே கேட்டு அக்கண்ணனை வழிபட்டுப் பிரியா விடைபெற்றுத் திரௌபதியோடு அளவில்லாத காடு,மலை, திருத்த

நதி, தேயம், முதலியன எல்லாங்கடந்து சிறந்ததான சண்பகக் காட்டைச் சார்ந்தனர். அங்குக் கண்ணன் மொழிந்தபடியே நந்தீசர் விடைபெற்றுச் சான்று கணபதியைச் சார்ந்துபூசித்து, நாகேசப் பெருமானையும், மலைமகளையும், மலைமுலையாளையும், மங்கை பாகரையும் வழிபட்டு ஐந்து ஞாயிற்றுக் கிழமைகளிலும் சூலதீர்த்தப் படிந்து தூய்மையராய்த் தௌமிய முனிவரோடு ஓரா ண்டு அத்தலத்தில் தங்கினர். பின்னர் அந்நாகேசப் பெருமான் அருள் கொண்டு அம் முனிவர் மொழியால் சில காலங் காட்டில் கலந்து நின்று பின்னர் அம் முனிவர்பால் விடைபெற்று அதை யும் விடுத்துப் பற்பலவடிவம் பூண்டு அந்கரிற்சென்று ஓராண்டி ருந்து உத்தரையை மணம்புரிந்து விராட நகரிற்சென்று கண்ணன் தூது பெற்றுப் பதினெட்டு நாட் போர் செய்து பகையை வென் றனர். அன்றே இழந்த நிலத்திரு முற்றும் அடையப் பெற்றுத் தருமர் என்பவர் தம்பியர், திரௌபதி, முதலியவர்களோடு நாகே சப் பெருமான் திருவருளால் அப்பெருமான் திருவடியே அன் புடன் நினைந்துகொண்டே அரசியல் நடத்தினர். இதைக் கேட் டவர் சொன்னவர் எவர்களும் இழந்த செல்வத்தைப் பெற்று இன்புறுவார்கள் என்பது.

திருச்சிற்றம்பலம்.

18-வது பாண்டவர்க ளரசியல் பெற்ற படலம் முற்றிற்று.

## 19-வது பாண்டவர் பூசைச் சிறப்புரைத்த படலம்.

திருச்சிற்றம்பலம்.

---

இழந்த அரசியலைப் பெற்ற இந்திரப் பிரத்த மன்னர்கள் பின் னர் என் செய்தனர் என்று எம் பெருமாட்டி இறைவனை இறைஞ்சி இரந்து வினவ அதுகேட்ட எம்பெருமான் அவர் செய்த அரிய திருத்தொண்டை அருளிச்செய்வாராயினர். குருகுலவேந்தனாகிய அறப்புதல்வன் அன்புடைத்தாயாகிய குந்தி மனையறக்கிழத்தி யாகிய திரௌபதி, துணைவர்கள், வேண்டும் பொருள்கள், அமைச் சர்கள், தூதர்கள், நால்வகைச் சேனை, ஏவற்றொண்டர்கள், பதி

னெட்டு வாச்சியங்கள். முதலாக அரசச் சிறப்புடன் அன்புரு வாய்ச் சண்பகக்காடு மீட்டுஞ்சார்ந்தனர். தௌமிய முனிவர் அருள்மொழிப்படித் திருக்கோயில் செவ்விதிற் சென்று சான்று கணபதியைத் தொழுது, தேங்காயுடைத்து, வழிபட்டு நந்திப் பெருமான் அருள்விடைபெற்று, அந்தணர் அணைந்திடச் சண்பக மரத்தடிப் போந்து விதிப்படி வலமும் பல்வகை வணக்கமுஞ் செய்து மாவிளக்கிட்டுப் பூசித்துப் போய்ச் சூலநீர்படிந்து தூயராய்ப் பூசைமுடித்து அந்நீர்க் கரையிலேயே எட்டுத்திசைகளி லும் எழில் பெற விளங்கும் எட்டு நாகங்களையும் விதிமுறையே வழிபாடுசெய்வாராய் அந்தணர் முகமாகத் தங்கள் துணிபும் அவர்கள் அருள்விடையுந் தோன்ற, எட்டு நாகங்களுக்கு அருக் கியம் அளி [illegible]ராயினர்.

(ஆசிரியம்)

சருப்பமென் றெவருஞ் சாற்றிட வளர்ந்தனை
விருப்பினல் லணியாய் விண்ணவர் பெருமான்
கொண்டிட வாழ்ந்தனை அண்டரும்புகழ
அருக்கியம் வழங்குதும் அகமகிழ்ந் தருள்கவே. (க)

கல்வியா லனந்தா கருதிய பயனை
நல்வித மளிப்பாய் நவிலுறு பவமெலாம்
புல்லெனப் போக்குவை புரமெரி செய்தவன்
பல்லணி யென்னப் பல்குரச் சிறந்தனை
அருக்கியம் வழங்குதும் அகமகிழ்ந் தருள்கவே. (உ)

செம்மையிற் சேடா எம்மையி னீட்டும்
அகமெலா மகற்றுவை யகத்தினி லெண்ணிய
நலமெலாம் நீட்டுவை நம்பனுல் நயந்த
குலமார் சேட குணத்தினைத் தாவே
அருக்கியம் வழங்குதும் அகமகிழ்ந் தருள்கவே. (ந)

தலைபலி தேருந் தலைவனுக் காய்
நிலையுடை யணியாய் நிகழுங் கபில
வழிபடு வார்க்கு மனஞ்செய் வரமெல —
பொழிதருங் கருணைப் புண்ணிய நினக்கே
அருக்கியம் வழங்குதும் அகமகிழ்ந் தருள்கவே. (ச)

நின்னை நினைப்பவர் நெகிழ்வுற வேண்டும்
பன்னரு நலமெலாம் பயில்வுறப் பெற்றே
களித்திட வென்று மளித்திடும் நாகா
அருக்கியம் வழங்குதும் அகமகிழ்ந் தருள்கவே. (ரு)

கலியை யகற்றுங் கலிங்க நன்னாக
பலியை யேற்கும் பரமன தணியாய்க்
கலைநிதி யான கண்ணுதற் பெருமான்
நிலையுடை யருளை நிமிர்வுறக் கொண்டனை
அருக்கியம் வழங்குதும் அகமகிழ்ந் தருள்கவே. (சு)

சங்கரன் சடைமுடி தழைதரு மணியாய்ச்
சங்கபா லாநின் றண்ணளி சுரக்க
எங்கண வெண்ண மினிது முடித்திட
அருக்கியம் வழங்குது மகமகிழ்ந் தருள்கவே. (எ)

புண்ணிய னெங்கள் கண்ணுதற் சாமி
திண்ணிய நல்லருள் நண்ணுறு பூதரா
எண்ணிய கடவுளர்க் கெதனையு மளித்தனை
அன்பர்கட் கின்பம் அணிபெற வழங்குவை
அருக்கியம் வழங்குதும் அகமகிழ்ந் தருள்கவே. (அ)

இவ்வாறே எட்டு நாகங்களுக்கும் அருக்கியங் கொடுத்து அத்திர அரசனை நோக்கி அருட்கடலே யத்திரநல் லரசேயெம் பரவணிந்த அண்ணலார்தம் பொருட்குரிய அருளாளா வெஞ்ஞான்று முனைநினைந்து புகுந்த வெம்மை இருட்குரிய வன்பகையின் மீட்டுக்காத் திட்டருள்வாய் இயலறத்தோர் தெருட்குரிய அருள்புரிக வடியேஞ்செ யருக்கியமுஞ் சேர்ந்தின் பார்க வென்று அருக்கியங்கொடுத்து நாகேசா! நாகலோகத்திற்குத்தலைவா! சங்கரனா ரருள்சார்ந்தோய்! நான் கொடுக்கும் அருக்கியம் பெற்றின்புறுக. சத்தியலோகத்தலைவா! நான்முகம்படைத்த நம்பி! நாம் கொடுக்கும் அருக்கியம் பெற்று இன்புற்று எங்களையும் காக்க என்று பிரமனுக்கு அருக்கியங்கொடுத்து உடை உடுத்தித் திருநீறிட்டுத் திருக்கண்மணி பூண்டு இறைவனை வணங்கி எட்டு நாகங்களுக்கும் சிறப்பாக பாற்குடங்கள் மஞ்சள்நீர்க்குடங்கள் முதலியன கொ

ண்டு நீராட்டிப் பொரி, பூக்கள் அக்கதை, (முழு வெள்ளரிசி) இட்டுப் பாயசம் வைத்து அரிக்கை செய்து அந்தணர்களானவர்களுக்குப் பசு, பூமி, யானை, குதிரை, பல்லக்கு முதலிய ஊர்திகள் படுக்கை, பால், தயிர், நீர்க்குடம், நெய், முதலியவாகத் தானஞ் செய்தனர் இன்னும் மணிகள், உடைகள், எள், மாவுருண்டை கோதுமை, சர்க்கரைசேர்த்த அதிரசம், பலபழங்கள், கற்பகமரம், பஞ்சபைபாதி, மணிப்பசு, ஆயிரங்கன்னிகள், ஆயிரம் வீடுகள், ஆயிரம் சிற்றூர்கள் ஆகிய எல்லாமுமான நிரைகளுடன் தானஞ்செய்தனன். அது முடிந்தபின்னர் நாகேச்சுரப் பெருமான் திருக்கோயில் புகுந்து நந்திப்பெருமான் முன்போய் அவருக்குச் சுத்தநீர், சந்தனம் முதலியவற்றால் நீராட்டி, சர்க்கரை, பழம், தேன், அரிசி, நெய் முதலானவற்றை வைத்து அரிக்கை செய்து நறும்புகை, திருவிளக்கெடுத்து வழிபட்டு அஞ்சலிவணக்கஞ் செய்து எருதரசைக்கையால் தொட்டுக்கொண்டு, இருகொம்பின் நடுவில் இறைவனைக் கண்ணுற்று,

இன்பளிக்கு மிறையவனு ரருளாளா கணத்தலைவ வெருதி னேறே
யன்பளிக்கு மாகமத்தை யறிந்தவரின் மேலானோய் அருளா லென்றும்
வன்பளிக்கு நல்லறமும் பெருந்திருவு மழகியலும் மக்கட்பேறும்
என்பளிக்கு முடல்வளமும் வெற்றியுடன் நிலைவலிமை யீதல் வேண்டும்.

காயாத சண்பகநல் வனநகர்க்குத் தலைமைசால் காளை வேந்தே
நோயிலா நல்லிருக்கை யல்லிருக்கும் மிடற்றுளன் நுகரு மன்பும்
தேயாதமெய்ஞ்ஞானஞ் சிவனருளா லெப்பொருளின் சித்திப் பேறு
மோயாத நிறையாயு ளிவையெலா மீந்தருள லுன்னால் வேண்டும்

என்று வரங்கள்வேண்டித் துதித்தனர். அதன் பின்னர் நற்செயல்களுக்குத் தலைவரான சான்றுகணபதியை அப்பாண்டவர் அடைந்து எல்லாச்சிறப்புடன் இனிது பூசிப்பாராயினர் தயிர், பால், நெய், சர்க்கரை, தேன், நல்லபழவகைகள், தென்னங்காய்கள், இளநீர், பட்டுடை, சந்தனம், பூக்கள், முதலியவற்றால் ஐபிடேக அணிகள் செய்து மோதகம், தேன், நெய், பால் இவற்றாலான பாயசம் கன்னல் சேர்த்த எட்பொடி, எள்ளன்னம், கோதுமை அதிரசமாகிய அமுதுகளை வைத்து அரிக்கை செய்து நறும்புகை நல் விளக்கெடுத்து வேண்டுதல் செய்து வலமும் வணக்கமுஞ் செய்து,

தலைத்தலைவா விறைவனார் முதற்புதல்வா கிரவுஞ்ச சைலத் தெவ்வே
மலத்தகலா வுயிர்க்குணர்வு மகிழ்ந்தளிக்கு நல்லறிவின் மன்னேயின்னே
நலத்தின்வரு பெரியவுரு வுடையாய்நீள் வளைதுதிக்கை நம்பீ யெங்கள்
நிலத்தினிகழ் செயலினிடை யூறனைத்துங் கிடையாம னீத்தல் வேண்டும்

ஒருகோடி சுடரொளார் திரண்டென்ன வொளிர்வடிவா யுண்மை யுள்ளார்
அருகோடி யருள்சுரக்கும் மானைமுக வண்ணணிணை யடுத்த வெங்கள்
வருகோடி யிடையூறு மறமாற்ற மலைமகளின் வளமார் மெய்யி
னொருகோடி யெனவழுக்கில் வருபிள்ளா யெளியேமையோம்பல்
-டும்.]

இவ்வாறு மூத்தபிள்ளையாரை இனிதாக் வேண்டித் துதித்தும் வலமும் வணக்கமுஞ் செய்து இறைவனை வழிபாடியற்றத் தொடங்கினர்.

பால், தயிர், நெய், தேன், நூறுநூறு குடங்கள், இருபது மரக்கால்சர்க்கரை, பற்பலபழவகைகள் கருப்பஞ்சாற்றுக்குடங்கள், மணங்கமழ் தைலக்குடம் முதலியவற்றால் எம்பெருமானை நீராட்டி, பட்டுடை, மணிமுடி முதலிய நல்லணிகள், பூக்கள், வில்வமாலை, முதலியவற்றால் அணி செய்து தூபதீபங்கொடுத்துப் பலவகை அமுது அளித்து இருக்கொடு தோத்திரம் இயம்பி, கொடிமரம், குடை, சுருட்டி, மேற்கட்டி, வெண்சாமரம், கண்ணடி முதலிய உபசாரஞ் செய்து ஐந்து முகங்களினும் பதினாயிர வில்வத்தால் பத்தியோடருச்சித்து நாகேசப்பெருமான் றிருவடித் தாமரையில் விழுந்து வணங்கி மங்கைபாகத் தலைவரையும் வழிபட்டு மலைமுலையாளுக்கு அபிடேகம் பல செய்து மான்மதக் காப்புத் திருநாளை மாண்புடன் நடாத்தி எல்லா மாக்காத்தையும் இனிதளிக்கும் மலைமாதினுக்கு முன்போல் அபிடேக அலங்காரமும் செய்து, சந்தனக்காப்புத் திருநாள் விதிப்படிப் புரிந்து ஒரு மாதம் வரை ஒவ்வொரு நாளும் இவ்வாறே உயர்வுற நடத்தி அவண் தங்கினர்.

பின்னர்க் கார்த்திகைத் திருநாள் நான்கு ஞாயிறுகளினும் முதல் ஞாயிறில் சகாதேவனும், இரண்டாவதில் நகுலனும் மூன்றாவதில் வீமனும், நாலாவதில் அருச்சுனனும் ஐந்தாவதில் தரும புத்திரனுமாகப் பிள்ளையார் முதலியவர்களை முறையே பூசித்துத்

திருவிழாச் சிறப்புற நடத்திப்பெரியார்களுக்கு வேண்டுவன எல்லாம் பெரிதும் அளித்து அன்புடன் நித்திய நைமித்திகங் களுக்கு வேண்டிய பாத்திரம், அணிகள், உடைகள், பூந்தோட் டங்கள், சிற்றூர்கள் முதலியவெல்லாம் தானமாக வாங்கிக்கொ டுத்து, தீர்த்த ஆலயங்களைத் திருத்தி எம்பெருமானிடம் பெரியா விடை பெற்று பாண்டவர்கள் தம் சுற்றத்துடன் அத்தின புரஞ் சேர்ந்தின்புற்று அமர்ந்தனர் என்பது

திருச்சிற்றம்பலம்.

19-வது பாண்டவர் பூசைச்சிறப்புரைத்த படலம் முற்றிற்று.

---

## 20-வது பிரமன் கார்த்திகைத் திருநாள் இயற்றிய படலம்.

திருச்சிற்றம்பலம்

---

மங்கைநல்லாய்! கார்த்திகைத் திருநாட் சிறப்பைக் கேட்ப வர் கருதிய நலமெல்லாம் கருதியபடியே பெற்று இன்புறுவர். அதனைக் கூறுவன் கேட்பாயாக என்று சிவபிரான் சொல்லி அருளுவாராயினர்.

முன்னொரு காலத்தில் சத்தியலோகத்திற்குத் தலைவனும் பேரொளியுடையவனுமான மலரவன் கடவுளர்கள் காரியத்தைக் கருதிச் சித்தர் வித்தியாதரர், கின்னரர், கிம்புருடர், நாகர், கந்த ருவர், அரம்பையர், இயக்கர், எண்டிசையாளர், வசுக்கள், என் மர், மருத்துவர், எழுவர், முதலாகிய தேவஅன்பர்களோடு, யாழ் குழல், சங்கம், மத்தளம், பணை, பேரிகை, ஆனகம், திருச்சின் னம், தக்கை, (டிண்டிமம்) பறை கோமுகம், முதலியனத்தை வாங்கத்தக்க பல இசைக்கருவிகள் இசைத்திட எண்ணியதை எளிதே அளிக்குங் கைலை மலையில் கண்ணுதற் பெருமான் திருவடி கண்ணுற்று மகிழ வந்தனன்.

அவ்வாறு சென்ற அலரவன் கைலையைக் கண்டு வணங்கி (நியு தம்) நூறாயிரம் மாணிக்கப் படிகளும், நீலமணி யுருவான ஆயி ரம் படிகளும், வைடூரிய வுருவமான முப்பதினாயிரம் படிகளும், ஏறி அவற்றின் நடுவணுள்ளமாணிபத்திரர் முதலிய தூதர்களிருப்

படத்தையும் அதன் வடக்குவீதியிலுள்ள தேவபீடங்களையும், அதன் கிழக்கில் வீடு பெற்றவர்களிடங்களையும், அதன் மேற்கில் இயக்கத்திரள்களுடைய விடங்களையும், அவற்றின் சுற்றுப் பக்கங்களில் கர், கந்தருவர், அசுரர், இராக்கதர், கருடராகிய இவர்கள் இடங்களையுங் கண்டு இன்னஞ் சிவபிரானால் இயற்றப் பட்ட இடங்கள் மூன்றும் முறையே கண்டு அதற்குமேல் இறை வனுக்கிடமாய், மேலான ஞாயிறு, திங்கள், இந்திரன் முதலியவர் களாற் பூசிக்கப் பட்டு உயரமாய் நின்ற மேலிடத்தைக் காண விரும்பி, வானில் வாயுவினால் சுமக்கப்பெற்ற ஆயிரம் படிகளிலும் ஆயிரம் சிவநாமங்களைச் சொல்லி வணங்கி ஏறிப்போந்து எம்பெ ருமானிருக்கும் அரசிருக்கையை அணுகுவாராயினன். அத்த லத்தில் சிவபிரான் விடையேறி மின்னிடையாளோடு எழுந்தருளி யிருப்பினுஞ் சிவத்தலத்தின் பெருமையைக் காட்டி யருளத்திரு வுளத்தில் முகிழ்த்த பெருங் கருணையால் அப்பெருமான் அம்மல ரோனுக்கு ஆங்குக் காட்சி தந்தருளாராயினர் சிவத்தொண்டர் களைத் தெரியக் கண்டு அலரவன் ; அன்பர்களே! எவர்களுக்கும் இன்பம் அளிக்கும் எம்பெருமானாகிய சிவனார், அடியேன் கண் ணுக்கு அகப்படவில்லையே ; அதற்குக் காரணம் எனக்கியம்பி யருளவேண்டும் என்று கேட்டனன். அத் தொண்டர்களாயுள் ளார் சிவபிரானார் திருவுள்ளக் குறிப்பின்படிச் சொல்வாராயினார்.

உலகத்தை உளதாக்கும் ஒருவனாகிய எம்பெருமான் மதவயார் பிருங்கி அவமதித்தவருத்தத்தால் பிணங்கிச் சண் பகவனஞ் சென்று, தவம்புரிதலை நோக்கி, வரமளித்தருளச் சென் றருளினர். அத் தலந்தான் தக்ககனென்னும் பாம்பரசனுக்கு வேண்டுவன அளித்து நாகேச்சுரமென மூவுலகத்திலும் புகழ் பெற்றது அது நினைக்கவே அளவில்லாத கோடி பெரும்பா வங்கள் அனைத்தும் அறவே தொலைக்கும் மேன்மையுற்றது. அதில் பரமசிவனார் மங்கைபாகராக விளங்குவர். அருள்மயமான உலகம் மையார் முன்னரே மலைமலையாரென்றும், எம்பெருமான் நாகே ச்சுரனென்றும் பெயர் பெற்று விளங்கி, எவர்களுக்கும் எண்ணிய உறுதிப்பொருள்களை உடனே தந்தருளுவார். இப்போது சண்ட கமரத்தடியில் கிரிகன்னிகை என்னும் மலைமகள் பரமசிவனார் திரு வுளமகிழச் செய்தவம் இயற்றினமையால் அத்தவப்பயனை அம் மையாருக்குத் திருமேனியிற் பாதி தந்து, பாதிநங்கைநாயகராய்

விளங்கினார் அப்போது, எம்பெருமாட்டி, எம்பெருமானை நோக்கி, இறைவா! இத்தவஞ் செய்கின்ற தவவடிவம் மலைமகளெனப் பெயர்பெற்றுத் தனியே இருத்தல் வேண்டும். யான் இன்னும் பழய மலைமுலைபாள், இப்போதுண்டான மலைமகளென்னும் இரண்டு திருவடிவங்களா இருந்து உன்னை வழிபடல்வேண்டுமென்று வரங்கேட்டனள். உலகிறைவனுகிய சிவபெருமானார், அங்ஙனமே அளித்து அத்தலத்திலேயே எழுந்தருளி யிருக்கின்றனர். யாங்கள் அதனால் இதனைக் காத்துக் கொண்டிருக்கின்றோம். நீர் அச் சண்பகக்காடு செல்லுக என்றனர். அதுகேட்ட அலரவன் தன் தொண்டர்களுடன், சண்பகவனமான நாகேச்சுரம் வந்து இடையிடையே வணங்கி, எட்டுத்திசையிலும் எண்ணிலா முனிவர்களால் ஏத்தப்பட்டு இறைவனுக்கு வன்னி மூலையிலுள்ள தடைய குடும்பக்காட்டிற்கு நெருப்புப் போன்றதான சூலத் திருக்குளப்புனித நீரில் கார்த்திகையின் முதல் ஞாயிறில் மூழ்கித் தூயராய், முனிவர் குழாங்களால் ஏத்தப்பெற்ற எம்பெருமானை இனிது கண்டு வலஞ்செய்து வணங்கித் தொழுத கையராய்த் துதி செய்வாராயினர்.

சார்ந்தோர் தமக்கே யின்பமளிக்குந் தலைவா வெங்கள் மலைமாதி
ஞர்ந்த வன்பின் கொள்கலமா யன்னைவேண்டும் வரம ளித்தோய்
தேர்ந்த விருவீர் பெருமையெலாந் தெரியாதேற்குந் தெளிவித்தா
யோர்ந்தே வுண்மைக்குணமூன்ருய் ஒளிருஞ்சுடர்நின் னடிபோற்றி.

ஐயா குணங்க ளொன்று மிலா யளவி லின்பப் பொருளாறு
மெய்யா வாசை யொன்றுமிலா யிமிரும் மறையின் பொருளானும்
பொய்யா முலக வுருவானும் பொன்ற லில்லாப் பொருளானும்
கையான் மயக்கி னுலகனைத்துங் காக்கும் புத்தேளடிபோற்றி.

தானேதோற்றி விண்ணவர்தந் தலைவர்தமக்குந் தலையானும்
வானே மாயை யான் மயக்கும் மன்னே யெல்லா வுருவுமாய்க்
கோனே யுலக மறைக ளெல்லாங் கொடுக்கு நிலைய மாயினையே
தேனே யமுத வான்கரும்பின் தெளிவே யுன்ற னடிபோற்றி.

உலக மெல்லைக்கும் புகலாறு யுலகி லொன்று முருவாறு
யலகில் பிறவிப் பெருங்கடற்கோ ரண்ணு னின்ற னடிப்புணையா
லிலகு மேமக் கரைசேர யெங்குநிறைந்த நலமானும்
விலகா வறிவின் வடிவாகும் விடங்கா வுன்றன் னடிபோற்றி.

தூயமறையாற் றயருநர்றாத் தணிதற் கரிய பொருளானாய்
ஆய வுலகந் தனையாக்கி யடக்கி யுன்பால் வளர்த்திட்டே
ஏய வணுவுக் ... னுவா யியலும் பெரிதின் பெரிதானாய்
பாய வெர்க்கு ... வளிக்கும் பரமா வுன்ற னடிபோற்றி.

என்றே பன்முறையாகப் படைப்புடையான் துதி செய்துவணங்கி நிற்ச, அப்படைப்புடையானைப் பிறைமுடியனுன நாகேசப்பெருமான் கடைக்கண் நோக்களித்து ஓதிம முயர்த்தோய்! உனது வரவுக்கும், துதிக்கும், மகிழ்ந்தனம் நினைத்தெண்ணமெல்லாம் நிறைவேற்றுவோம்; "அவை முற்றும் அறைக" என்று அருளிச் செய்யக் கேட்ட அலரோன், அகமகிழ்ந்து கங்கைச்சடையீர் மாதேவராய மாநதையீர்! நும்மை அடியேன் கண்ணுற்றபோதே நினைவெல்லாம் நிறைவெய்திடப் பெற்று, கழிபெருங் களியாட்டயர்ந்தேன் ஆயினும் அமரர் நலத்தைக் கருதிக் கையிலை மலையில் தேவரீரைக் கண்ணுறப் போந்தேன். ஆண்டு அடையப்பெறுமல் அதனைப்போல் உயர்ந்த தலமாகிய இத் தலத்தினை அடைந்து எந்தையீரை எய்தினேன் கருணை நிலயமே! இந்நகரிலேயே கடவுளர்க்கு வேண்டுவன இயற்றல் நுமது கடனே. அவையாவன :—வீடுபேறெய்தினர், ஒருசாரார்; வீடுபேற்றை எய்தாதவர்; ஒரு சாரார்; வீடுபேற்றிற் குரியார் ஒருசாரார்; வீடுபேற்றிற்குரியரல்லாதார், ஒருசாரார்; அவருள் வீடுபேற்றிற்குரியராவார், நும்பாலன்புடையவர்; உரியரல்லார் நும்பாலன்பில்லாதவர்; அவ்வாறு அன்பில்லாதவர் ஒருபோதும் வீடுபேற்றை எய்தார். அதனால் எல்லாரும் எங்ஙனம் வீடுபேற்றை எய்துவார்? அங்ஙனமாக ஒன்றும் அறியாதவர் வீடுபேற்றை அடைவது எங்ஙனம்? இந்த உலகமுழுதும் உடமால் படைத்தும் காத்தும் அழித்தும் வரப்படும ஆகையால், வீட்டிற்குரியார், உரியரல்லாதவர் என்பதை விளக்கி அருளல் வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தனர்.

இறைவனுஞ் சிவனவனைக் கண்குளிரக்
 கண்டிடுவோ ரினிமையாகத்
துறையுறவே புகழ்ந்திடுவோ ரவன்புகழைச்
 செவிகுளிரத் துன்னிக் கேட்போர்
கறைமிடற்றன் கழனினைந்தே யுயிர்விடுவோர்
 சிவவேடங் கருதிப்பூண்போர்
நிறையுடைய சிவத்தொண்டு பலசெய்வோர்
 நிமலனடி சார்ந்துவாழ்வார்.

சிவபிரான் ........ யான் புடன் கடைக்கணித்து மலரோய்! என்னைக் கண்டு களிப்பவர்கள், என் கதைகளைக்கேட்டுக் களிப்புறுவோர், திரு நீறு, திருக்கண்மணி, முத[illegible]வடங்களை விரும்பிப் பூண்டவர், என்னைப் புகழ்[illegible] என்னை நினைந்து இன்னுயிர் விடுவோர், எனக்குரிய எ[illegible]டையும் இயற்றி நிற்பவர், இவர்களெல்லோரும் வீடுபேற்றை எய்தற்குரியராவார்கள். இதுவுண்மை.

இதற்குப் பகையாய் வாழ்வோர் எல்லோருமே இருள் நரகமே இருப்பிடமாவர்களென்று அருளிச்செய்தனர். அது கேட்ட அறிவுடையனுன அலர் ஒழ்வோன், இறைவனே! அத்தகைய பாவத்தைப் பயின்றவர்களுக்கு அப்பாவக்கழுவாய் எப்போது உண்டென்று அஞ்சலித்து, விண்ணப்பஞ் செய்ய, இன்ப மளிக்கும் எங்கள் பெருமான் அருளுவாராயினர். திருமாலுந் திவந்தோய்! வீட்டிற்குரியரல்லாதவர்களாகிய எல்லார்பாலுங் கருணை உனக்குளதாயின், எனக்கு இனிமையான இந்தத் தலத்தில் கார்த்திகைத் திங்களில் கடவுளர் கூட்டத்துடன் முப்பது நாட்களான திருவிழாவைச் சிறப்புற நடாத்துக. அங்ஙனம் திருவிழா நடாத்தும்போது அந்த மாதத்தில் வரும் ஞாயிற்றுக்கிழமைகளில் ஞாயிறு தோற்றத்தில் எவர்கள் சூலத் திருக்குள நீரில் மூழ்குகின்றவர்களோ அவர்கள் அவ்வீடுபேற்றை அடைவார்கள்.

ஆதலால், கார்த்திகைத் திங்கள் கடைஞாயிற்றுக்குப் பத்து நாள் முன்னதாக விதிப்படிக் கொடியேற்றஞ் செய்து ஒன்பதா நாளில் தேர்த் திருநாள் சிறப்புறக் கொண்டாடி இறுதி நாளாகிய கடைஞாயிற்றுக் கிழமையில் திருவிழா நிறைவெய்தச் செய்வாயாக. அவ்வாறு செய்யும்போது சூலத்திருக்குளநீரில் மூழ்குகின்றவர்களும், இவ்வாறு செய்யப்படும் உனது திருவிழாவைச் செய்கிறவர்களும், அதற்குதவி செய்கின்றவர்களும், அவ்வாறே வீடுபேற்றை அடையக்கடவர்கள். என்னுடையகட்டளைப்படி தூய்மையான சூலத்திருக்குள நீரில், கங்கை முதலிய தீர்த்தத் ........ இம்மாதம் நிறைவெய்தும்வரை வந்திருக்கின்றார்கள். இதனால் இத்தலத்திற்கு வருவாரெல்லோரும் வீடுபேற்றிற்குரியராவார்களென்று எம்பெருமான் இசைத்தருளினர்.

அதுகேட்ட அலர் வாழ்வான், அப்பெருமான் அருள்விடை பெற்றுத் தன் அன்பர்களுடன் அக்கார்த்திகைத் திங்களில் விதிப்படிக் கொடியேற்றித் தேருடன் திருவிழா, செவ்வனே பத்துநாட்களும் சிறப்புறச்செய்து இறுதிநாளில் எல்லோரும் இனிது மூழ்கியும், சான்றுகணபதி, நாகேசப்பெருமான், மலைமகளாகிய கிரிகன்னிகை மலைமுலைபாகர், அர்த்தநாரீசரான மங்கைபாகர், ஆகிய இவர்களுக்கு ஞாயிறு திங்களில் இந்த அபிஷேக ஆராதனை செய்து அக்கார்த்திகை முப்பது நாட்களிலும் விடாமல் மூழ்கிப் புனிதமுற்று எம்பெருமானிடம் விடைபெற்று அன்பர்களுடன் தன்னகர் சென்றனன்.

அப்பெருமானுத்தரவால் இன்னும் பிரமன் கார்த்திகைத் திங்கடோறும் நான்கு ஞாயிறுகளிலும் அன்பர்களான அமரர்களுடன் வந்து மூழ்கி இறைவனை இனிதாகப் பூசித்துப் போகின்றனன்.

இப்படியே அந்நாளில் விழாக்காண்போர் அதற்குதவுவோர் அதற்குமுயலுவோர், இக்கதையைக்கேட்போர், இத்தலத்தில் வசிப்போர் ஆகிய எல்லோரும் வீட்டின்பத்தைப் பெறுவரென்பதுண்மை.

திருச்சிற்றம்பலம்.

20-வது பிரமன் கார்த்திகைத் திருநாளியற்றிய படலம் முற்றிற்று



அலெக்ஸாண்ட்ரா பிரஸ், கும்பகோணம்.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# திருநாகேச்சுரப்புராணம்.



# இரண்டாம்பாகம்.



கணபதி துணை.

# திருநாகேச்சுரப் புராணம்.

## திருநாகேச்சுரர் துதி.

அரப்பெருமா னன்பருள மகலாத
வருட்பெருமா னடியேன் பற்றுந்
திரப்பெருமா னெப்பொருட்கு மிறையாக
சடைப்பெருமான் றிருமா லயனூர்
சிரப்பெருமான் பாப்பணிமேய மிகப்பொலியப்
பாப்பராசாப்ச் சிறந்த நாகேச்
சுரப்பெருமான் றிருவருளே யெஞ்ஞான்றுந்
துணையாகத் தொடர்ந்து வாளுல்.

## 21-வது பராசரர் காமமயக்கத்திற்குக் கழுவாய் விளைவிய படலம்.

திருச்சிற்றம்பலம்.

பூக்கண்ணி, பராசரர் (சத்தியவதி) மெய்ந்நிலையாளைக்கூடி விளைந்த காமமயக்கத்தைக் கழித்துய்யும் நெறி தேடிய வரலாற்றைக் கேட்கவென்று சிவனா கூறுவாராயினர்.

ஒருநாள் பராசரர் மெய்ந்நிலையாளை மெய்யுறுபுணர்ச்சியால் மயக்குற்று வருந்தி யதனை யகற்றி உய்திபெற அவா வுற்று நைமிசக்காடு அடைவாராயினர்.

ஆண்டு மாணவர் குழாம் மாண்புடன் பெற்றவர்; வெறுப்பு, விருப்பற்ற திருமனம் வாய்ந்தவர். ஐம்புலன் நுகர்ச்சியை யறவே யகற்றினோர்; வேதமோதலில் வேட்கை மிகுந்தவர்; பொறுமை முதலிய புகழ்க்குணம் பெற்றவர்; இத்தகைய சௌனகர் முதலிய முனிவர் பெருமக்கள், பன்னிரண்டாண்டு பண்புற இயற்றும் வேள்வியை விருப்புடன் இயற்றுவாராய் அவ் வேள்விக்குக் காலையிற் செய்வன கருதி முடித்து அறக்கேள்வியாக அளவிலா அறங்களை யளிப்பதும், பழியும் பாவமும் அறவே பாற்றுவதும், பொருள் சேர் புகழுமாகிய சிவபுராண வமுதைப் பருகுவாராயினர்.

வேள்விக்கிடையூறாக மிகையுங் குறையும் விளைந்தால் வேள்வியும் பயனற்றதாம். அவ்விடையூறுகள் வேள்வியியற்றுவோனாலும், மந்திரம், தந்திரம், ஈகை முதலியவைகளாலும், நிகழ்வனவாம். அவ்விடையூறுவன :— மிகை, குறை யிரண்டனுள் மிகையானால் அந்நாடு அழியாநிற்கும்; குறையானால் அவ் வேள்வியை யியற்றுவோன் அழியா நிற்பன். ஈகையும் வேள்விக்கின்றியமையா உறுப்புக்களுள் ஒன்றாதலின் அதுவும் பொன், அழுதென்னு மிருவகையாலு நடத்தலால் அவற்றுள் குற்றங்களுளவாம். இவைகளனைத்து மொழிவண்ணம் இடையிடையே யெம்பெருமான் றிருநாமங்கள் செப்பிடுதல், சிவனுண்மையைச் செலவவினை கேட்டல், சிவத்தொண்டர் கூட்டஞ் செறிப்பெறுதன் முதலான செம்மையறங்கள் சிறப்புற்றுச் செறிதல் வேண்டும்.

ஒருசெயலின் குற்றமுமே யுளதாகா திருக்குமெனிற்
கருசெய விலாத்தொண்டர் கழுமலுடன் சிவன்றிருப்பேர்
தருசெயலே யிறைவனார் தன்மையெனு முண்மையுணர்
தருசெயலும் வேண்டுமெனச் சாற்றியிடு முயர்மறையே

இவைகள் முற்றும் எக்குற்றங்களையும் இகந்து, இனிய "கழுவாய்" ஆவனவாமென்க.

இனிக் கழுவாயில்லாத குற்றங்களனைத்தினுக்குங் கழுவாயாக நின்று அக்குற்றங்களை யறவே யழிப்பது புராணக்கேள்வியே.

கழுவாயென் றிலதாகுங் கருதரிய மறமான
முழுவதுமே யகற்றியிடு முக்கண்ணன் கதைக்கேள்வி
கொழுவியநல் வேள்விமுதற் கொள்ளுமெவ் வினைகளினும்
வழுவுறுமே லவையெலா மாய்க்குஞ்சிவ கதைக்கேள்வி.

ஈசன்வழி பாடியற்றி யெங்கள்பிரா னீறுபணி
யாசிலா [illegible]பூண்டே யன்பிசையச் சிவனார்முன்
மாசகனுள் வேள்வியொடு மகிழ்நோன்பு நீர்க்கரையே
நேசமொடு சிவகதையைக் கேட்பிப்போர் சிவனவர்.

சிவன்புகழாந் தெள்ளமுதைச் செவிக்களத்திற் பருகிடுவோ
னவன்பூசை மறையோத லளவின்மறை யுருவேற்ற
னவமிகை தருப்பணமே நல்வேள்வி நீர்முழுக்காந்
தவமென்றும் வேண்டாமற் றம்பிரா னடிசார்வார்.

இன்னுஞ் சிவகதையமுதைப் பெருக்குகின்ற காசி, பிரயாகை, திருப்பருப்பதம், திருவாரூர், திருக்கோகரணம், திருவாலவாய், திருவெண்காடு, சிதம்பரம், இராமேச்சுரம், சீர்காழி திருநாகையூர் அரித்துவாரமங்கலம், திருவையாறு திருக்கண்டியூர், திருவண்ணாமலை, மாயூரம், புள்ளிருக்குவேளூர், பழமலை, திருவிடைமருதூர், கோபிலம், காபிலம், முதலிய நற்றலங்களை நலமுறக்கண்ணுற்று வணங்கிய பயனை, ஒரு முறையே சிவபுராணங் கேட்போன் உயர்வுறப்பெற்றுச், சிவத்தன்மையையும் அடைகிறான்.

இன்னும், சிவபெருமான்றிருமுன் ஒருமுறையே சிவபுராணங் கேட்போர், சொல்வோர், எவர்களும், கோடிமுறை இருசுடர்களையும் இருபாம்பு தீண்டியிடும் இராப்பகலில் கோடி பசுக்களைத் தானஞ்செய்த பயனைக் கொள்ளுகின்றார்கள். இதனால் அவர்கள் சிவகதையை இடைவிடாது கேட்பவராயினார். அவ்வமயம் பராசரர் பரிந்து சென்றனர்.

அதுகண்ட அம்முனிவர்கள் அவர்க்கிருப்பிடமெழிலுறத் தந்து, வழிபட்டு, இன்மொழியால் நல்வரவு கூறி, முனிவேந்தனீர்! நுமது மாணவர்குழாத்துடன் தவம், வேதமோதல்,

புனித நீராடன் முதலியவெல்லாமு மெழிலுற நலமுறு கின்றனவோ? அடுத்தவரனைவரும் இறைவனது இனிய காட்சியைக்காணவும் இறைவனது மெய்ம்மைத்தன்மையைக் கேட்கவும், இயற்றுகின்றீர்களோ? இங்ஙனமே யாகச் சிவவழிபாடு முதலிய நல்லறங்களில் நுமது மனம் நலமுறச் செல்கின்றதோ' என்று நயமுற வினவினர்.

அதுகேட்ட பராசர முனிவர், சௌனகர் முதலியோர்களை முகமுற்று முனிவர்கள்! எல்லா மினியவாக நடைபெறினும் எனது அகமட்டும் அறநெறியி லணுகாமலகலாநின்றது என்னை யெனில் :— ஒரு நாள், கங்கையை வேண்டி யமுனையாற்றின் கரைவழி ஆங்கோட்டமோட்டியும், தந்தைமொழி கடவாதவளும், எல்லா வணிகளும் எழிலுறப் பூண்டவளும், இளமையும் அழகுமிசையக் கொண்டவளுமான (மச்சகந்தி) புலாண்மணத் தாளைக்கண்டு, ஆற்றைக் கடக்கவெண்ணினேன்.

அப்பேதை ஓடத்திற்கொருவருந் துணையின்மையால் கனலேயென்று கருத்துக்கொண்டு கேட்க எனது கமண்டலத்தை வைத்து யான் பாரமாக்கிவிட்டேன். அதுகொண்டு அப்பேதையவ்வோடத்தை நட்டாற்றில் விட்டனள் அதுபோதப் பேதையைத் தனித்துற்றமையாலவள்பால் வேட்கையுற்று, அவள் தந்தையான வசுவை நினைத்திட்டேன். அவனும் அவண் வந்து பல முனிவர்முன்னாக எனக்கவளை மணஞ்செய்திட, அம்மாதோடு புணர்ந்தனன். ஆங்கே என்னைப்போன்ற ஆயுளும், அறிவும்பெற்ற வியாதன் வியப்புறத்தோன்றி, என்பால் பிரியா, விடைபெற்று இலக்கைக்காடு இன்புறப்போந்தனன். யானும் அம்மாதினுக்கு மீட்டும் பேதையாக வரமளித்து அவளை யறவே யகன்றனன். அதன்றும், அம்மாதின் மெய்யுறு புணர்ச்சியால் விளைந்த வேட்கை மயக்கம் யான் கங்கையிற் றோய்ந்தும் என்னை விட்டுக்கழியாது கழிபெருங்காமமாயென்னறிவெலாம் விழுங்கியது. இதனால் அறநெறி யொன்று மறியாது மயங்குகின்றனன். இதுவே எனக்குப் பேரந்ததாகும். இதனை எங்ஙனமாயினும் நீர் அகற்று நெறியை ஆராய்ந்தறிவித்தல் வேண்டும்.

காமநோய் மிகுத்த வுள்ளங் கணக்கருஞ் செருக்கு மிக்கோ
ரேமமா மறிவு மில்லா ரினிநலந் தீங்கு காணார்
சேமநன் னட்பு மில்லோர் திகழறி வுடையார்க் கின்பந்
தோமற வியற்று றெவருந் துகளறச் செய்வர் நல்லோர்.

ஆதலால் என்னைத தூய்மை யாக்குதல் நுங்கடமையே யென்று இறைஞ்சத்திட்டனர். அதுகேட்ட அம்முனிவர் குழாங்கள் முற்றும் அதற்குடன்பாடுசெய்து, அதுவந்த நெறியை ஆராய்வாராயினர். இக்கதையை இன்ப அன்புடன் கேட்போர் படிப்போர் செல்லோரும் எல்லாத்தீங்குமகன்றின்புறுவ ரென்பது.

திருச்சிற்றம்பலம்.

21வது பராசரர் காமமயக்கத்திறகுக் கழுவாய் வினவிய படலம் முற்றிறறு.

---

# 22-வது சௌனக முனிவர் காமமயக்கத்திற்குக் கழுவாய் கூறிய படலம்.

---

திருச்சிற்றம்பலம்.

ஒப்பிலா முலையாகிய அம்மையார், பராசரர் எவ்வாறு காம மயக்கந்தணிந்து அறிவுபெற்றனர்? அதையருளிச செய்தல் வேண்டுமென விண்ணப்பஞ் செய்பச, சிவபிரான் அருளுவா ராயினர்,

நைமிசக்காட்டில், நலமுறவாழும். முனிவர் பெருமக்கள், •சௌனகரோடு நன்கு சூழ்ந்துணர்வாராயினர். •மயக்கமுற்ற மாமுனிவராகிய பராசரர் நமக்கு என்ஞான்றும் பேருதவி புரியா நின்ற வியாசரைத்தந்தருளிய தந்தையார; இன்னும் முக்காலத் •திலும் முன்னின்று உண்மையுணரும் உணர்வுடையர்; நான்மறை, ஆகமம், ஆறங்கம், முதலிய மெய்ந்நூல்களனைத்து மிகவுணர்ந்தவர்; இறைவனாயகிய ஈசன்பாலிறவாத இன்பவன் புடைபவரிற்சிறந்தவர்; தேவர், முனிவர், மக்கள், எவ்வுயிர்கண் மாட்டும் ஒழிவின்றி இனிமையே இயற்றத்தக்கவர்; இத்தகைய

பராசரமுனிவர், பெருமான் எல்லாம் அறியும் அறிவினையுடையவ ராயினும், உண்மை நிலையாவென்னும் மாதினைவிட்டகன்றும், காமவேட்கை கழியாமை, அவர் முற்பிறவியில் ஈசனிடத்திழைத்த குற்றமேயாம்.

இதுதான் எதனுலொழியுமென இரண்டுநாழிகை இருந்தெண்ணித் துணிந்து, சௌனகரென்னும் முனிவர் பெருமானுக்கு மொழிவாராயினர். நீவிர் மெய்யறிவுடையீர்! பேராசிரியரானீர்! ஆயினும் இந்த அறிஞரான பராசரருக்கு என்ன உய்தி யுரைப்பீர்? ஆராயின் ஆசிரியன் றிருமுன் வினவியவர்களுக்கு ஆசிரியனையறியாது யாதானு மொன்றை விளம்புவராயின் அவர்கள், வச்சிரப்பூவாக முந்நூறு கற்பத்தளவும் மலைகளிற் கிடந்து, பின்னர் வேடர்களாய்ப் பிறந்திடுவர். அவர்கள், நல்வினைப்பயனால் இறைவன் இனியகாட்சி, இறைவன் றிருவடித் தொண்டு முதலியன கிடைத்தாலன்றி, ஒருபோதும் மேற்கதி பெறாரென்பதுண்மை. இது தேவரீராலேயே, எங்கட்கு உறுதியாக அருளிச்செய்யப்பட்டது.

ஆதலால், இந்தப் பராசரர்க்குத் தாமே உய்தியுரைத்தல் வேண்டுமென, அதுகேட்ட சௌனகர் தலையமிருந்து, பராசரரைப்பார்த்துப் பகர்வாராயினர்.

முனிவேந்தே! முன்பிறப்பிற் செய்தவினையால் இப்பிறப்பில் மாதராசைமயக்கம் வந்தது. அஃதாவது, ஒருநாள், பிரமேச்சரமென்னும் பெருநகரான கோதாவரி ஆற்றின்கரையில் அருந்தவயோகம் புரிந்தீர். ஆண்டுவைகாசித்திங்களில், வசந்தத் திருநாள் நிகழ்ந்தது. அக்கொண்டாட்ட இறுதியில் (அவபிருத ஸ்நானம்) நீறைவெய்து முழுக்கிற்குத் தூயநீர்கொடுத்தருளு, யாழ், வீணை, தக்கை, உடுக்கை, முரசு பறை, திருச்சின்னம், காளம் முதலிய இசையொலி, ஏத்தொலி, கூத்தொலி, மறையொலியாகிய நிறையொலி, நீண்டிசைப்பப் பிரமேச்சுரனை பிஞ்ஞகனெழுந்தருளினர். அப்பொழுதே, நீவிர், உமது அரும்பெருஞ்செயலை விரைவில் முடித்துக்கொண்டு அவ்வாற்றின் கரையில் வந்தீர். அங்கு ஆடவனையேயன்றி ஆடவரையும் மயக்கும் அழகும், இளமையும் பெற்று அணிகள் பல வணிந்து பண்

மணங் கமழும் புழுகு, சந்தனம், குங்குமப்பொடி, பூக்கள் முதலியன புகழுறப்பூண்டு, நாடகக் கணிகையாகிய (சந்திரமுகி) திங்கள் முகத்தா ளென்பாள் ஒருத்தி, செந்தாமரைப்பூ செங் கையிற்கொண்டு, செவ்வனே நின்றாள். அம்மாதைக் கண்ணுற்று, வியப்புற்று, மயங்கி, அவள்பால் மனத்தை விடுத்து, அத்திர தேவர் மூழ்கும்போதும் அறியாது அவளையே கண்டு புன் சிரிப்புக்கொண்டார். தூய்மையான நற்பொழுதில் மங்கைபால் மனஞ்செலுத்தி மயங்குவது பெருந்தீவினைக்கிடமாகும். அம் மாபெருந்தீவினையே கங்கையில் நீர் மூழ்கும்போதும், மாதைப் புணர்ந்த வேட்கை மாறாது நின்றது அன்றியுஞ் சிவபெருமான் றிருமுன் மாதின்மேன்மனம் வைத்திட்டமையால், அது இந்த இழிகுலமடந்தையைக் கண்ணுற்று மயங்க வந்தது. இன்னும் அவ்வேட்கை ஒழிந்திலதே!

நலந்தரு மறிஞர் முன்னே நம்பனார் கோயின் முன்னர்த்
தலந்தரு தூய நீரிற் றடையிலா வீகை வேள்வி
புலந்தரு மெய்ந்நூன் முன்னர்ப் புகழ்மறை யுருவேற் றன்முன்
னலந்தருங் காம நோக்க மளவிலா மறத்திற் காமே.

அறிஞர், சிவபெருமான், அவர்திருக்கோயின், தூய நீராடல், ஈகை, வேள்வி, மெய்ந்நூல், மறையுருவேற்றல் முதலியவைகளின்முன்னர், மாதர்பால் மையல்கொண்டால், அஃதளவில்லாத தீமையைச் செறிவிக்குமென்பதுண்மை. அதுவே பின்னும்வேட்கையை விளைவிக்கும். அன்றியும், அந்தணராவோர் இழிகுலப் பெண்டிரால் இச்சைவைத்து இனிய மொழிபுகன்றால், அவர்கள் எத்துணை அறிவுடையாராயினும், அப்பொழுதே அவரறிவிழந்து, அழிதற்குக் காரணமாகுமென்பதுணரல் வேண்டும்.

நேயமார் துளிதா னென்று நிகழ்தரு நீரிற் சிந்திற்
பாயநீர் வெள்ளமுற்றும் பரவியே நிற்கு மாறே
மேயநல் லறிஞர்க் காக்கு மிகச்சிறி துடைய நன்றி
யாயமே லறிஞர் பால்வ மகலண்ணு மலையதாமே.

நீரின் நெய்த்துளிபோல, நமது சிறியதோர் தீவினை பெரிதுமாயிற்று. ஆதலால் இனி அதற்கு உய்திநெறியை மறை ஆகம

முதலிய எல்லா நூல்களையும் நுனித்துணர்ந்து நுமக்கு, நுவலு வேன்.

காவேரிக்குத் தென்பாகத்தில், மூவுலகத்திலும் முழுப் புகழ்பெற்ற சண்பகக்காடு ஒன்றுள்ளது. அதனைத் திருநாகேச் சுரமென்பர். அதிற் போந்து சூலத்திருக்குளத்தில் நாளுந் துளைந்து நீராடிச் சண்பகமர நிழலின் ஐயாயிரமுறை ஐந்தெழுத்து உருவேற்றிச் சண்பகநாதனையும் மங்கைபாகத் தலைவரையும், மலைமலையாளையும், கட்டளைப்பிள்ளையாரையும், வழிபட்டுக் கார்த்திகைத்திங்களில் வரும் ஞாயிறுகள் முற்றும் அத்திருக்குளத்தில் மூழ்கினால், முன்னுள்ள அறிவுண்டாகிவிடு மென்று உரைத்திட்ட சௌனகர் உறுதிமொழியைக் கேட்டு, பராசரமாமுனிவர் அம்மொழிப்படியே சென்று, அந்நகரில் ஒரு திங்கள் முற்றுமிருந்து, கார்த்திகைக் கடைஞாயிறில் அத்தி ரத்தேவருடன் அத்திருக்குளத்தில் அமுழ்ந்தி, ஆங்கு ஆராலுங் காண்டற்கரிய அம்மான் அருள்பெற்று, முன்போல் மெய்யறிவு பெற்று, அப்பெருமான் அருள்வடிவின ராயினரென்பது.

விரும்பினவர்க்கு வீடுபேற்றையளிக்கும் இக்கதையைக் கேட்போர், சொல்வோர் எல்லாரும், அல்லற் பிறவியறுப்பான், அருள்பெற்று இன்புறுவரென்பது.

திருச்சிற்றம்பலம்.

22வது சௌனகமுனிவர் காமமயக்கத்திற்குக் கழுவாய் கூறிய படலம் முற்றிற்று.

---

## 23-வது
## மார்க்கண்டேயர் வரவு கூறிய படலம்.

---

திருச்சிற்றம்பலம்.

அமரர் தலைவா! அருளினிலயமே! நற்றலமாகிய இதி லெழுந்தருளிய இறைவனுக்கு நாகேச்சுரனென்னும் பெய ரெய்தியதற்குக் காரணமென்ன? இத்தலத்திற்கு நாகேச்சுரன் எக்காலத்தெய்தினன்? அவை முற்றும் அடியேன் அறிந்துய்ய

அறைந்தருளவேண்டு" மென்று அம்மை காருறுகண்ணியார், விண்ணப்பஞ்செய்திட்டனர்.

அதுகேட்ட நள்ளிருளில் நட்டம்பயின்றருளு நாதன் திரு முறுவல் பூத்து ஆதரவோடு அறிவுறுத்தி யருள்வாராயினர்.

பிரமகற்பத்தில்- கிருதயுகத்திலே இன்பமளிக்கும் (சம் புரநிநதி) காவிரிக்கரையில் (சுகோஷம்) நல்லொலிநகரில் மறைய வரில் மாண்புபெற்ற (சுசீல) நற்குணனென்னும் பெரியார், ஒரு வர் இருந்தனர். அவர், மனு முதலிய நூல்களை மயக்கறப் பயின்றவர்; சிவபிரானுடைய உண்மையைச் செவ்வனே உணர்ந்தவர் சிவநெறி வழக்கங்களைச் சிறிதுஞ் சிதறுமற் செய்பவர்; இயந்திரம், தந்திரம் பயின்றவர்; (அக்கினி ஹோத்தரம்) நாள் வேள்வி செம்மையிற் புரிபவர்; அடக்கம், பொறுமை, தீவினையச்சம், முதலிய நற்குணங்கள் வாய்ந்தவர்; ஒழுக்கமே விழுப்பமாகக்கொண்டவர்; சிவத்தொண்டையே தாஞ்செய்யுஞ் செயலாகக்கொண்டவர்; திருநீறு, திருக்கண் மணி முதலிய சிவவேடஞ் சிறப்புறக்கொண்டவர்; சிவத்தல யாத்திரையிற் சிந்தையுடையவர்; இவர், (உத்துங்க) உயரமா முனிவருடைய் புதல்வியும், மலைமகள் வழிபாட்டில் மனம் வைத்தவளும், பதிநோன்பிற் பதிந்த வேட்கையுடையவளுமான (சுபமுகி) நன்னுதலை, என்பாளை மணந்து, இல்லறம் இனிது நடாத்துவாராயினர். அங்ஙன நடாத்துகின்றகாலையில், அற நெஞ்சுடைய அம்மறையவர், இல்லாளொடிசைந்து இல்லிருந்து வாழினும், அவள்பாலாசை அதிகமின்றிச் சிவத்தலத்தரிசனமே அமுதெனச் சிந்தையிற்கொண்டவராயினர். ஆயினும் ஒருநாள் நற்குணமுனிவர் இல்லறத்திற்கேற்ப இசைந்த புதல்வனின்மை யாற் கவல்வாராயினர்-

இன்னிலை வாழ்வார்க் கெச்ச மில்லதே லூரும் பேரும்
மின்னிலை யுருவும் வீடும் மிசைவுறு மின்பு மென்னும்
பொன்னிய னுடைநெல் லணிகள் முதலிய பொருணீ ரடற்
றுன்னிய பொறுமை வேள்வி சொன்னெறி லறங்க ளென்னும்.

இல்வாழ்க்கைக்குப் பொருளனைய புதல்வன், இல்லையானால் எதுவும் பயனில்லை. ஆனாலிங்ஙனம் புதல்வனில்லாமற்போனதற்கு யாமிருவரும் என்ன மறமியற்றினேமோ!

அயன்மனை விழைந்தும் பிள்ளை யணிகளைப் படிறு செய்து
மயமலி நெய்பால் கனிகை நாற்றப்பூ மணிபொன் றுடைகள்
வியன்மலி பூணூல் மான்றோல் வெல்லமும்பியம் பஞ்சுங்
கயிறிறை சிவனார் குறிகள் கம்பலங் கரந்திட் டேமோ.

ஒருமுறை பேணும் பெரியோர்க் குணவிட வுணர்ந்திலோமோ
வருமுறை நீரின் மூழ்கா துணைவினை மகிழ்ந்துண் டோமோ
வருமறை மொழிந்த வண்ண வடியினை வழிபட் டேத்திக்
கருமுறை கழிக்க நன்னீர்க் கலந்துநா மாடிலேமோ.

இவ்வாறே பிறவிகடோறும் பெரும்பாவங்களியற்றினமையன்றிப் புண்ணியம் புரியாமையால் இப்பிறப்பில் இனிய மக்கட் பேறு வாய்க்கப் பெற்றிலேம் அன்றியும் இல்வாழ்வார்க்கு மலடுமுண்டு. அதுதான் பலதிறப்படும். அவை மாதர் மலடு, மரிப்புமலடு, கதலிமலடு, காக்கைமலடு, முதலியவாகப் பெரியோர் பேசுவார். அவற்றுள் மாதர்மலடு, பெண்ணே பிறப்பது. மரிப்புமலடு, பிறந்திறத்தல்; கதலிமலடு, ஒன்றே பிறத்தல்; காக்கைமலடு, தாய்தந்தைக்குப் பகையாய்ப்பிறத்தல்; இவை யனைத்தும் முற்பிறப்பி லீட்டிய தீவினை யென்பனவாம்.

இன்னும் ஆடவர்க்கே யாகும் அரிய தீவினைகளுமுண்டு. அவை என்னை யெனில்? கருவுற்றமாதரை அக்கருக்கலங்கச் செய்வதும், கருவுற்ற மாதைக் கலங்கப்புணர்வதும், ஐந்து திங்கள் கடந்த கருமங்கையைக் கவலுற வடிப்பதும், ஆறு திங்கள் அகன்ற கருப்பிணி யாளை அயரத்தொண்டு செய்யத் துன்புறுத்துவதும், அம்மாதால் இயற்றப்படும் இல்லறச்செயலை முற்றும் இகத்தலும் முதலியவாம். இப்பாவங்களனைத்தும் ஆடவன் மலட்டுக்குக் காரணமென்பர்.

இதனால் ஆடவர், ஆடவளாகிய நம்மிருவருக்கும் அரும் பாவத்தால் மகப்பேறு வாய்த்திலதேயெனினும், எனதறுபதாவது ஆண்டில் ஓரருமைப் புதல்வன் எனக்கு உண்டாவனென்றும் அப்புதல்வனுக்கும் என்றாற் செய்யப்பட்டு இகத்தற்

காய பாபத்தால் இடையூறுகள் பலவெழுமென்றும், அவைகள் முற்றும் என்னுலும், அம்மகவாலும் இயற்றப்படும் சிவநல்லறத்தால் சிதையப் பெறுமென்றும், ஓர்கணிதர் முகமாக உரைக்கக் கேட்டேன்.

அவ்வாறுபதாவதாண்டும், இன்னும் ஆறுதிங்களில் நிறைவெய்தும். அதற்குள் அக்காதலனை அடையேனுயின், என்னுயிரும் அன்றே அகன்றுவிடும். இஃதுண்மையே யென்று, சுசீலர் சொல்லினர். அதுகேட்ட அம்மாது சிகாமணியும் கண்கள் நீர்ததும்பிக் கைகுவித்து இறைஞ்சி ஐயரே இவ்வுடல்மட்குடமும், மட்சுவரும் போலும் என்பதும் அறிவேன்; அதற்கோர் சருமகவுமில்லையேயல் ஆடவர்க்குப்பின்னர் அஃதிருந்தென் பயன்? அஃதிருக்குமிடமுற்றும் எண்ணிலா நோயுந்துன்பமும் இறப்பு மிகுந்திடு மென்பர். ஆதலால் தேவரீர்! தேகம் விடுமுன்னரே அடியேனும் இவ்வுடலை யகன்று உம்முடன் ஒன்றுவன். இது திண்ணம். அன்றியும் கற்புடைக்குணங்கள் இருபத்தொன்றில்அதுவும் ஒன்றுமென்பர்.

ஆடவ னிலைமை முதுமையிற் பணிக
   ளவனெதிர் பேசிடா வாய்மை
மாடுற வபலார் பான்முனி யாமை மாமன்மா
   மியர்பா லன்பே
தேடுறு கொழுநன் செழுங்கிளை தாங்கல்
   செறிந்தெறின் முனிந்திடா தெழுத
லீடுற விறைஞ்ச னின்றமு தளித்த
   னிகழ்வழி பாடுடன் நோன்பும்
காதனு யகன்பாற் காற்பெரு விரலிற
   கண்ணுற நடக்கையு ணாட்பில்
பேர்தவே பேசா தாயிலிற் புகுதாப்
   புகழவன் முன்னாற் றுமை
யாதாவு டைந்தன் பொருள்கா வாமை
   யவ்விறை யாணைநின் றாற்று
தேதமி லானுயி ரோடுயிர் வைத்த
   லிருபதி னொன்றுகற் பென்பர்.

ஆதலால் என்னன்புடைக்கேள்வா! உன்னுடன் உடன் கட்டையேறுவனென்று ஒருவருக்கொருவர் அளவளாவிய அமயத்தில் அவர்முன், மறை, ஆகமம், மாண்புடை நீதிநூல் முதலியனவெல்லாம் மயக்கறத்தெளிந்தவரும் முக்காலமுழுதும் முன்னறிபவரும், சிவன் புகழையே கேட்டு, சிவன் வழிபாடே தெரிவுரப் புரிந்து, சிவனையே கண்டுமகிழ்பவருமான மார்க் கண்டேயர் வந்தனர். அது கண்ணுற்ற அளவிலே அந்நல் லொழுக்கமுடைய மறையவர், எழுந்து தன் றுணையுடன் மனத் தூயராய் இன்ப அன்புசெய்து இனிய வழிபாடியற்றி நல்வரவு நயந்து கூறினார் இத்தூய கதையை உமையே! நீ கேட்க யான் கூறினமையால் இனி அரைக்கணமாயினும், ஒருகணமாயி னும், சிவனிரவில் சிவனூர்முன் யார் கேட்பினும், யார் சொல் லினும், நினைத்ததை நிறைவெய்தச் செய்தெயதுருவையும் அளிப்பேமென்றருளினனென்பது.

திருச்சிற்றம்பலம்.

23-வது மார்க்கண்டேயர் வரவு கூறிய படலம் முற்றிற்று.

---

## 24வது

## தக்கன் வினாவிற்குச் சிவன் விடையிறுத்த படலம்.

---

திருச்சிற்றம்பலம்.

நற்குணர், நன்னுதலாளென்னு மிருவருக்கும் அருள் புரி வான் அபித்த மார்க்கண்டேய மாமுனிவர்க்கு அவ்விருவரும், முடிவாய், அடிமூன்றுக்குந்தூய நீரளித்தலான அருக்கியம் ஆசமனம், பாக்கிய மூன்றும் அன்புடன் முன்னளித்து, (மது வர்க்கம்) பாலமுது, முதலியன வழங்கி வணங்கினர்.

பின்னரும் அவர்கள் மனத்தூயரும், காலமொரு மூன்றும், கருத்தில் உணர்பவரும், சிவ நெறியிற்றலைப்பட்ட செம்மைக் குணத்தரும், சிவவழிபாட்டினையும் சிவன்பாலன்பையும், சிவ னோன்பையும், அடைவேயடைந்தவரும், ஆன நல்லார் நல்வரவி னால் எளியேங்கள் எண்ணமெல்லாம் எளிதின் நிறைவெய்துமே யென்று இன்புற்று, இனிமைமொழியால் துதித்து நின்றனர்.

அதுகண்ட மார்க்கண்டேயர் அவ்விருவரையும் நோக்கி அறக் குணத்தோன்றலீர். இதுபோது நீவிர் உடல் மெலிந்துவாட்ட முற்றிருக்கின்றீர்.

சிவன்வழி பாடதைச் சிறக்கப் பெற்றவ
ரவன்வழி யன்பின ரகமுந் தூயதாந்
தவமுளா ரெவரெனச் சாற்றி டும்மறை
யவமிலா ரெவர்களே மல்லது மில்லரே.

சிவன்பாலன்புட சிவவழிபாடும், சிறப்புறக்கொண்டீராகிய நுமக்கு ஒரு சிறிதும் மனக்கலக்கம் உண்டாகாதே! அப்படியாக இதுபோது நீவிர் வாட்டமடைதற்குக் காரணம்யாது? கூறுவீராக வென்றருளினர். அது கேட்ட நற்குண முனிவர் அவர்பால் அடிகாள்! முன் சிவன்பால் செவ்விய அன்பர்களால் எனக்கு அறுபதாவதாண்டில் நன்மகனொருவன் நயப்புறத் தோன்றுவனென்றனர். அக்குறித்தகாலமும் நிறைவெய்துகின்றது. இதில் ஒரு பிள்ளையும் உதித்திலதே! அதற்குக்காரண மென்னவென்று என்மனமேங்குகின்றது. இத னுண்மையை அடியேனுக்கு அறிவித்தருள வேண்டுமென்று வணக்கத்துடன் விளம்பினர்.

அதைத்றிந்த மார்க்கண்டேயர் இரண்டு நாழிகை பேசா திருந்து, அதனையறிந்து, அம்முனிவரை நோக்கி முனிவேந்தே! நுமதுமனையாள் (சுவதனை) நன்னுதலி அம்மையார் இதுபோது மூன்று திங்கள் கருவுற்றவராக இருக்கின்றனர். அவரிடத்தில் ஆறுதிங்களுள் அழகனான சிவன்பாலன்பன் செவ்வனேதோன்று வன். ஆதலால் நீர், கலங்கற்க; வென்றருளி நினைவுடையதன்னிடஞ் சேர்ந்தனர். அம்முனிவர் பெருமான் அகன்றருளியபின்னர், அறநெஞ்சினரான நற்குணமாமுனிவர் தம்மனையாள் நன்னுதலா ளோடு அகமகிழ்ந்து நற்குணமும் நன்னடையுமுள்ளவராய், நவி லுதற்கரியஇன்பமுற்று, முகமலர்ச்சியோடு சிவனார் திருப்பேர் களை செந்நாவில் வரச்செய்து, சிவத்தொண்டர்களையே களிப்புற ஓம்பி, சிவனார் பொருள்சேர் புகழையும், சிவனுண்மையையும், செவியாறக்கேட்டுணர்ந்துவருவாராயினர். மனைவியார் அம்முனி வர்க்கு வேண்டும் பணிவிடைகளை வியப்புறச்செய்து அவரைக்

சிவனைச் சிந்தையிற் கொண்டிட, ஒருவருக்கொருவர் ஒற்றுமை யுடையராய் அம்முனி மொழிப்படி மகப்பேற்றை யுன்னி இருக்கையில், பத்துத்திங்களுமுற்றின பின்னர்ச் செவ்வேள் போன்ற வடிவழகுடைய மகனொருவன் நன்னாளில் நலமுறத்தோன்றுவானாயினன். அதுகண்ட அறவியல்பினரான அம்முனிவர் நூல் முறைப்படி பிறவிச் சடங்கு பிறங்க இயற்றி விளங்கியிருந்து, பன்னிரண்டாநாளில் (சுகர்மன்) நற்செயலினனென்று பெயரிடு செய்து அந்தணராகிய பெரியோர்களுக்குப் பொன், நெல், முதலிய பொருளெல்லாம் புகழ்பெற அளித்து, அறுசுவைய முதும் அன்புடன் ஊட்டிச் சுற்றத்தார் சூழ, விருந்துண்டு அந்தணர் வாழ்த்த அகமகிழ்ந்தனர்,

அதன்பின்னர் எட்டாவது ஆண்டில பூணூல் மணமும் புகழ்பெறப் புரிந்து பத்தாவது ஆண்டில் திருமகள் வடிவினளான ஒருமகளை மணம்புரிந்து மறைமுதலிய நூல்களெல்லாம் மாண்புடன் பயில்வித்தனர் அவ்வாறு பன்னூல் பயின்ற அந்தணர் சிறுவன் தந்தைபால் மிக்க அன்புடையனாயினன்.

ஒருநாள் நற்குணமுனிவர், பன்னிரெண்டாண்டுற்ற நற்புதல்வனை நயந்து நோக்கிப் பிள்ளாய்! யாம் கிழவராயினபடியால் காடுகளிற்சென்று கருதியபொருள்களைக்கொண்டுவர இயலாமையால் நீயே போய் வேள்விக்கு வேண்டும் நாணல், புரசு, விறகு, முதலியன நயமுறத் தேடிவருகவென்று கட்டளை யிட்டனர். அக்கட்டளையை அன்புடன் ஏற்றுத்தாய்தந்தையர் இருவர்களுக்குத்தளர்ச்சியுண்டாகாமல் இனியமொழிகளை இயம்பி வேள்விக்கு வேண்டுவன விரைந்து கொண்டு வருகிறேனென்று விடைபெற்றுப் பிரிந்து போந்தனன்.

அவ்வாறு பிரிந்துசென்ற நற்செயன்முனிவன் காவிரி நதிக்கரையில் கமுகு, நெல்லி, மா, பலா, புன்னை, பச்சிலைமரம், யானைவணங்கி, எலுமிச்சை, அசோகு, புரசு, வன்னி, மகிழ், முல்லை, முதலியவற்றால் அடர்ந்த அருமையான பிரப்பங்காட்டில் புகுந்தனன்.

ஆங்கு மயில், குயில், முதலிய பறவைகளையும் கலைமான், முதலியவிலங்குக் கூட்டங்களையுங்கண்டு, வியப்புற்று அவற்றின் இனியகுரலோசையைக்கேட்டு மகிழ்ந்து, ஆங்கே பற்பல இடங்களிலும் போய் வேள்விக்கு வேண்டும் சமித்து முதலிய கைக்கொண்டு, நடுப்பகலில் தளர்ச்சியுற்று ஆங்கோர் மாநிழலை அடைந்து. அவ்வேள்வி விறகு, முதலியவற்றை வைத்து அம்மரத்தடியில் உடையை விரித்துத் தொன்மையாயுள்ள புற்றின் அருகே தலைவைத்து அறியாமல் அயர்ந்து தூங்கினன்.

அப்புற்றில் ஆதிசேட குலத்தில் உதித்தவனும், தக்ககனென்ற பேருற்றவனும் கொடிய நஞ்சைக் கூடியவனும், சிவன் பாலன்பு சேர்ந்தவனும், சிந்தையில் நினைப்பதைக் கொடுக்கும் சிந்தாமணி யென்னும் செம்மை மணியையுடையவனுமான பாம்பரசன் ஒருவன் சிவபெருமான் திருவடிச் சேர்ந்த நெஞ்சினனுயிருந்தனன்.

அதுபோது தக்ககன் நற்குணமுனிவர் இருவருக்கும் அளவிலா மாகீர்த்தி அளிக்கவும் சிவநன்னகர் ஆக்கம்பெறவும் திருவுளங்கொண்டு சிவபிரானுர், அப்புற்றிற் சென்று அப்பாம்பாசனைக் கருணையால் நோக்கியருளி அன்பாசே! அடக்கம் பொறுமை, அன்புமுற்றிய நினது தவத்தை அளவின்றி மெச்சினேன். அத்தவமும் முற்றுப்பெறுதற் கோருய்தி கூறுவேன். அதைக்கேட்பாயாக! இதுசமயம் உன் தவத்திற்கிடமான புற்றில் தலைவைத்துறங்கும் அந்தணர் புதல்வனை விரைந்து சென்று கடித்திடுக.

அவன்முற்பிறவியில் எண்பாலிடையூறியற்றியவன். அவனை நீ தீண்டினுல் உன்பேரால் அவனுக்கு மூவுலகத்தும் பெரும் புகழுளதாகும். நீயும் என் அன்பர்களிற் சிறந்திடுவாயென் றருளினர்.

அத்தக்ககன் நகைத்து அடிகாள்! அம்முனிமகன் அடக்கமும், அறிவும், வாய்ந்தவன்; என்னதிங்கு இழைத்தனனென்று எம்பெருமான்றிருமுன் விண்ணப்பஞ்செய்தனன்.

அதுகேட்டருளிய இறைவன் தக்ககா! இவன்முற்பிறப்பில் பெருநோயாற் பிணிக்கப்பெற்றுப் பெருமறமுடையனுய்ச் சிவனை என் அருட்குறியை நாளும் நாளும் வழிபாடியற்றிவந்தனன். அப்படியே வழிபட்ட இவன் மூன்று திங்களுமுன்வழிபாடுவிட்டு இருந்தனன். தன்னுலியலாவிட்டாலும் தன்மாணுக்கர்கள் மக்கள் முலலியவர்களினுலாவது பொருள் கொடுத்து அயலார்களினுலாவது அவ்வழிபாடு தடையுறுமல் செய்வித்திலன். அவ்வாறுசிவவழிபாடு செய்யாமல்எவன்உணவுண்பானே அவன் இந்நிலையடைவானென்பது விதியாதலால்,

> அங்கணு னருளைக் கொண்டே யவன்வழி பாடு முற்றி
> பெங்கணு மிசைய வுண்பா னேற்றநற் பிறவி யுற்றோன்
> திங்களஞ் சடையோ னடியிற் செய்வழி பாடின் றுண்போ
> னங்கணு நரகிற் காளா யளவிலாத் துயரஞ் சார்வான்

மூன்று திங்கள் வழிபாடற்ற இம்முனிமகனைத்தீண்டுதல் முறையேயென்றும் அங்ஙனம் தீண்டுவையேல் அவன் முற்பிறப்பில் எனக்கினிய ஊமத்தம்பூ எடுத்துச்சிவவழிபாட்டிற்குக்கொடுத்த பயனுல் தீண்டினபோதே அவன் தந்தையால் பிழைப்பிக்கப்படுவான். அதற்கஞ்சற்கவென்று திருவாய் மலர்ந்தருளினர். அந்த அருளிப்பாட்டை அன்புடன் ஏற்று அஞ்சலித்து வணங்கி அம்முனிமகனிருப்பிடம் போந்தனன்.

இந்தக்கதையை அன்புடன் கேட்பவர் பெரும்பாவத்தினின்றும் நீங்கி இன்புறுவரென்பது.

திருச்சிற்றம்பலம்.

24-வது தக்ககன் விஞவிற்குச் சிவபிரான் விடையிறுத்தபடலம் முற்றிற்று.

---

## 25-வது தக்ககன் சுடுசொல் பெற்ற படலம்.

---

திருச்சிற்றம்பலம்.

மாயப்பிறப்பறுக்கு மன்னனுகிய சிவபிரானுர் வண்டுவார் குழலியை நோக்கி வழங்குவாராயினுர்.

தக்ககனென்னும் பாம்பரசன் எம்பெருமானார் இட்டருளிய கட்டளையைப்பெற்று, அம்முனிமகன் துயிலும் பள்ளியிற்சென்று, அவனைச்சுளித்து நஞ்சால் தொட்டனன் அன்றே அவனுயிரகன்றது. இது கண்டருளிய கண்ணுதற்பெருமான் கருணையால் ஒரு முனிமகனாக உருவெடுத்து நற்செயன் முனிவன்றந்தையான நற்குண முனிவர் அகஞ்சென்று அவ்வந்தணனை நோக்கியருளி நற்குணத்தோன்றல்! நீர் மாபெருஞ்செல்வம் மகிழப்பெற்றீர்! மிகநல்லோரான நுமது புதல்வன் காட்டின் நடுவண் பாம்பரசால் கடிக்கப் பெற்று மாண்டனன். அவ[illegible] ஆங்கோர் புற்றில் புகக்கண்டனனென்றருளினன்.

அக்கொடுமொழியைக்கேட்ட அளிவிலே நற்குண முனிவரும் (சுபமுகி) நன்னுதலாளும் ஆகிய இருவரும் உயிர்போனாற் போல் உயிர்ப்பற்றுக்கிடந்தனர். ஒரு (முகூர்த்தம்) இரண்டு நாழிகை கடந்த பின்னர் உயிர்ப்புற்று எழுந்தனர்.

அவ்விடம் எழுந்து சிறுவனே! அச்சிறுவன் யாங்கேகிடக்கின்றான்? அதுகாட்ட உனக்கியலுமோ வென்றலறினார். அதுணருக்கொண்ட அச்சிறுவனும் நற்குண முனிவே! ஒரு கூப்பிடு தூரத்தில் எனது இருப்பிடம் இருக்கின்றது. ஆங்குச்சென்று உணவும் நீருமுண்டுவந்து உன்பிள்ளையை உனக்குக்காட்டுவன்.

எனக்குப்பசியும் நீர்வேட்கையும் பெரிதுள்ளன. அதன் பொருட்டு அகஞ்செல்ல வந்தனன். அங்ஙனம் வந்த நான் இரக்கத்தால் இதை உம்மிடம் உரைத்துப்போகலாமென்று வந்தேன். வரினும் இப்போதே உணவுண்ணாவிட்டால் என்னுயிருடனே ஒழியும் உண்மையென்றருளிச்செய்தனர்.

அதுகேட்ட நற்குணர், பிள்ளாய்! நின்பசி, நீர் வேட்கை யிவற்றை இப்போதேமாற்றுவன். என் அகத்தில் நலமுறுபலங்களும் வழங்குறு கிழங்குகளும் பக்குவஞ் செய்யப்பட்டுப்பல வாயுள்ளன. சர்க்கரை, நெய்சேர்த்தியற்றப் பெற்றசிற்றுண்டியும் காய்ச்சிச் சர்க்கரை ஏலஞ்சேர்க்கப்பட்ட பாலும் இருக்கின்றன. உனக்குவேணடுவனவுண்டு நீர் வேட்கையையும் நீக்கி, என்னுடன் வந்து என்குழந்தையைக்காட்டுகவென்று இனிதேயிசைத்தனர்.

அப்போது ஆங்குச்சென்று இறைவனான அவ்விளைஞர் பெரு
ன் என் ஐயா! நீர் கொடுக்கும் பால் பழங்கள் எங்ஙன முண்
பேன்? நீர் இதுசமயந் தொடத்தகாதவராக இருக்கின்றீர்; உம்
மகன் மாய்ந்தனன். நான் (குரு) அறிவன் அகத்திருப்பவன்;
ஓத்தினை ஓதுவேன்; மறையோரிளைஞன் அங்ஙனமாக எவ்வாறு
உம்பாலுண்பேன்? என்றருளினர்.

அது கேட்ட அம்முனிவர் என்செயவேன்? இன்றேபெண்
ணுயிருமொழிந்ததென மனங்கவன்று குழந்தாய்! நீயேநற்றவரு
ளாக அறிகின்றேன். ஆதலால் நீயே எனதில்லிற் புகுந்து வேண்
டுவன உண்டு உன் பசித்துயர் நீக்கி, என்னுடன்போந்து என்
புதல்வனைக் காட்டிடுவென்று வருத்தமுற்று வேண்டினர். அது
கேட்ட இளைஞர் பெருமான் திருவுளமகிழ்ந்து ஐயா! நீருரைத்த
படியே செய்வேன் உணவிருக்கு மிடங்காட்டுக வென்றருளினர்.

அம்முனிவரும், உணவிருக்குமிடங்காட்டிட, மகிழ்ந்து
அனைத்துமுண்டு, அயர்வகன் றகமகிழ்ந்து, யான் இதுபோது
என் அயர்வெலாநீங்கி இன்புற்றேன். அறிஞர்மணியே! உமது
பிள்ளை யுயிர் நீங்கினுனாயினும் இதுபோது உணவு வேட்கை, நீர்
வேட்கை, முற்றும் நீர் நீக்கினமையாலும், உம்முடைய சிவவழி
பாட்டாலும், அப்பிள்ளை விரைவில் உயிர்பெற்றுய்ந்து விடுவ
னுண்மையேயென்று விளம்பிக்கொண்டு, தாய் தந்தையர்
களாகிய அவ்விருவரையும் அழைத்துச்சென்று, நற்செயலோன்
இறந்து கிடப்பதையும் கடித்தகடசெவிபுகுந்த புற்றையுங்
காண்பித்து மறைந்தார்.

முனிவருமவர் மனைவியாரும் இனியமதலையைக் கண்ணுற்
றுப் புலம்பினர். அடுத்த புற்றிலேயிருக்கு மாவரசை நோக்கி
வெகுண்டு நற்குணமுனிவர் (சாபம்) சுடுசொல் நவில்வாராயினர்.
தீயநினைவுசிறந்தவனே! நீ அந்தணர் மைந்தனைத்தீண்டிக்கொன்ற
தீவினையால் நின்பாம்புத் தலைமையை இன்றே யிழந்திடுக. பதி
னாயிரம் பெரும்பாப்பயனும் உனைவந்துற்றிடுக ஆயிரமாண்டு
தலை யெடுக்காது வண்மை, உனது ஆற்றன் முற்றும் அழிந்
தொழிந்திடுகவென்று கொடுமையாகச்சுடுசொல்லைக்கேட்டபாந்
தளின் வேந்தன் எழுந்து இறைஞ்சி நின்று தொழுகுலத்தோன்
றல்! நீ அறிந்தவனாயினோ;

முன்புறு பிறவியின் முயன்ற விருவினை
யின்பய னிருநிறத் தியம்ப நின்றிடப்
பின்புறு பிறவியிற் பிறங்கு முயிர்களுக்
கின்பொடு துன்பமா யெப்தி னென்செய்வார்.

இருவினை யாக்குமெய் து விப்பவ
னருவினை யொருவிய வவன்சிவ னொருவனே
வருவினை யொருவரா மன்னுயி ரெதற்குமே
யொருவன தெழுத்தினை யுய்ய லாகுமோ.

நீர் அதற்கு வலிபரோ? எல்லாமறியு மியல்பினையுடைய நீரேயறிவீராக. யாங்கள் எல்லாமவனருளென்று எஞ்ஞான்றும் நடப்பேம். நாங்கள் பாமயின் குலத்திற் பிறந்தவர். ஒருவன் எம்மை க்கடியென்று கட்டளையிட்டால் இவனுக்கு இடையூறு செய்யவேண்டுமே யென்று உளங்கவன்று ஒருமூன்று நாட்களு முணவின்றி நமது இறைவன் வலையிதயத்தெண்ணி இருந்திடு வோம்.

யாங்கள் எல்லார்க்கு மிறைவனாகிய ஈசனுக்குத் தொண்டு பூண்டொழுகுகின்ற தொகையாளர். ஆதலால் எம்மை மறையவர் குலமன்னரே! நீர்வெகுண்டு சுடுசொல்வழங்குவது நெறியோ? ஆயினும் நீர் அவ்விறைவன்பா லன்புற்றவராதலால் அதுவும் எம்பிரான் ஆணையேயாகுமென்று எளியேனை ஏற்றுக்கொள்ளல் வேண்டும். இனி தேவரீர்! நுமது வெகுளியை விடுத்து வெகுண்டு கூறிய சுடுசொல்லுக்கு மாற்றமொன்று வழங்கல்வேண்டு மென்று வணக்கத்துடன் கேட்டனன். அந்திவண்ணன் ஆணை யையறிந்த அந்தணருந்தஞ் சீற்றஞ்சிதைத்துச் செப்புவாராயினர்.

அரவாசே! இதற்கு இரண்டு கூப்பிடு தூரமளவில் மாயூர நகரில் முளரிநீராகிய திருக்குளக்கரையில் காசிபமுனிவர் கதி பெற இருக்கின்றார். ஆங்கே சென்றால் உன்னுடைய இச்சுடு சொல்லுக்கு ஓர் கழுவாயுரைப்பார். அதையன்றி வேறொன்றில்லை யென்று விளம்பித் தன்மகனைச் சிவனுக்குச்செய்ய முயன்றனர்.

இக்கதையைக் கேட்டவர் சொன்னவர் பாம்பின் பயம் விடுத்துப் பல்லாண்டிருந்து வாழ்வாரென்பது.

திருச்சிற்றம்பலம்.
25-வது தக்ககன் சுடுசொல் பெற்றபடலம் முற்றிற்று.

---

## 26வது காசிபர் தக்ககனுக்கு அருள்மொழி அளித்த படலம்.

---

திருச்சிற்றம்பலம்.

உமைதருநோக்குமையை அருள்நோக்களித்து ஆராத இன்பம் அநுபவனாகிய சிவபிரான் அருளிச் செய்வாராயினர்.

பின்னர், நற்குண அந்தணன், (சம்பாவதி) காவேரிநதிக் கரையில் மூழ்கித் திருநீறு, திருக்கண்மணி, பூண்டு கருணைக் கடலாகிய கறைமிடற்றிறைவனைக் கருத்திலிருத்திக் கையில் நீரை எடுத்து,

ஞெண்டியலு மதியதனி னிணைவரிய வம்புவிநாட்
கொண்டிடுநற் சிவநோன்பு குறிக்கொண்டே விளக்கிட்டு
வண்டுதிரள் பூவிட்டு மணமிட்டு வழிபடுவார்
தொண்டினல மனுவினுக்கோர் தொல்லண்ட முவமையதே.

என்பதனால், "யான் கார்த்திகைத் திங்கட் கிழமையில் நோன்பிலிருந்து இறைவனைக் கண்ணுற்று, வழிபட்டு, விளக்கிட்டு, வலம்வந்து, வணங்கிய பயனில் பதினாறில் ஒரு பங்கை என் மகன் பிழைக்கக் கொடுத்தேன். இதனை எல்லாவமரர்களும் சான்றாகக் காண்பாராக. கார்த்திகைத்திங்களில் திங்கட் கிழமையில் விளக்கிட்டு, எங்கள் சிவபெருமானைக் கண்ணுற்று, வணங்கினால், அது நினைத்த பலனை அளிப்பது உண்மையே யாயின், என் புதல்வன் இப்போதே உயிருள்ளவனாகச் செய் வேனென்று அந்தணன் நீரை அப்புதல்வன்மீது விடுத்துத் தட்டி எழுப்பினன். எழுப்பவே அத் திங்கட்கிழமை நோன்பின் பயனால் தூங்கி விழித்தவன்போல் றெழுந்தனன்.

ஆங்கு எழுந்த அந்தணச் சிறுவன் ஐயனைத் தழுவினன். அம் முனிவரும் அப் புதல்வனை ஆகமுறத் தழுவி அகமகிழ்ந்தனர். பின்னர், அம்மகனையழைத்து அகஞ்சென்று பெரியார் பலர்களுக்கும் பெருவிருந்தாக அறுசுவையமுதூட்டி காணிக்கையுடன் வெற்றிலைப்பாக்கு அளித்துக் களுத்து நிறைவெய்திக் களிகூர்ந்து அவர்களளித்த (அட்சதை) முழுவெள்ளரிசியில் மூழ்கினர்.

இனி அம்முனிவர் வேந்து நற்செயலனான நன்மகனோடு வேள்வி இயற்றி முறையாக இன்ப அன்புடன் இறைவனை வழிபட்டேத்தி வாழ்ந்து வருகையில் ஒரு நாள் அம் முனிவர் பெருமான் அன்பு, அறிவென்ற சிவநெறியில் தலைப்பட்டு வீடு பேற்றை மேற்கொண்டார். அவர் மகனான நற்செயலன் அருட்சிவயோகியானன். எங்கும் இறைவனைக்கொண்டு ஓடுஞ் செம்பொன்னும ஒக்கவே நோக்குவானாயினன்; பின்னர், அவனும் அமலாடியின் அடியை அடைந்து இன்புற்றனன். அம் முனிச்சிறுவன் அன்னையும், அவ்வாறே அன்புற்று அரனடியை அடைந்து இன்புற்றாள்.

அதன் பின்னர், பாம்பின்குலத்துதித்துப் பாம்பரசனான தக்ககன் அம்முனிவர் அருளியபடியே, முளரிநீர்க்கரையை முன்னிட்ட காசிபரை அடைந்து, கருணைக்கடலே. கடவுள் வடிவுடையாய்! யான் தக்கன், எனக்கு அருளுக என்றிறைஞ்சினன். அதுகண்டருளிய காசிபர், அரசே! என்னுடன் இம் முளரி நீர்க்கரையில் (மாயூரநாதன்) மயிலைக்கிறைவர் வழிபாட்டிற்கும் எனக்கும் உதவியாக இருந்திடுக. என்னுடன் இத் தாமரைக் குள நீரில் மூழ்கி இங்கெழுந்தோதுக. அவர்சொன்ன ஆயிரமாண்டும் அகன்ற பின்னர் உனது வல்லமை உனக்குண்டாகும். அதன் பின்னர், பல சிவன்றிருப்பதிகள் சென்று நீராடலும், பெரியார்க்கீதலும், செய்தால் உனது முழுவல்லமை பெறுவாய்.

முன்னொரு பொழுதிலே, துருவாசரால், சுடுமொழி பெற்ற இந்திரன், அரசியல் முதலிய எல்லாமிழந்து நடக்கவும் ஆற்றலின்றி மயில்வடிவெடுத்துப் பதினாயிரம் ஆண்டு இங்கே

நற்றவம் பெரிதியற்றினன். அதற்கு எண்ணுதற்கெட்டா எழிலார் கழலோனான இறைவன்முன் தோன்றி அருளி, அவனுக்கு வானுலகின் அரசியல், திரு, ஆற்றல் முதலிய எல்லாமும் வழங்கி அருளினார்.

பின்னர்த் திருமகளும் அலரவன் சுடுமொழி பெற்றுத் திருமால் மார்பைவிட்டகன்று அவரை அறியாது மயங்கி முனிமொழிகொண்டு, அறிவடைந்து அன்புடன் அத்திருமகள், புனித நீர் நிலையான திருக்குளமொன்றாக்கி, இவ்விடமே ஆக்கம், அறிவு, இறுதி, இல்லானை இறைவன் அருளையும் இனிதே எய்தினள்.

இவற்றை நன்குணர்ந்து இங்கேயே ஆயிரம் ஆண்டுகளாக அரிய தவம் இயற்றுகின்றேன். நீயும் என்னுடனிருக்க என்றனன். அவ்வாறு கூறிய காசிப முனி மொழியைக் காதிற் கேட்டுத் தக்ககன் அத் திருப்பதியிலேயே, அரிய தவம் இயற்றி வாழ்ந்து வருகையில், ஆயிரமாண்டின் இறுதியில், பேசாது நின்ற பெருங்கருணைப்பேர் ஆருன பெருமான் அருள் பெற்றுத் தன் ஆற்றல் அடைந்து முன்போல் காசிபர் கழலை இறைஞ்சி. அடிகாள்! தேவரீர், கட்டளைப்படியே இவ்விடமே இருந்து அருந்தவம் இயற்றினேன். இன்பப் பெருமானருளால் என் ஆற்றலும் அடைந்தனன். இனி ஆதிசேடனைப் போன்று முதன்மையும் அப்போதுபோல் எப்போது கிடைக்கப் பெறுவேன். அதையும் அருளிச் செய்தல் வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தனன்.

காசிபர், அரவரசே! நினது செல்வம் நம்மனோரெவர்க்குந் தலைமை, இறையன்பு, இறையறிவு, வீடுபேறு முதலிய எல்லாமும் அடையக்கூடிய திருப்பதிகள் இவண் நான்குள்ளன. அவை என்னைப் போன்றவர்க்கும், உன்னைப் போன்றவர்க்கும், பிறர்க்கும், பயன் தருவனவாம். உன்னுடன் நானும் அந் நான்கினும் இறைவழிபாடு செய்து, மேற்கதி பெறுவன். இருவருமே (மதுநாதன்) மயிலைநாதன் அருளையடைவோம் என்று கூறவே அவ்வரவரசும், ஐயனே! அந் நான்கு திருப்பதிகளையும் „ அடைவே கூறல்வேண்டும் எனக்

கூறுவாராயனார். அரசே! அந்நான்கையும் கேட்டவளவிலே,
இந்து மறமும் அறவே ஒழியும். அந்நான்கையும் அடுத்தார்
கடவுள் வடிவாமாய்க் காணப்படுவார். அவற்றுள் இக்கீழ்கடலுக்கு
மேற்கில் மூன்று காத அளவிலே, திருக்குடந்தையிலே, வில்வக்
காடென்று ஓர் தலமுண்டு. அத் திருப்பதியிலே, கூவிளமரத்
தடியில், ஞாயிறால் நன்முறை வழிபட்ட அருள்வடிவான இறைவ
னார் இருந்தருள்வர். அங்கண், சிவன் இரவில், முதற் (யாமம்)
கூற்றிலே, வழிபாட்டிற்குரிய மாண்புடைய பொருள்கள் எல்
லாம் கைக்கொண்டு, தண்ணுமை, பேரிகை, வீணை முதலியன
தழங்க, ஆங்குத் தன்மை பிறரால் அறியாத்தலைவனை, வழிபாடு
இயற்றி, மகிழ்வித்து அதன் கீழ்த்திசையில் (குரோசம்) ஓர்
கூப்பிடு நீளத்தில் உள்ள திருநாகேச்சுரத் திருநகரில், கற்பனை
கடந்தவராயும், அறிவே வடிவினராயும், மரம், மண், இலை
யாகியவற்றில் எழுந்தருளி இன்ப அன்பினர்களுக்கு எளிதில்
அருளாநின்றார். எம்பெருமாட்டியும் அங்ஙனமே எழுந்தருளா
நின்றாள். அத்தகைய திருநாகேச்சுரத் திருநகரில், சிவனிரவில்
இரண்டாவதான (யாமம்) காலக்கூற்றிலே, வழிபாட்டிற்குரிய
வளமான பொருள்களைக் கைக்கொண்டு, இறைவனை இன்ப
அன்புடன் வழிபாடு செய்க. இனித் திருநாகேச்சுரத்திற்குக்
கீழ்த்திசையிலே ஒரு (யோசனை) நிலைவு நீளத்தில் வன்னிக்
காடென்பது ஒன்றுள்ளது. அத் திருப்பதியில், நெருப்பு
வேந்தன் என்பான் தனக்குண்டான வயிற்றுவலி. காண்டவக்
காட்டை எரித்துங் கழிபாதாகவே, அது விடுக்க ஆங்குள்ள
வன்னிமரத்தடியில், (அக்கினிதீர்த்தம்) நெருப்புத்திருக்குளம்
எனத் தன்பெயரால் ஒன்றுண்டாக்கி அதில்மூழ்கி, ஆண்டவனை
வழிபடவே, அவனருளால், அந்நெருப்பு வேந்தனுக்கு உண்
டான வயிற்றுவலி முற்றும் அகன்றமையால், அந்நெருப்பு
வேந்தன் பெயர்கொண்ட ஓர் திருக்குளம் அந்நகரிலுள்ளது.
அந்தத் திருப்பதியில் சிவனிரவில், மூன்றாவது (யாமம்)
கூற்றிலே, எம்பெருமானை எழில்பெறப் பூசித்திடுக. இனிக்
கீழ்கடலின் மேல்கரையில் நிலைபெற்ற புன்னைக்காடென்ற
திருப்பதியில், திங்களால் செய்யப்பட்ட திருக்குளம் ஒன்
றுண்டு. அதில் சிவனிரவில் நாலாவது (யாமம்) காலக்கூற்றிலே,
மூழ்கி அங்கெழுந்தருளிய திங்கள் நாதனைச் செம்மையிற்

கண்ணுற்று வழிபாடியற்றினால், செய்த மாபாவங்கள் அனைத்தும் அகலப்பெற்று, எல்லா நாகங்களோடும், அரவக்குலத்திற்கு அரசுரிமையையும் அடையலாமென்றருளினர்.

திருச்சிற்றம்பலம்.

26வது தக்ககனுக்கு அருள்மொழி அளித்த படலம் முற்றிற்று.

---

## 7வது காசிபர் தக்ககனுக்கு நாற்றலச் சிறப்புரைத்த படலம்.

---

மட்டுவார் குழலுமையே! காசிபர் தக்ககனுக்கு நான்கு தலச்சிறப்பையும் சாற்றிய வரலாற்றை உனக்குரைப்பனென்று ஓபாதே உள்ளுவார் உள்ளிருக்கும் உள்ளானை சிவபிரான் உலகம்மைக்கு உரைத்தருளுவாராயினர்.

தக்ககன் மீட்டும் காசிபர் கழலைப் பணிந்து அடிகாள்! முன்னர்க் கூறிய தலங்களின் சிறப்பு முற்றும் அடியேனுக்கு உரைத் தருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தனன்.

அது கேட்ட காசிபர், பணியரசே! இறைவனுக்கு மிக விருப்பமுற்றதும், எல்லா அமரர்களாலும் இறைஞ்சி ஏத்தப் பெற்றதும், மக்கள் உயிர்க்கு உறுதிப்பயன்களை வழங்கத்தக்கதும், என்ஞான்றும் அழியாததும், மிகத்தூயதுமான திருக்குடந்தை என்பதோர் திருத்தலம், காவேரிக்குத் தென்கரையிலுள்ளது. நினைத்ததை நினைத்தவாறே வழங்கும் இயல்புள்ளது. அப்பதியில் இறைவனால் எழில்பெற அமைக்கப்பட்ட ஒன்பதுநீர்த்தடாகம் என்னும் மாமகத்திருக்குளம் ஒன்றுண்டு. பன்னிரண்டு ஆண்டுக்கு ஒரு முறை ஆண்டளப்பானென்னும் வியாழன் சிங்க இராசியில் வரும்போதில் பௌர்ணமி மக நாளில் அத் திருக்குளத்தில் மக்களாவோர் ஒருமுறை மூழ்கின் தமது குலத்தின் மூன்றுகோடி முன்னோர்களை மேற்கதியிற் செலுத்தித் தாமும் சிவத்தன்மை அடைகின்றார்கள்.

அதற்கு இரண்டுவிறகிடை நீளத்தில் வில்வக்காடென்ற ஓர் திருத்தலம் உள்ளது. அவ்வில்வக்காட்டைக் கண்டவளவிலேயே, சிவத்தன்மையைச் செறியப்பெறுகின்றான். அந் நிழலில் எழுந்தருளிய இறைவனைக் கண்டாற்றால் சிவனே ஆகின்றான். அவருக்கு அக்கினி மூலையிலிருந்த இந்த வில்வக்காட்டிலுள்ள திருத்தலத்தில் எழுந்தருளிய இறைவனைப் பூசித்துப் பன்னிரண்டாண்டு வந்கடத்தின் பொருட்டு அவ்வுலகிறைவன் அருளால் உலவாவமுதுள்ள கலத்தை அடைந்தனர். அதில் உண்டான அமுதினை நூறு ஆண்டுவரை வந்தவர்க்கு அருந்தினர். அதன்பொருட்டு ஆங்கே ஒரு திருக்குளம் எடுத்து அதற்குத் தன்பேர் சாற்றினர்

அவர் தவவலிமையால் அத்திருக்குளத்தில் எவர் மூழ்கினும் முன்னியதைப் பெறுகின்றார்கள். அதுமுதல் அத் திருக்குளத்திற்குக் கௌதமகுளமெனவும், அந்தக் கௌமு வார்மையல் துணிப்பவராகிய சிவபிரானுக்கு அமுதீசன் என்றும் முனிவர் மொழிகின்றனர். அப் பெருந்தலத்திலே ஞாயிறானவன் நன்முறையாக வழிபட்டு மேருவை ஒழிவறு நாளும் வலம்வரத்தக்க ஆற்றலைப் பெற்றனன். எழுமுனிவர்களும் வழிபட்டு இறைவன் அருளைப் பெரிதாகப் பெற்றனர். அந்த அருட்குறிக்குச் சப்தகோடீசுரமென்பனர், அசுரர், சொல்லுகின்றனர்.

பணிபரசே! நீயும் அவண் இரவில வழிபட்டு, திருவிளக்கு நறும்புகை, திருவமுது இட்டு, வாரிய ஒலி, மணம்பொலி யுடன் வழிபடுக. அக்குளத்தில் மூழ்கி, வணக்கம் வலஞ்செய்து துதித்திடுக. அதன்பின்னர் விரைந்து சண்பகக்காடு சென்றிடுக. அதன் பெருமை முற்றும் அறிவாராயார்? கண்ணுதல் தமிழளிக்கும்பெருமான் ஒருவனேயுணர்வன்; அத்தகைய திருநகரை ஒருவன் அடுத்த அளவிலேயே அவனை அடுத்த வினைகள் அகலாநிற்கும். உடலில் தளர்ச்சி சிறிதாய் உளதாகாது. மேலும் எவ்வித தடைகளுமில்லை. அதை அடுத்தபோதே மறுமுறை பிறக்கக் கருக்குழி காணுதலறுவான். எவர்க்கும் மனத்தளர்ச்சியுண்டாகாது. அதையடுக்கும்வரை எந்தக்குற்றமும் உண்டு. அடுத்தபின்னர்,

தூயனாவான். அவனின் ஒருவன் நூறு பிறப்பினிற் செய்த பாபத்தினின்றும் விடுதி பெறுகின்றான். அத்தலத்தில், சிவனால் சிவஞானத் திருக்குளமென்று ஒன்று செய்யப்பெற்றது உண்டு. அதில் மூழ்கப் பாவத்திரளின் விலகிச் சண்பக மர நிழலில் ஒரு கணப்போது நின்றிடக் கைலையில் நூறு கற்ப கோடிகாலம் வாசஞ்செய்கின்றான். முன் அன்பர்கள் பொருட்டு அம்மையுடன் காட்சி தந்தருளித்தேனையும் பாலையுங் கன்னலையும் அமுதத்தையும் ஒத்தானையும் என்பினையும் உருக்கா நின்ற ஒண்மையனை ஒரு முறையே கண்ணுற்றால், மூன்று கோடி குலத்திலுள்ள முன்னோர்களைக் கைலைபெறச் செய்து, தானும் அச்சிவனே ஆவான் என்றுணர்க. மலைமகள், குன்றமுலையம்மை இருவரையும் வெள்ளி, செவ்வாய், ஞாயிறுகளில் வழிபடுவோர் செல்வராவர். மங்கைப்பாகத்தலைவரைப் பிரதோட காலத்தில் வழிபடுவோர், ஏழு கோடி மறைகளையும் உருவேற்றிய இனிய பலனை எய்துவார். இன்னும் ஒரு [illegible] இசைக்கின்றேன் பணியரசே! கேட்பாயாக.

பெருந் திருநாட் காலத்தில், ஞானத் திருக்குளத்தில், மூழ்கினால் பதினாயிரம் பெரும் பாவங்களினின்றும் விடுதலை பெறுகின்றார். வைகாசித் திங்களில், பௌர்ணமியில் விசாக நாளில் கடைமுழுக்கில் முழுகுகின்றவர் நினைத்தன எய்துவார். புரட்டாசித் திங்கள் கடைநாளில், சாதி, தும்பை, ஊமத்தை, மாலதி, முதலியவற்றால் வழிபடுவார் எல்லா இனிய பயன்களையும் எய்துவார்.

சண்பக நாதனை, சண்பகப் பூவால் வழிபடுவோர் கோடி குல முன்னோர்களை மேற்கதி பெறச் செய்கின்றார். சிவனிரவில் சிவன்பாலன்புடன் இரண்டாவது யாமத்தில் அவ் விறைவனை வழிபட்டால் அச்சிவனே ஆகிறான். இன்னும் தன்னால் தன் தந்தையால், அயலாரால் உண்டாக்கிய கடவுட் பூசைக் கட்டளையைச் செய்வோர் கோடி குலத்தின் முன்னோர்களை மேற்கதி செலுத்துவதோடு தாமுங் கடவுளாவர்.

முன்னொருகாலத்தில், பகீரதன் தன் முன்னோரை முனிவர்

நடுசொல்லின் விடுதலை செய்ய, வசிட்டரால் அருளப்பெற்று அத் தலம் வந்து சிவனிரவில் இரண்டாவது யாமத்தில் சூல நீரிற் படிந்து தலப் பிண்டமிட்டு அத் தலமுறைப்படி வழிபட்டு வலஞ்செய்து, துதித்து வேண்டுவனாயினான்.

மலையிருப்பாய் கடலிருப்பாய் மதிப்பவர்தம்
மதியிருப்பாய் மதியாய் நின்றாய்
கலையிருப்பாய் கண்ணுதலாய் கருதரிய
பொருளானாய் கணக்கி லாத
நிலையிருப்பா யென்னுடைய முன்னோர்கள்
முனிசுடுசொன் னிலையி னீப்பக்
கலையிருப்பாய் வருவுகலா னெனதெண்ணம்
முடித்தின்ப மருளிக் காப்பாய்.

என்னுடைய முன்னோர்களின் பொருட்டு இனிய கங்கையை ஈந்து எனதெண்ணத்தை முடித்தருளவேண்டும் என்று வேண்டாநிற்க, பணிவார் பிணிதீர்த்தருளும் பரமனான சண்பகக்காட்டிறைவன் மண்ணரசே! நீ இவ்விரவில் இரண்டாவது யாமத்தில் என்னை வழிபட்டால் எண்ணியதை எளிதில் அளிப்பேன். ஆனால் பிரயாகத் தென்கரையில் திருப்பழனம் என்னும் திருப்பதியில் நிருதி மூலையில் வில்வ மரத்தடியில் தவஞ்செய்தால், நினது எண்ணமுற நிறைவெய்தும். நீ விரும்பிய விண்ணீராகிய கங்கையும் வரச்செய்யலாம் நின் பகைவர்களும் நீங்குவரென்று அருளி மறைந்தனர். அப்போதே பகீரதன், நாகேச்சுரமென்னும் நற்றலத்தின், மலைமுலையாள், மலைமகள் மங்கைபாகத்தலைவர், சண்பகக்காட்டிறைவர் முதலியவர்களை முன்னின்று பணிந்து, பிரியாவிடைபெற்று அவ்வில்வக்காடு சென்றனன்.

ஆகையால் சிவனிரவில், நான்கு யாமத்திலும் நான்கு தலங்களிலும் பூசித்து மீட்டும் சண்பகவனம் வந்து அதில் எழுந்தருளிய நூலுணர்வு உணரா நுண்ணியனை, மாபெரும் வழிபாடு இயற்றுவார், அப்பெருமானுக்குப் பேரன்பராவர்; வேண்டும் வரங்களையும் வேண்டியவாறே பெறுவாரென்று உணர்க.

இனி மூன்றாவது தலச் சிறப்பாவது, அச்சண்பகக் காட்டிற்குக் கிழத்திசையில் ஒரு கூப்பிடுநீளத்தில், வன்னிக்காடுளது அது கணப்பொழுது கருதி நின்றால், கருதினவற்றைக் கொடுக்கும் இயல்புள்ளது. மூவுலகத்து மூன்புகழ் பெற்றது. யாரும் நினைத்தற்கரிது.

நன்மக்க ளாருமெய்திகதன் மிகவரிதே
பதிற்றொன்ப ர் நட்பும் பகைதே
மின்சடையோன் நற்காட்சி யரிதரிது
சிவனிரவை விரத லுமந்
தன்வாயில் வயலரிதே யவன்புனித
நீர்ப்படிந்து சரப்பு வென்பான்
மன்புகழ்தான் கேட்டலரி தரிதுவில்வ
மெடுத்தணிதல் வழங்க லாமோ.

ஒருவனுக்கு இவையெலாம் எய்திலும் சிவனிரவில் மூன்றாவது யாமத்தில், இவ் வன்னிக்காடு கிடைத்தல் அரிது. இத்தலத்தில் (அக்கினிதீர்த்தம்) தீத்திருக்குளத்தில், செவ்வனே மூழ்கி அங்கெழுந்தருளிய அக்கினீச்சுரரை இரண்டாம் யாமத்தில் அன்புடன் வழிபாடு புரிந்து, வன்னி மரத்தடியில் அஞ்செழுத்தோதுபவன் சிவனோடு இரண்டறக் கலந்து இன்புறுவன். இத்தலத்தில் ஒரு நாள் அர்ச்சுனன் என்பான் ஐப்பசித் திங்கள் சுக்கிலபக்கம் ஒன்பதாவது திதியில் அத்திருக்குளத்தில் மூழ்கி அப்பெருமானை வழிபட்டுத் துரியோதனன் முதலிய பகைவர்களை வென்று, இழந்த நிலத் திருவையும், நலத் திருவையும் எய்தி இன்புற்று வாழ்ந்தனன். அதற்குமுன் ஒரு நாள் நெருப்புக் கடவுளென்பான் பிரமோபசுசத்தில் பிரமனால் நிகழ்த்தப்பட்ட வேள்வியில் நெய்யுண்டு, பாண்டுநோயுற்று மூவுலகுந் திரிந்து, பிருகுவை அடைந்து, அவரருள்மொழிப்படியே அர்ச்சுனன்பாற் சென்று காண்டவக் காட்டைக் கேட்டு, அவன் கொடுக்க அதை உண்டும் பின்னும் காற்பாகம் நோய் நீங்காமை கண்டு நைமிசக்காடு வந்தனன். ஆங்குச் சௌனகரடி பணிந்து வேண்ட, அவர் அருள்வாராயினர். நீ திருக்குடந்தைக்கு ஐந்து கூப்பிடு தூரத்திற் கப்பால் வன்னிவனமொன்றுண்டு. அது மூவுலகும் புகழ்பெற்றது. மார்புவலி முற்றும் மாற்றும்

இயல்புள்ளது. அதிற்சென்று அக்குள்ள புனித நீரில் மூழ்கின ஒரு நோயுமுறாது. அந்நீர் இறைவனால் இயற்றப்பட்டது. வைகாசித் திங்கள் பௌர்ணமியில் மூழ்கி அம்மரத்தடியில் எழுந்தருளிய சிந்தையில் ஐயனையுண்ணாமுலை இறைஞ்சித் தயிரமுது முதலியன வைத்து அபிக்ஷை செய்து வழிபட்டு அம்மரத்தடியே அஞ்செழுத்தோதி ஓராண்டிருந்து சிவனிரவில் மூன்றாவது கூற்றிலே அப்பெருமானை அம்முறையே அர்ச்சித்தால் நின் வயிற்று நோய் முற்றும் மாறிவிட மகிழ்ந்திடுவாய் என்று சௌனகர் அருள, அது கேட்ட அக்கினி, அவ்வாறு வந்து வழிபட்டனன். அவன் வேண்டுகோளால், அக்குளத்திற்கு அக்கினி தீர்த்தமெனவும், அத்தலத்திற்கு அக்கினித்தலமெனவும், அதில் எழுந்தருளிய ஆராவமுதிற்கு அக்கினீச்சரனெனவும் பெயர் வந்தது.

அத்தலத்திற்கு அக்கினி மூலையில் புன்னாகவனமென்ற ஓர் தலம் உண்டு. அது நினைத்தற்கரியது. நூறு யோசனைக் கப்புறமாவது, தீவுகளுக்கப்புறமாவது இருந்து நினைத்தாலும் பாவ மகன்று அரசியல் பெறுவான். அவ்வனஞ் செல்வமென்று ஓரடி எடுத்தால் சாகத்தீபத்தில் பிறந்து, அரசாகிப் பெருஞ் செல்வம் நுகர்ந்து பின்னர் யோகிகள் குலத்து உதித்துச் சிவன்பால் அன்புற்றுப் பின்னர் சிவனோடு இரண்டறக்கலந்து இன்புறுவர். இப்பூமியில் எத்தலங்களிருப்பினும் அவை இத்தலத்தின் பதினாறு பங்கின் ஒரு பங்கிக்கீடாகாவாம். இத்தலத்தின் வாசம், தரிசனை, நீர்மூழ்கல், சிவனிரவு நோன்பு, சிவவழிபாடு, அன்ன முதலிய ஈதல், வில்வமெடுத்திடுதல், வழிபடல், திருநீறு திருக்கண்மணி பூண்டு சிவனூர்களிற் செல்லுதல் முதலிய வற்றுள் ஒன்றேனும் செய்து இந்நகரிலிறப்போர் எவரும் இயமன்பாற் சாராது சிவனையே அடைகின்றார்கள்.

இன்னும் செய்யாத தீயன செய்கின்றவர்கள், செய்ந்நன்றி மறப்போர், சிவன்பால் தீங்கிழைப்போர் முதலிய மறத்தோர் இக்கட்டிருக்குளத்தில் ஒருமுறையே மூழ்குவரேல் அவரனைவரும் தூயவராவர். அதில் திரு, வீடு, மக்கள், மனை முதலிய

வேண்டியோர், மூழ்கி அவற்றைப் பெறுகின்றார். இத னோடு அங்கெழுந்தருளிய திங்கட்பெருமானாகிய போக்குவர வில்லாத புண்ணியனை வழிபட்டால் அச்செல்வங்களைப் பெறுத லோடு, கோடி குல முன்னோர்களை நற்கதி பெறச்செய்கின்றார்.

இந்நகராகிய புன்னைக்காட்டை வலம் வருபவன் சிவன் திருவடிப்பேற்றைப் பெறுகின்றான்.

முன்னொருநாள் திங்கட்கடவுள் குருமனையாளைப் புணர்ந்து, அணுதுதகற்கரிய பாவத்தை அடைந்து, அதனால் நாளும் நாளும், குறைந்து, அழிதற்கேதுவான நோயுற்று, அதனையகற்றப் பதி னான்கு உலகுஞ், சுற்றியும் அதற்குய்தி பெறாமல், எழு முனி மண்டலம் வந்து அம்முனிவர்களை வேண்ட, அத்திங்களை நோக்கி அவர்கள் அதற்குய்தி பகர்வாராயினார். விண்மீனரசே! கீழ் கடற்கரையில் புன்னைவனமென்று திருநகர் ஒன்றுளது. அதிற் கைலைப்பெருமான் மலைமங்கையுடன் வாழ்ந்தருளுகின்றார். அதில் அம்மையார் சிவ வழிபாட்டிற்காகச் செவ்வனே செய்யப்பட்ட திருக்குளம் ஒன்றுண்டு. அதில் மூழ்கி அஞ்செழுத்தோதி வேண்டுவார்க்கு இயன்றன. ஈந்து, ஆங்கே ஏழாண்டிருந்து வசந்தத்திருநாள் நடாத்தித் திருக்கோயிலில் கோபுரம், மதிற் சுற்று, மண்டபம் முதலியவை சிறப்புற இயற்றுக. அங்ஙனம் இயற்றுவாயானால் அப்பெருமான் அருளால் நினது அழிவுக் கேதுவான பெருநோய் நின்னை விட்டகலும். நீயும் ஒளி யுடையனாய் நாட்பதியாவாய். அதுமுதல் அந்தத் தலமும் திருக் குளமும் நின்பேரெய்தும் என்றருளினார். அதுகேட்ட அம்புலி யென்பான், ஆங்குவந்து அவ்வாறு இறைவனை வழிபட்டு மனக் கவற்சி அற்று வேண்டுவன எல்லாம் பெற்றனன்.

அந்தச் சிவத்தலத்தில், சிவனிரவில் நான்காவது .(இயாமம்) காலக்கூற்றில், சிவவழிபாடு செய்க என்று காசிபர் அருளினார்.

இந்நான்கு நற்பதிகளின் வரலாற்றைப் படிக்கின்றவர்கள், கேட்பவர்கள், நினைப்பவர்கள் ஆகிய எவர்களும் பெருந்திரு,

பெருமைபுகழும், பெரும்புண்ணியம், அனைத்தையுங் கைக்கொள்ளுகின்றனர்.

திருச்சிற்றம்பலம்.

27வது காசிபர் தக்ககனுக்கு நாற்றலச் சிறப்புரைத்த படலம் முற்றிற்று,

---

## 28வது
## புன்னைவனநாதர் தக்ககனுக்கருள்புரி படலம்.

---

திருச்சிற்றம்பலம்.

நல்லாய்! நினக்குக் காசிபர் தக்ககன் இருவரும் நான்கு நல்லூர்களைக் கண்ணுற்று வழிபட, அத்தக்ககனுக்குப் புன்னை வனநாத ரருள்புரியலுற்ற வரலாற்றை உனக்கு உரைப்பே னென்று பெற்றி பிறர்க்கரிய பெம்மான், பேசலாயினர்.

தக்ககன் நான்கு நற்றலச்சிறப்பினைக் கேட்ட பின்னர்க் காசிபருடன் சென்று, மனுநாதனை வணங்கிப் பிரியா விடை பெற்றுக்கொண்டு வில்வக்காடென்ற திருக்குடந்தைக் கீழ்க் கோட்டம் வந்து, ஆங்கெழுந்தருளிய அருள்வள்ளலைச் சிவனிர வில் முதற் கூற்றிலே திருவமுது, நறும்புகை, நல்விளக்கு முதலியனகொண்டு காசிப முனிவர் கட்டளைப்படியே வழிபட்டு, வலஞ்செய்து துதித்தனன். காசிபர் ஆங்கே நின்றிட, அவர் பால் விடைபெற்றுக்கொண்டு அதினின்றும் சண்பகக்காடு போந்து அவ்விரவின் இரண்டாவது காலக்கூற்றிலே, குலநீர் படிந்து, சான்றுபிள்ளையாரை வணங்கி, சண்பகமரநிழலில் அமர்ந்த பந்தமும் வீடும் படைப்போனையும் மங்கைபாகத் தலைவரையும், மலைமுலையாளையும், மலைமாதினையும் அருச்சித்து நறும்புகை, நல்விளக்கு, திருவமுது முதலியனகொண்டு காசிபர் மொழிப்படியே அன்புடன் வழிபட்டனன்.

கூவிளநின் முடியணிந்து கும்பிடுவார்க்
கருள்புரியுங் குணக்குன்றுகி

போவிலுன தருணுருவாங் கூவிளனன்
னிழலமர்ந்தா யும்பர்கோவே
தாவிலொளிக் கதிரவனுக் கருள்சுரந்தா
யிருளகற்றத் தயையான்மண்ணிற்
பாவியேன் பொய்த்தொண்டும் மெய்த்தொண்டாப்
பழிதீர்த்த பரமாபோற்றி.—என்று துதித்தனன்.

அதன் பின்னர், அதினின்றும் புறப்பட்டு வன்னிவனஞ் சென்று அவ்விரவின் மூன்றாவது கூற்றிலே காசிபர் கட்டளைப் படியே நெருப்புத் திருக்குளத்தில் நீராடி ஐந்தெழுத்தோதி வன்னிமர நிழலில் வளமுற எழுந்தருளிய அக்கினீச்சுவரரை அஞ்சலித்து வணங்கி மாபெருவழிபாடு மகிழ்வுறப்புரிந்து வலமும் வணக்கமுஞ் செய்து துதித்தனன்,

அப்பெருமான் அருள்கொண்டு ஆங்கு நின்றும் புறப்பட்டுப் புன்னாகக்காடு பொலிவுறப்போய், அவ்விரவின் நாலாவது காலக்கூற்றிலே ஆங்கெழுந்தருளிய திங்கள்சூடியைச் செவ்வனே பணிந்து, பச்சைக்கற்பூரம், குங்குமப்பூ, சந்தனம், அகில் முதலிய மணங்கமழ் பொருள்களும்; வில்வம், கொன்றை, அறுகு, எள், நறுங்கனிகள், மணிகள் முதலியனவுங் கொண்டு, சங்கு, தண்ணுமை, பேரிகை முதலிய வாச்சியமும்; மறையும் முழங்க, நறும்புகை, நல்விளக்கெடுத்து, வழிபட்டு, தட்டமிட்டுக் கும்பிட்டுக் கூத்துமாடித் திங்களுக்கு அருள் புரிந்த திங்கள் பெருமானைத் துதிபாடுயினன்.

நெருப்பனைய நிழன்மெய்யாய் நெருப்பினுக்கு
மருள்புரிந்த நெற்றிக்கண்ணா
பொருப்பன்மகள் மணம்புரிந்து பொருப்பினிலே
யிருப்பாகிப் புகலாய் நின்று
யுருப்பமுறு தீவினைக ளொத்தனைதான்
புரிந்திடினு முன்னை யன்றி
விருப்பமுற நினையாத நினைவருள்வாய்
நினைவரிய நீற்றுத் தோளாய்

என்று தக்கன் துதிபுகலக்குறையிலா நிறைவான குணக் குன்றனையார் அவனுக்கருள்புரிவாராய் எதிர்தோன்றி நின்று

அன்பினாலின்பமுறுமாதவச் செல்வா! நின் மெய்த்தொண்டால் மெத்தவும் மகிழ்ந்தோம்.

நின் உள்ளத்தில் உள்ளியவெல்லாம் உடனெய்துக. இன்று முதல் நினக்கு நிறைந்த முழு ஆற்றலுமுண்டாவதாகுக. நின் பெயர் இந்நீள் நிலத்தினில் நிரம்பப் பெருமைபெற விளங்குக. மேலும் வில்வக்காடு, சண்பகக்காடு, வன்னிக்காடு, புன்னைக்காடு, இந்நான்கு நல்லூர்களும் நின் பெயரால் நிகழ்வனவாகுக.

சண்பகக்காட்டில் சிறப்பாகத் திருத்தென்முல்லையில் திகழும் புற்றில் நீ இருந்திடுக. அங்கிருந்தே நாள் நாளும் என்னைப் பூசித்திடுக. அந்நகரில் மார்கழித் திங்கள் சுக்கிலபக்கம் ஆறாவது திதியில் விதிப்படி மிக்கவிருப்புடனே நீ பூசிக்கும் நாகேச்சுரப் பெருமானை எவர்கண்டாலும், நினைத்தாலும், வழிபட்டாலும் அனைவரும் சிவபெருமானோடு இரண்டறக் கலந்து இன்புறுவர். மேலும் அந்நாகேச்சுரர் அருளால் இந்நான்கு தலங்களுள் சிறந்ததும் ஒத்ததும் அதுவேயன்றி வேறில்லையாதலால் அந்தமூர்த்தி, தலம், தீர்த்தம், மூன்றின் பெருமையால் நாக உலகிறந்தத் தலைமையும் முன்போல உளதாகும். முனிவர் உன்னை வெகுண்டு கூறிய சுடுசொல்லின் பயனும் இன்னும் மூன்று ஆண்டினுள் முடிந்தொழியும். அதன் பின்னர்ப் பணியரசே! நினது ஒரு (அம்சம்) கூற்றால் அப்புற்றிலேயேயிருந்து அந்நாகேசுரனை நாடொறும் வழிபடுக. இவ்வாறே இக்கற்பம் முழுவதும் பூசித்திடுக. முதல் யுகத்தில் சண்பகநாதனையும், இரண்டாம் யுகத்தில் வில்வநாதனையும், மூன்றாம் யுகத்திலே பகலில் வன்னி நாதனையும், இரவில் புன்னை நாதனையும், கடையுகம் வந்தபின்னர், அந்தயுகமுழுதும் உயர்வுடைய சண்பகநாதனையே வழிபாடு செய்வாயாக

துக் கைலைமுதல் ஏழாயிரத்து எழுநூற்றுநாற்பது திருவூர்கள் சிறந்தன. அவற்றுள் யான் மிகவும் அருள்வழங்கத் தகுந்தன எழுநூறு. அவற்றுள்ளும் சிறந்தன நூறு. அவற்றுள்ளும் நாற்றிசையிலுஞ் சிறந்தனவாய் நின்றன இந்நான்கே. இந்த நான்கினுள்ளும் சிரம்போற் சிறப்புற்றது சண்பக நன்னகரே. அதனால் முதல், கடையாகிய இரண்டு யுகத்திலும்

வழிபடக்கடவை. அத்தலத்தில் வாழாநின்ற மக்கள் எல்லோ ரும் இறைவனேயாவர் இனி அத்தலத்தில் அரவரசே! உனக்கு இறவா இன்பமும் அழிவிலாப் புகழும் உண்டாகும்.

இனி ஒன்றுண்டு; அது மிகச்சிறந்தது. அதாவது:— ஒவ்வொரு யுகத்திலும் வரும் ஒவ்வொரு ஆண்டிலும் முன் படியே நான்கு தலங்களையும் சிவனிரவில் வழிபாடு செய்க. அங்ஙனம் வழிபாடு செய்யும்போது அந்தத் தலத்தில் என்னைக் கண்குளிரக் கண்டு மகிழ்வோர் இம்மையிலே திரு, மக்கள், ஞானம், அரசியல் முதலியனவெல்லாம் பெற்று மறுமையில் எனது கைலையைப் பெறுவார். முடிவில் திருவடிப் பேற்றையும் பெறுவர்.

ஆதலால் அங்கிருந்து வழிபாடு செய்து வாழ்கவென்றருளி அந்த இலிங்கத்திலுள்ளே மறைந்தருளினார். அவ்வருளிப் பாட்டைப் பெற்றுத் தக்ககன் மகிழ்ந்தனனென்பது.

திருச்சிற்றம்பலம்.

28-வது புன்னைவனநாதர் தக்ககனுக் கருள்புரி படலம் முற்றிற்று.

---

## 29வது தக்ககன் வழிபட்டரசியல் பெற்ற படலம்

---

திருச்சிற்றம்பலம்.

ஞானப்பூங்கோதாய்! புன்னைவனநாதர் அருள்மொழியைக் கேட்ட தக்ககனென அனபன் அருள்மொழிப்படியே வந்து வழிபட்டு அரசியல்பெற்ற வரலாற்றை யுரைப்பேன் கேட்க வென்று சிவனார் கிளந்தருள்வாராயினர்.

அன்பனான தக்ககன், புன்னைவனநாதர் அருளியபடியே சண்பகக்காட்டிற்குப் பிறவிக்கடலை அறவேயகற்றும் அக்காட் டிறைவனுக்கு நிருதியிலுள்ள புற்றிலிருந்துகொண்டு அப்பெரு மானை வழிபடத்தொடங்கினன்.

மூன்றப்படி சூலத்திருக்குளத்தில் தூய்மைபெற மூழ்கி அத்திருக்குளத்தின் நாற்றிசையிலும் பதினாயிரம் மணிவிளக்கிட்டு விளங்கச் செய்தனன்.

பின்னர் அந்தக் குளத்தைக் காக்கின்ற காலவர், சாதாதபர், முற்கலர், சண்டிலர், பராசரர், (விதிஹோத்திரர்) அன்னவேள்வியர் (சுமஹாகதரா) இனபவேள்வியர் ஆகிய இம்முனிவர்களை அஞ்சலிக்கத் துதித்தனன். அங்ஙனம் தன்னால் துதிக்கப்பெற்ற முனிவர்களை நோக்கி அன்பரிற் சிறந்தீர்! அந்தணர் மணிகாள்! "இப்புனிதநீர் நிலையை எழுவராகிய நீங்கள் காக்கின்றீர்களா?. அதற்குக் காரணமென்னை?" என்று கேட்டனன். அவ்வாறு கேட்ட தக்கனை நோக்கி அம்முனிவர் பெருமக்கள் அறைவாராயினர். அன்பனே! யாங்களெல்லோரும் திருக்கோகரணம், கேதாரம், திருப்பருப்பதம், திருவீழிக்கா, திருவாரூர், திருக்கழுகுவனம், மின்கொடியூர் முதலிய தலங்களில் ஆங்காங்கிருந்து கார்த்திகைத் திங்கள் நான்கு ஞாயிற்றுக்கிழமைகளினும் இந்நீர்நிலையில் வந்து மூழ்கி உள்ளுவாருள்ளிருக்கு முள்ளானை வழிபட்டு வணங்கிப் போவது வழக்கம். அங்ஙனம் போகின்ற எங்கட்கு எங்கள் பெருமான் ஒன்றுரைத்தருள்வாராயினர். நீங்களெல்லோரும் இந்தச் சண்பகக் காட்டிலிருந்து இத்திருக்குளத்தை இராக்கதர், பிசாசர், தீயநினைவுடையர் இவர்கள் தொடாமல் காக்கக்கடவீர்கள். இதுவரைக் கைக்கண்டுடன் என் கட்டளைப்படி அத்திருக்குளத்தைக் காத்திருக்க மாணிபத்திரனென்பான். இனி என்னுடைய வாயிலில் என் தொண்டர்களுக்குத் தலைவனுக்கு. தக்ககன் அன்புடன் என்னை வழிபடற்கு இச்சூலத் திருக்குளத்தில் செவ்வனே மூழ்கிப் பதினாயிரம் மணிவிளக்குங்களிடும்போது உங்களுடைய அருளால் அவன் பயனடைவான். அதுபோது அவனைக் காத்துவரக் கட்டளையிட்டுப் பின்னர் என்னை வழிபட்டு என்னிருப்பிடத்தை எய்துவீராக என்றருளினர். அம்முறையே இக்குளத்தை இதுவரைக் காத்தனன். இனி நீயே காத்திடுக என்று அம்முனிவர்கள் தக்ககனுக்கு அக்குளத்திற்குத் தலைமை ஈந்தனர் அது கேட்ட தக்ககன் அதனைத் தனக்கு ஒரு பரிசிலாக ஏற்று மகிழ்ந்தனன். பின்னர்

அம்முனிவர் சிவபிரான் அருள் மொழிப்படியே அப்பெருமான் பாலடைந்தனர். தக்ககன் தன் அன்பர்களான எட்டு நாகங்களையும் அக்குளத்திற்கு எட்டுத் திக்கிலும் காவலராக வைத்து இதில் மூழ்குகின்ற வரனைவரும் அவைகளை வணங்கி உத்தரவுபெற்றால் நிறைந்த பலத்தை அடைவார்கள்; இல்லையேல் ஒரு பலனும் அடையாரென்று நியமனஞ் செய்தனன்.

அதுமுதல் எட்டுநாகங்களும் அக்குளத்தைக் காத்துத் தம்மிடம் உத்தரவு பெற்றவர்க்கே அப்புனிதநீர்ப்பலனை வழங்குகின்றன. தக்ககன் தனக்குப் புகழ் மிகுந்துயரவேண்டி, நாகேசப்பெருமான் திருமுன் சென்று சண்பகத்தைக் கண்ணுற்று, அதற்கு நாற்றிசையிலும் ஒன்பது மணிகளாலும் உயர்ந்த மேடையிட்டுக் கோடிகதிரவர் ஒளிவீசினாற்போல ஒளிர ஒன்பது மணிகளாலும் விளக்கிட்டுப் பாயசம் முதலிய அமுதிட்டு, நல்ல வில்வங்களாலும், மணியினிழைக்க வில்வங்களாலும், மணியாலான முழுவரிசிகளாலும், வழிபட்டு அம்மரத்தைக் கட்டித் தழுவி வலமும் வணக்கமுஞ் செய்து,

அடிமுதன் முடிவு நாறு மருதரு வாகி யெங்கும்
கடிமணம் பரப்பிக் காணார் தாக்குறுங் கவலை நீக்கிப்
படிமுத லெவர்க்கும் வேண்டும் பயனெலாம் பயந்தே யிப்பார்க்
குடிமுத லாகி யோங்குங் குளிர்ந்தசண் பகமே போற்றி.

கண்ணுறு மொருவ னாகிக் கன்மக டலத்த முற்கோ
ரெண்ணிய நிழலாய் நின்ற வெண்ணுவ நிலத்தோர் யார்க்கு
நண்ணுற வளித்தே நாயேன் நவிலறு பவவெ யிற்கோர்
தண்ணிய நிழலு மான சண்பக முதலே போற்றி.

என்று துதித்தனன்.

பின்னர், சான்றுபிள்ளையாரிடமும், நந்திப் பெருமானிடமும், வணங்கி, விடைபெற்று, சண்பகநாதரைப் பால், தேன், பலாமுதலியபழம், புனிதநீர், ஆன இவைகளாலாட்டி, நல்லுடை, பொற்பூணூல், சந்தனம், மணியாற் செய்த முழுவரிசி சாத்தி, திருக்கண்மணி, மாணிக்கவில்வம், முதலியவற்றாலான மாலை பல அணிந்து, பதினாயிரம் மணிவிளக்கிட்டுத் தோரணம்,

குடை, ———— முதலியன கொண்டு அணி செய்து, திருவமுது, பலசிற்றுண்டி வைத்து, நிவேதித்து, மறையொலி வழங்க வழிபட்டு,

பழித்தொண்டு செய்யு மென்னைப் பரிந்தரு ளுருவாய் வந்து
வழிக்கொண்டு கொண்ட வள்ளால் வானவர்க் கரிய தேவே
யிழித்தவன் பணிக ளொன்றே யென்குல வரசா வென்று
மொழித்திடா தெமையெல்லா முனகருள்புகுத்திக்காப்பாய்!
என்று தோத்திரஞ் செய்து வணங்கினன்.

இவ்வாறே அம்மையார் இருவரையும் மங்கைபாகத்தலைவரையும் வழிபட்டு வணங்கினன். இவ்வகையாகவே ஆண்டு மூன்றும் கடந்திட அப்பெருமான் அருளால் அரசியல் பெற்றின்புற்றான்.

இதனைக் கேட்பவர், சொல்வோர், எல்லாத் துன்பமும் அற்று, அரசியல் பெற்று வாழ்வார்களென்பது.

திருச்சிற்றம்பலம்.
29வது தக்ககன் வழிபட்டரசியல் பெற்ற படலம்.
முற்றிற்று.

---

## 30-வது தக்ககன் திருப்பணி இயற்றிய படலம்.

---

அரும்பன்ன வன்முலையாய்! மேற்கூறப்பட்ட தக்ககனை யும் அன்பரிற்சிறந்தோன் சண்பகநாதனை வழிபட்டுத்திருப்பணி யியற்றிய வரலாற்றை உனக்கு உரைப்பேன், கேட்பாயாக வென்று சிவபிரான் உரைப்பாராயினர்.

தக்ககன் தன் பாம்பரசர் குழாங்களுடன் நாகேசப்பெருமானுக்கு நிருதிமூலையில் அப்பெருமான் அருளால் ஓர் புற்றில் ஒன்றியிருந்து, புன்னைவனநாதனுர் அருளிப்பாட்டைத்தலைமேற் கொண்டு சண்பகப்பெருமானை நாடோறும் வழிபடுபவராய், அப்பெருமானுக்கு நான்கு சித்திரவிமானங்கள், நான்கு கோட

ரங்கள், எழுமதிற்சுற்றுக்கள், பல மண்டபங்கள், பள்ளியறை, பாகசாலை, திருக்குளப்படிக்கட்டு, தன் புற்றுக்குக் கிழக்கில் ஆயிரக்கால் மண்டபங்கள், கொடித்தூணம் முதலியவற்றோடு, நாகேச்சுரர் அம்மையார்களுக்குத் திருக்கோயில்கள் முற்றும் ஒன்பது மணிகளால் ஒழுங்குபெற இழைத்துக்கிணறு, பச்சிலைத் தோட்டம், பூ, வில்வம், துளசி முதலியவற்றின் கோட்டம், குடை முதலிய எடுபிடிகள், ஊர்திகள், கலங்கள், இன்னும் வேண்டும் திருப்பணிகளெல்லாம் செம்மைபெறச் செய்தனன். வசந்தத்திருநாளின் பொருட்டுக் கற்பகமரங்களாலும், மறை, ஆகமமுதலியவற்றாலும் விளங்காநின்ற ஆடையணிகளால் அணி செய்யப்பட்ட நவமணித்தேர்கள் ஐந்து, நயமுறச் செய்தனன். பின்னர், தண்ணுமை, தக்கை, தடாரி முதலிய வாச்சியப்பொதுவும் வகையுறச் செய்வித்தனன் அதன்பின்னர், நாள்வழிபாடு, பக்கவழிபாடு, திங்கள்வழிபாடு, ஆண்டுவழிபாடு முதலிய நித்தியநைமித்திகங்கள், நிகழ்வுறச்செய்து, பதினாயிரம் பசுக்களைப் பால்பொழிந்திட வாங்கி, அதற்குக் கோயிலிட்டு எம்பெருமானுக்கு இரவுபகல் பாலாட்டி மகிழ்ந்தனன். சித்திரைத்திருநாள் கொடியேற்றி எல்லாவகைச் சிறப்புடனே மாணிக்க அபிடேகம் முதலியன செய்து முறையே எவ்வகை ஊர்தியிலும் எழுந்தருளப்பண்ணித் தேவர், கந்தருவர் முதலியவர்களோடு செவ்வனே எட்டுநாட்டிருவிழாக்களும் இன்புறநடத்தி. ஒன்பதாநாள் தேர்த்திருவிழாவைச்செய்து, பத்தாநாள் சித்திரை பௌர்ணமியில் புனிதநீராட்டம் பொற்புறச்செய்து அன்று தயிரமுது, சர்க்கரையமுது, வடை முதலியனவெல்லாம் வகையுறநிவேதனஞ்செய்து. குழலொலி, யாழொலி, கூத்தொலி, ஏத்தொலி முதலிய எவ்வகையொலியும் நவமணி மண்டபத்தில் நலமுற இயம்பச்செய்தனன்.

இன்னும் மார்கழித்திங்கள், சுக்கிலபக்கம் ஆறுநாள் நாகேச்சப்பெருமானுக்குப் பலவகைக்கனிகள், பலதிருவமுதுகள், பல விளக்குநிரைகளுடன் நீராட்டி வழிபட்டனன்.

பின்னர்ப் புழுகுக்காப்புத்திருநாள், சந்தனத்திருநாள், கண்ணாடித்திருநாள், மங்கைபாகத்தலைவருக்கு ஆறுகாலமும் வழிபாடு, முதலிய எல்லாம் முறைப்படி செய்தனன். கார்த்திகைத்

திருவிழா விதிப்படிச் சிறப்புறவியற்றி இன்னும் பணிகளெல்லாம் பண்புறச் செய்து கொண்டு பரமேச்சுரனுக்கு திருதியி லுள்ள புற்றில், இன்னும் அத்தக்ககனான பாம்பரசன், தனது சுற்றங்களான பாம்பரசர் குழாங்கள் சூழத் தனது ஒரு (அம்சம்) கூறு அளவாகத் தங்கியிருந்ததை அறிவுடையவர்களால் அறியப் படுகின்றான் அவனை மார்கழித் திங்கள் சுக்கிலபக்கம் ஆறா நாளில், குலநீர் முழுகித்தோய்த்து,உலராத உடையை அணிந் வாய்பேசாமல் புற்றிற் சென்று,

மணியூர்தி யுள்ளாயே வான்சிவனா
ரருணிலைய மகிழுஞ்சேடா
மணியரசே யெந்நாளுஞ் சண்பக நன்
னகர்வாழ்வோய் மைந்தனாகா
மணிமலை யுடையாய்பால் விடையவனல்
வழிபாடு வளர்க்க வந்தாய்
மணியீவாய் பெருஞ்செல்வா வனந்தசிவன்
பாலன்பே வாய்ந்தாய் போற்றி.

என்றும் சேடன், அனந்தன், நாகன், சிவன்பாலன்பன், சிவபூசை செய்வோன், பணிவாகனன், பணிநாதன், சண்பகநகர் வாழ்வோன், சிவனருணிலையன், பெருஞ்செல்வன். பணிபாலையன், மணியீவோன் என்னும் பன்னிரண்டு திருநாமங்களையும் பன்னிரண்டுமுறை சொல்லி, உப்பில்லாத பலவகை அமுதுடன், பொரியைப் பாலிற் சர்க்கரை கலந்து, ஊறவைத்து மோதகம் பலநறுங் கனிகள் நலமுறக்கொண்டு செபபட்டுஉடீஇச் செம்பூச்சூடி, பூணூல் பூணுவித்துச் சந்தனக்காப்புச்சாத்தி. செபமுழுவரிசியால் சிறப்புறவணிந்து, பாலிட்டு, முறையாக வழிபட்டவர்கள் எண்ணியவெல்லாம் பெற்று இன்புறுவார்கள். பின்னர் நாகேச் சுரப்பெருமான் திருக்கோயில்களையும் புராண விதிப்படி வழிபடல் வேண்டும். அவ்வாறு வழிபடற்குச் சிறந்த நாட்களையும் கூறுவன்.

கார்த்திகைஞாயிறுகளில், புற்றிற்குஎட்டுத்திக்கிலும்எட்டு நெய்த்தீபங்களை இடுவோர், எண்ணிய செல்வமும், புதல்வர்களை யும் பெறுவார். ஆவணித்திங்கள் வெள்ளிக்கிழமை நான்கிலும்

வழிபாடு செய்வோர், எவ்வித மலட்டுத் தன்மையும் அறவே நீங்கப்பெறுகின்றார்கள். ஆகலால் புதல்வனை வேண்டி அம்மதியில் நான்கு கிழமையும் புற்றினைப் பூசிப்போர், நாலாவது கிழமையில் சான்றுகணபதியை நினைந்து. நாகேச்சுரப்பெருமான், மலைமகள் மலைமுலையாள், மங்கைபாகத்தலைவர், முதலியவர்களைவழிபட்ட பின்னர், மேற்கூறப்பட்ட முறைப்படித்தக்ககனைப்புற்றில் பூசித்து மௌனம்நீங்கி ஆங்கே பதினறு மங்கலமாதர்களுக்குப் பழம், தாம்பூலம், ஆடை, அணிகள் அம்முறையேதந்து, அவர்களாடவர்களுக்கும் அமுதிட்டு, முகமன் அளிக்கக்கடவர். அவர்கள் எவ்வகை மலடும் அற்றுப் புதல்வனைப்பெற்று வாழ்வார்கள். அப்படிப் பூசிக்கின்றவர் தாமும் அந்த அந்தக் கிழமையில் உப்பின்றியுண்டு பூமியிலுறங்கி நோன்புறுவர். வறுமையோர் வழிபட்டால், செல்வராவர் கன்னி வழிபட்டால், நல்ல தலைவனைப் பெறுவள். அரசர்களானல், பகையை வென்று அரசியல் பெறுவர். நோயாளியானல், நோய் நீங்கி இன்புறுவார்.

இதனல் புற்றினை வழிபடுவோர், தக்ககனருளால் எண்ணியவெல்லாம் பெற்றின்புற்று இறுதியில், கைலையைப் பெற்று வாழ்வாரென்பது,

திருச்சிற்றம்பலம்.

30வது தக்ககன் திருப்பணியியற்றிய படலம் முற்றிற்று.

---

## 31-வது வெங்கதிர் வெகுளியுற்ற படலம்.

---

திருச்சிற்றம்பலம்.

வடிவழகியாகிய மலைமாதே! இனி இந்நாகேச்சுரமும், நாகேச்சுரரும், சூலதீரும், இப்பேர்களேயன்றி இன்னும் வேறு பேர்களும் உற்ற வரலாற்றை உனக்குச் சொல்லுவனென்று சிவனர் அருளுவாராயினர்.

இத்தலத்தைச்சூரியேச்சுரமெனவும் அதில், எழுந்தருளிய சிவபெருமானைச் சூரியேச்சுரனெனவும், சூலத்திருக்குளத்தை

சூரியத்திருக்குளமெனவும், பெரியார் கூறுவர். அதற்குக் காரணம் வருமாறு:—

ஒருநாள் தேவதச்சனென்னும் விசுவகர்மாவின் புதல்வியும் காதலாலேவாடிய கண்ணுளும், கட்டழகியும், சுப்ரபையெனவும், சுவர்ச்சலையெனவும், கூறப்படுவாளுமாகிய நல்லொளியையென் பாளை, அவள் தந்தையானவன் மன நிறைவுடன் வெங்கதிர்ச் செல்வனான சூரியனுக்கு மணஞ்செய்து கொடுத்தனன். அக் கதிரவன் அம்மணமகளோடு மேருமலையில் பூஞ்சோலையில் அவளோடு புணர்ந்து விளையாடினன். அதில் அளவில் காலங்களாயின.

அதுபோது மயன் என்பான் தன்புதல்வி சாயையென்னும் நிழலையென்பாளை அக்கதிரவனுக்கு ஈந்தனன். வெங்கதிர்க்கடவுளென்பான் இருவரையும் மணந்து இல்லிடமுற்று வாழ்ந்தனன். அதுசமயம் அறிவுவடிவான துருவாசர் அவன்பாற்சென்றனர். அப்போது கதிரவன் அம்முனிவர்பெருமானைக் கண்டு வணங்கி, முகமன் கூறி விருந்தளித்தனன். அதற்கு அவர் அளவிலா மகிழ்ச்சியடைந்து, ஐந்து செம்மணிகளைப் பரிசிலாக அளித்துச் செங்கதிர்ச்செல்வா! என்னால் ஈந்திடப்பட்ட இவ்வைந்து மணிகளுள் ஒன்று பகைமையை வெல்வது; ஒன்று நினைத்த பொன்முதலிய பொருள்களை அளிப்பது; ஒன்று என்றும் அழியா இளமையை ஈவது; ஒன்று மனத்திற் கிசைந்தஆடை முதலியபோகப் பொருள்களை அளிப்பது; ஒன்று ஆயுள், புகழ், ஒளி, புதல்வர்ப் பேறு இவற்றைத்தருவது. இத்தகைய ஐந்து மணிகளும் பேரொளி யுடையோய்! பெரு நன்மையளிக்கும். இவற்றைஎவர்களுக்கும்ஈந்திடேல்; இவற்றின் வரலாறும் சிறிது இசைப்பேன்.

இருதராட்டிரனென்னும் பாம்பரசன், ஆதிசேடனுக்கு முன்புள்ள மருமகனாவான். அவன், காளிகை என்னும் மாதினுக்கு மகிழ்நன்; அப்பெண்ணை மணம் புரிகின்ற காலத்தில் ஆதிசேடனால் இம்மணிகள் ஐந்தும் பெண்சாணிக்கையாக அளிக்கப்பட்டன. அம்மணிகள் ஆதிசேடனுக்குத் திருமாலால் அளிக்கப்பட்டன. அத்திருமாலுக்கு அவர்க்கிடமாய் நின்றபாற் கடலால் தரப்பெற்றன. இவ்வாறு வரப்பட்ட இம்மணிகளை

என்று அன்புள்ள மாணாக்கனும், என் கட்டளைப்படியே நடப்ப வனும், என்பால் சிவனுண்மையைச் செவ்வனே பன்னிரண் டாண்டு பயின்றுவந்தவனுமான திருதராட்டிரனென்பான் எனக் குப் பரிசிலாக அளித்தனன். அவற்றை, என்பால் அதிக அன்பு வாய்ந்தவனும் மாணாக்கனுமான நினக்கே ஈந்தனன். கிழமைத் தலைவனான நீ இத்தகைய அருமைவாய்ந்த ஐந்து மணிகளையும் யாரிடமும் அளித்திடேல்; என்று கூறி, அம்முனிவர் தமது ஆச்சிரமம் அடுத்தனர். கதிரவனும் அம்மணிகளை அருமையாக அன்புடன் வைத்துப் பாதுகாத்து வந்தனன். அம்மணிகளை நல் லொளியென்பாள் கண்டு, கதிரவனை நோக்கி, என் கொழுந மணியே! நும்பாலுள்ள மணிகளை எனக்களித்தல் வேண்டு மென்று மிக வணக்கத்துடன் கேட்டனள்.

அதுபோது கதிரவன பகைவர்களை வெல்லும் மணியை வைத்துக்கொண்டு மற்றைய நான்கு மணிகளையும் அவள்பால் அளித்தனன். அவள் அவற்றை மாலைசெய்து கழுத்தில் மலைந் தனள்

ஒரு நாள் அம்மாலையை நிழலியென்பாள் கண்டு, நல்லொளி யென்பாளை நோக்கி மாதரசி! இம்மணிகள் நின் தாய் தந்தை தந்ததா? அன்றி அம்மான் ஆசிரியன் சுற்றத்தார் இவர்களுள் யார் தந்தது? எனக்குக் கூறல் வேண்டுமென்று கேட்டிடலே, விசுவகர்மாவின் மகளான நல்லொளியென்பாள், எனக்குத் தாய் தந்தை மாமன் உறவினர் குரு இவருள் ஒருவருங் கொடுத்த தன்று. இது என்னைக்கொண்டவனால் கொடுக்கப்பட்டதென்ற னள். அன்றியும் குலமகளுக்குக் கொழுநனே கடவுள்; அவனே அம்மாதினுக்குப் பாதுகாப்பில் தாய் தந்தைபோலவும், அறிவு கொளுத்துவதில் ஆசிரியன்போலவும், உடை நல்லணிகள் ஈவதில் அம்மான்போலவும், அன்னமிடுவதில் உறவினர்போலவும் ஆவ னென்க. இன்னும் இவர்களையன்றி எத்தனையோ மடங்கு கொண்டவன் மேலாவனென்பதுண்மை. ஆதலால் எம்மாதர் களுங், கொழுநருக்கு இணையாவார் மூவுலகத்தும் கிடைக்கப் பெறுரென்க. இதனால் தமக்கிசைந்த காதலியும வாழ்க்கைத் துணையுமான எனக்கு இம்மணிகளை என் கொழுநரே ஈந்தன ரென்று அவ்விசுவகருமாவின் மகள் நல்லொளியை கூறினாள்.

அதுகேட்ட மயன்மகளான நிழலியென்பாள் நெருப்பைப்போல்
அழன்று, கதிரவன்பாற்சென்று, கெடுமதியுடையாய்! யான் முற்
பிறவியில் என்ன தீங்கிழைத்தேனோ இப்பிறப்பில் நின்னைக்
கொழுநனாகக் கொண்டனன். கணவனன்றி இப்பதினாலுலகும்
எனக்கினியானில்லையென்று காதல் கொண்டு வழிபாடியற்றிவரு
கின்ற என்னைப்போன்றோருள், மலைமகளோ தன் மணமகன் உட
லிற் பாதிகொண்டனள். அலைமகளோ கொழுநன் மார்பகங்
கொண்டனள். கலைமகளோ தன் கொண்கனது முகம் இடங்
கொண்டனள். இன்னும் அமரில் வியாழன் மனையும், அவன்
நோக்கங்கொண்டனள் முனிவர்களில் வசிட்டர்மனையாளோ
அவ்வாறாயினள். கெடுமதிகொண்ட நீ இதையறிந்திலைபோலும்!
என் தந்தையும் நின் குணமறிந்திலர்; எனினன்றால் நற்குடிப்
பிறந்தவர், தம்மில்லாளையிகழ்ந்திடார். அப்படியிகழ்பவரேல்
அவர்கள் தோற்றம் நன்குணரப்படுமன்றோ? இதையறியாமல்
என் தந்தையார் நின்பால் என்னை ஈந்தது யான் செய்த தீவினை
யென்றே சிந்திக்க வேண்டும். அன்றியும் உலகில் ஒரு மாதினைக்
கொண்டவனே குற்றங்கள் கூறுவனேல், அவன் அவளுக்குப்
பகைவனே யாவன். மனைபாள் அழகுடையாளாயினும், அஃதில்
லாதவளாயினும், மகிழ்நன் மகிழ்ந்து அன்புடையனாதல் வேண்
டும் இனி ஆடவர்களுக்கு மனைவியர் பலர்களானால் அவர்களில்
முதல் மூவரை முதல்வர், இடையர், கடையரெனவும் ஏனையோர்
களை அவரிற் கடையர்களெனவும், இழிகுல ஆடவர்களன்றோ
இயம்புவர்; உயர்குலத்தோர் அங்ஙனமுறையார். ஒரு தலைவ
னுக்கு மூத்தாள் இளையாளென்னும் இருவகையாக மனைவியர்
வாய்த்தலுமுண்டு. அவர்களிருவரையுங்கொண்டவனே இரண்டு
கண்போல் கொண்டாடல் வேண்டும். இன்னும் உலகவழக்கமா
வது உண்டி, உடை, அணிகள், படுக்கை, மற்றைய சிறப்புகள்
முதலிய எல்லாவற்றாலும், இளையாளே கொண்டாடப்படுவாள்.
மூத்தாளோ வீட்டுத் தொண்டு, கடவுட்டொண்டு, இவற்றிலே
யும் கொண்டாடப்படுவாள். இவ்வழக்கினுக்கு வேறுபாடாக
என்னைவிட்டு எனக்கு மூத்தாளையே இனியளாகக் கொண்டனை.
ஏது கருதி முனிவரால் ஈயப்பட்ட மணிகளை எனக்கீயாது என்
மூத்தாளுக்கீந்தனை? அவள் என்னினும் நல்லியல்வாய்ந்தனளோ?
அன்றி உன்பால் இன்மொழியியம்புமியல்புடையாளோ? நின்

பால் காதலுள்ள காதலியாவளோ? எவ்வாறு கொண்டுவந்தனை? என்று வெகுண்டு வன்மொழியாடக்கேட்ட கதிரவன், கண் சிவந்து, உடல்வியர்த்து, வெகுண்டு நின்றனனென்பது.

திருச்சிற்றம்பலம்.

31-வது வெங்கதிர் வெகுளியுற்ற படலம் முற்றிற்று.

---

## 32-வது கதிரவன்பால் மயன் வெகுளியுற்ற படலம்.

---

திருச்சிற்றம்பலம்.

உலகன்னாய்! கதிரவன்பால் மயன் வெகுண்டு செய்த செயலை நுணுக்கரிய நுண்ணுணர் வினரான சிவபிரான் உனக்குரைப்பேன் என்று கூறுவாராயினர்.

வெகுண்டு கதிரோன், இல்லாளானசாயையென்னும் நிழலி யென்பாளை நோக்கி மூடீ! என்ன சொன்னாய்? என்னினும் எவ்வகையான ஆற்றலுடையாய்? என் இல்லைவிட்டு இன்றே இன்னே ஒழிக; என்முன் நில்லற்க; நின் காற்றும் இவண் வீசுதல் கூடாது; என் இல்லம் புகுவையேல் இடைவிடாது உன்னை எறிவேன்.

தந்தைதா யறிவ னோடு தகுநியோ ரடன்பிறந்தோர்
வந்ததன்கணவன் மாமன் வாய்க்கமு தளிப்போர்தம்மைச்
சிந்தையின் வருந்தச்சொல்லிற் சிதறுண்ண வெறிவரெல்லா
மெந்தநல்லின்பு மின்றி யெரிநர கடைவரம்மா.

தந்தை தாய் முதலியோரை வன்சொல்லாலெறிவோர் இம்மையில் எவ்வகையின்பமுமின்றி நரகமுற்றுப் பின்னர் நாயிற் பிறப்படைவர். ஆதலால் நீ நில்லற்க. நினக்கு உண்டி, உடை முதலியனவும் இனி வழங்கேன். நின் மானமும் காத்திடேன் என்று துரத்தினன். அங்ஙனம் தந்தை வீடு துரத்தவே அந் நிழலியென்னும் சாயை சடுதியிற் சென்று தந்தை மயன்பால் அணுகிக் கண்ணீர் ததும்பக் கவலையுற்று அவன் காலில் விழுந்

தாள். அதுகண்ட மயன் மனத்தில் வெகுளியுற்று அதை ஒரு வாறு அடக்கிக்கொண்டு ஆராய்வானாயினன்

அறிவனை வெகுளி யுற்று லதைப்பொறுப் பவனே கேட்போன்
மறுவிலா மனைபொ றுப்பாள் மகிழ்நனூர் வெகுளி யுற்றுற்
கறுவுற வத்தன் றன்னை பவன்மகன் பொறுப்பான் மூத்தோ
னுறுசினம் பொறுத்த லாகு முபர்தம்பி கடனு மென்பர்.

தந்தை, குரு, தமயன், கணவன் வெகுளியுற்றால் முறையே புதல்வன், மாணாக்கன், தம்பி மனையாள் இவர்கள் பொறுக்கக் கடவர்கள். அன்றியும்,

தந்தைநல லறிவன் கேள்வன் தமையுமூ மூத்தோன்யாரும்
முந்துற் வெகுளி யுற்றால் முனனுறுமகன்றன் கேட்போன்
எந்தநல் லிளைஞன் நல்லாட் கிசையுறப் பரிந்து நிற்க
வந்தவ ரெவரும் வாரா மறமுடை யவரே யென்பர்.

இவர்களொருவருக்கொருவர் கலகமிட்ட காலத்தில் பரிந்து கேட்போரெல்லாரும் பாவிகளே பாவாராதலால் நாம் கதிரவனை மிகவும் பொறுக்கும்படிக் கனிவுறக் கேட்டுக்கொள்ளுவதே முறைமையாகுமென முன்னி அவன்பாலடைந்தனன். அங்ஙன மெண்ணி அடைந்த மயனை நோக்கியும், தன் மனையாள்மீதிருந்த வருத்தத்தினால் வருகவென்று நல்வரவு கூறாதும், முகமனின்றியும், ஆங்கிடங்கொடாமலுமிருந்தனன். அது நோக்கிய மயன் தன்பெண்ணைக் கருதி இவண் உண்டாகிய தன் வெகுளியையும் ஒழித்து உரைப்பானாயினன். கதிரவசே! நின்னால் என் மகள் நிந்தித்து அடிக்கப்பட்டாள். அன்றியும் உலகில் மனைவியை அடிப்பது இழித்துக்கூறத்தக்கதென்பர். பலராலிகழப்படுபவ னும், மாதர்களை வைத்துப் பாதுகாக்க வலியில்லாதவனும், நோயாளனும், ஆகிய இம்மூவரும் அடியவளாகவாய்ந்த மனை யாளை அடித்தொதுக்குவானவான். நீயோ, இங்ஙனமின்றி நற் குடிப்பிறந்தோன். அழகும் குணமும் அடையப்பெற்றவன். தேவர், கந்தருவர்கள், முதலியோர்களுக்கு மிகுந்த விருப்பத் தைச் செய்பவன். இவ்வாறு எல்லாச் செயல்களிலும் இசை யுடையனாகிய நீயோ பதினாயிரம் மனைவியர் பெற்றாலும், அவர்

களைப்பார்த்தார்க்குந் திறனுடையவன். இன்னும் இந்த நலம், இந்த தீதென்று அறியும் இயல்புடையவன். அங்ஙனமாகியும் அறியாதவன்போல் இருக்கிறாய். எவன் ஒருவன் தன்னால் வழி படத்தக்கவனிடத்தில் வெகுளியை வைப்பானோ அவன் எவ்வகையாலும் அழிவது திண்ணம். அம்முறையில் யான் உன்னால் வழிபடத்தக்கவனாயினேன். உன்னுடைய அகத்தை நோக்கி அடைந்தால் என்னை அவமதிப்பது அழகோ? எவன் தனதில்லிடம் வந்த குரு, மாமன் முதலியோர்களை அவமதிக்கின்றானோ அவன் கற்பகோடிகாலம் புண்ணியத்தைக் கைவிடுவானாவான். ஆதலால் என்பால் வெகுளாது உன் மனைவியின்பால் வந்த வெகுளியை அறவே யொழித்து, உன்னிடத்தில் இருந்த மணிகளில் இரண்டை மூத்தாளுக்கும், இரண்டை இளையாளுக்கும் கொடுத்திடுக. இதுவே புகழும் அறமும் ஆகும். மூத்தாளோ கடவுட்காரியம் இயற்றற்கே உரியாள். அன்றியும் நின்னை வழிபடத்தக்கவளே. இளையாள் எல்லாவற்றிற்கும் உரியள் இல்லையாயினும் இருவரையும் சமனிலையாகவாயினும் கொண்டு இன்புறுக; இல்லையேல், என்பாலடக்கப்பட்ட சீற்றமும் எழுமேல் என்னாகுமோ? யானறியேன் என்றான்.

அதுகேட்ட கதிரவன் கடுமையாக, இங்குநில்லாதீர், இதை விட்டகலுமென்றனன். அதற்கு மயன் பொறும்! பொறும்! என்றனன். மூத்தாளும் முறுவல் பூத்தனள். அதுகண்ட மயன் பெரிதும் வெகுண்டு பற்கடித்துச் சிறிதுகாலம் வறிதேயிருந்து, ஆராய்ந்து தெளிந்து, இனி இவனால் என்னாகும்? குரு தந்தை தமையன் கணவன் ஆகிய இவர்கள் எல்லைமீறினாலும் ஒறுத்திடத் தக்கவராவார். இன்னுஞ் சிறிதுகாலம் அடக்கஞ்செய்து பார்ப்போமென்றுங் கதிரவா! என்னையிழிப்பதும், எடுப்பதும் பின்னால் ஆகுக. நான் உன்னைப் பன்முறை வேண்டிக் கேட்டுக் கொண்டும், அதைப்பொருட்படுத்தாமல் இருப்பதால், உன்னை இப்போதே ஒறுத்திடுகிறேன் என்று துணிந்து, சாணைச்சக்கரத்தில் அக்கதிரவனைத் தன் வலியால் புகுத்தி, அவன்கையை அறுத்தனன். அருகிலிருந்த மூத்தாள் அவன் காலில் அடைக்கலம் புகுந்து தச்சர்தலைவா! நீயோ என் தந்தைக்குத் தம்பியாவாய்! உன் தமையன் பெண்ணான நான், உன் மகளாவேன். என்பால்

இரக்கம் வைத்து என் தலைவனை விடுத்து எனக்கு மங்கலத்தை மகிழ்ந்தளித்தல் வேண்டும்.

அணங்கினுக் கணங்கு செய்யு
மழகுடை வடிவி னோனும்
குணங்களுக் கெல்லாம வாய்ந்த
கொள்கலமெனினுங் கொண்டோ
னெண்ணங்களுக் கிசைந்த வாழ்க்கை
பெறத்தனை யுடைய னோனும்
கணங்குழைக் கிசைந்த கோவன்
கழிந்திடிற் பிறவி யென்னாம்.

மாதர்களுக்கு மணாளனில்லையேல் அவர்களிருந்துமென்? இது உன்மகளாகிய இளையாளுக்கும் ஒக்கும். எங்களிருவருக்கும் இசைந்த கேள்வனில்லையேல், எத்தனையழகும், அணிகலமும், புத்திரர்களும், செல்வங்களும் இருந்தும் என்பயன்? அது உமக்கே அக்கத்தை விளைக்குமன்றோ! எங்களிருவருக்கும் மங்கலத்தை ஈவது உமக்குப் புகழும் புண்ணியமுமாமென்று நல்லொளியை நவின்ற நன்மொழியைக் கேட்டு, மயன், தான் கொண்ட வெகுளிக்கு வெட்கமுற்று நின்றனன். அதுசமயத்தில் நிழலியென்பாளும் அது உண்மையே. தந்தாய்! யானும் வெகுண்டு அடிபட்டு நொந்து வந்து மொழிந்தேன். என் கொண்டவன் நல்லனேயினுந் தீயனாயினும் ஆகுக. குலமகளுக்குக்கொழுநனே கடவுள், ஆகையால் என் கேள்வனை இன்னே விட்டொழிக என்றனள். இவற்றையெல்லாங் கேட்டு மயனென்பான் எப்படியாயினும் இருவரும் இன்புற்றிருக்க என்று கதிரவனைச் சாணைச்சக்கரத்தினின்றும் விடுத்துத் தன் இருப்பிடம் போய் இருந்தனன். கதிரவனும் கைகளற்றுப் போனான்.

இக்கதையைக் கேட்பவர் சொல்லுவோர் எந்நலமும் பெற்றின் புறுவரென்பது.

திருச்சிற்றம்பலம்.

32-வது கதிரவன்பால் மயன் வெகுளியுற்ற படலம் முற்றிற்று.

## 33வது
## கதிரவன் வழிபட்டுக் கைவளரப்பெற்ற படலம்.

திருச்சிற்றம்பலம்.

வண்டுவார்குழலாய்! கதிரவன் கையூறு நீங்கிய வர லாற்றை உனக்குச் சொல்லுவன். அதைக் கேட்பாயாக என்று சொற்பதங்கடந்ததொல்லோன் கூறுவான்றொடங்கி அருளினன்.

பின்னுங் கதிரவன், மூத்தாள் இளையாள் என்னும் இரு மனைவியாருடன் மூவருமாய்த் தன் கையின் ஊறு ஒழித்திட ஆராய்ந்து தமது குருவாகிய வியாழனார்பாற் சென்றனர். அவரை அஞ்சலித்து வலமும் வணக்கமுஞ் செய்து வந்த வரலாறு முற்றும் மொழிந்து அமரருக்கு அறிவுறுத்தும் அறிஞ ரானீர்! முக்காலமும் உணர்ந்த முனிவர்மணியே! அடியேன் கையூறு நீங்கிக் கவலையொழிவதெங்ஙனம்? அதை அறிவுறுத் தல் வேண்டும் என்று அன்பும் அச்சமுங் கொண்டு கதிரவன் விண்ணப்பஞ் செய்ய, அதைக்கேட்ட வியாழனார் விளம்புவ ராயினர்.

வெங்கதிர்ச்செல்வா! உனது கையின் ஊறு நீங்குமுயர்ந்த தொரு திருத்தலங்கூறுவன்:— பன்னிரண்டு கதிரவர்களுள் இடைப்பட்ட சூரியனென்பான் முன்னொரு காலத்தில் கிரகத் தலைமையைப் பெறவேண்டிச் சௌனக முனிவரால் மொழியப் பட்டபடியே நினைத்த எல்லாப் பொருள்களையும் ஈவதும், கை லைக்கு ஒப்பானதும், சிவபெருமானுக்குச் சிறந்த தலமானதும், பார்த்தபோதே பலபாவங்களைப் பாற்றத்தக்கதுமான சண்பக வனஞ்சென்று நந்திபெருமான் சான்றுபிள்ளையார் விடைபெற் றுச் சண்பகநாதனையும், மங்கைபாகத்தலைவனையும், அம்மையார் இருவரையும், கண்ணுற்று வணங்கிக் கண்ணுடித்திருவிழா இயற்றி, விதிப்படி மாவழிபாடு செய்து, ஞாயிற்றுக்கிழமை மூன்றிலும் தவறாமல் சூலத்திருக்குளத்தில் மூழ்கி அத்திங்களில் பிரமனால் செய்யப்பட்டுப் பின்னர் நின்றுபோன கார்த்திகைத்

திருவிழாவைச் செய்யத் தொடங்கினான். அத்திருவிழாவிற்குக் கொடியேற்றிப் பெருஞ்சிறப்புறத் தேவர், கந்தருவர்களோடு திருநாள் எட்டும் நடத்தி, ஒன்பதாம் நாள் தேர்த்திருவிழா நிகழ்வுறச்செய்து, பத்தாநாள் கடைஞாயிறில் சூலத்திருக்குளத்தில் புனித நீராட்டக் கொண்டாட்டத் திருவிழாவும் நிறைவுற நிகழ்த்தி, அத்திரத்தேவருடன் அதில் மூழ்கி, எம்பெருமானை இசையுடன் துதித்தனன். அப்பொழுது எம்பெருமானாகிய சண்பகநாதன் அக்கதிரவன்முன் தோன்றி, இனிய காட்சி இன்புடன் அளித்து, நினது வழிபாட்டால் மனமகிழ்ந்தோம். நினக்கு வேண்டுவதென்னை? விளம்புவாயாக; வழங்குவோமென்றனன். இதுகேட்டு ஆதித்தன் அஞ்சலித்து வலஞ்செய்து வணங்கி அருள்நிலயமே! எனது வழிபாட்டில் மகிழ்ந்தீரென்பது உண்மையேயானால் இதுமுதல் இவவுலகத்தில் இருசுடர்களும் இருக்கும் வரையும் என்னால் புதிப்பித்துக் கொண்டாடப்பட்ட இத்திருநாளும், இத்திருக்குளமும், இத்திருநகரும், தேவரீர் திருநாமமும் என்பெயரால் மூன்றுலகமும் விளங்க வேண்டும். இந்தக் கதிரவன் குளத்தில் கார்த்திகைத் திங்களில் என்னுடைய நாளில் மூழ்குகின்றவர்களுக்குப் பன்னிரண்டு, எட்டு, பிறப்பு ஆகிய இராசிகளில் யானிருந்த தீங்குகள் முற்றும் நீங்குதல் வேண்டும். இன்னும் பெரும்பாவங்களை நீக்கி உம்முடைய சிவப்பெருந்திருவையும் உடனே செறித்தல் வேண்டும். பிற புனிதநீரில் மூழ்குவோர் என்பெயரால் விளங்கும் இத்திருக்குளத்தை நினைந்து மூழ்குவாராயின், அவர்களுக்கும் அவ்வாறே அருள் புரிதல் வேண்டும். என் விடைபெற்று இதில் மூழ்குவோர் சேராத இடத்திற் சேர்ந்தாலும் உண்ணாத பொருளை உண்டாலும் செய்யத்தகாத செயலைச் செய்தாலும் அப்பாவங்களினின்றும் விடுபட்டுத் தாழ்மையடையாதவர்களாதல் வேண்டும் அதனோடு யான் கிரகத்தலைமையையும் பெற அருள்புரிதல் வேண்டுமென்று அஞ்சலித்து, வணங்கி, விண்ணப்பஞ்செய்தனன். வேண்டுவோர் வேண்டுவதே ஈவானான சண்பகப் பெருமான் அவன்பாற் கருணைநோக்களித்து, அவ்வாறே அருள்புரிந்தனன். அதனால் சூலத்திருக்குளம் சூரியத்திருக்குளமெனவும்

சண்பகப்பெருமான் சூரியேச்சுரனெனவுஞ் சண்பகநகர் சூரியேச்சுரமெனவும் வழங்கலாயின. ஆதலால் மார்த்தாண்டவனெனும் மாண்புடைக் கதிரவ! நீயும் அந்தக்கதிரவனால் வழிபடப்பட்ட சூரியத்தலத்தை அடைந்து, அன்போடு கார்த்திகை ஞாயிறுகளில், அக்கதிரவர் திருக்குளத்தில் காவலாளர்கள் விடைபெற்று, அந்தக் கார்த்திகைத் திருவிழா ஒன்பது நாட்களும் அன்புடன் "உடல்வலம்" புரிந்து கடை ஞாயிறில் அத்திரத்தேவர் மூழ்கும்பொழுது நீயும் மூழ்குவாய். எவர்கள் அப்போது மூழ்குகின்றார்களோ அவர்கள் குருடராயினும், மூடவராயினும், நோயாளராயினும், மாபெருநோய்வரத்தோற்றமுடையவராயினும், அக்குற்றங்கள் அனைத்தும் நீங்கப்பெறுவார்கள். ஆகையால் வேகமாகச் செல்லுக, அன்றியும் உன் அறப்பயனால் உயர்வான கார்த்திகைத் திங்களும் வருகின்றது. மாசித்திங்கள் முதல் ஐந்து திங்கள் வரை அந்நகரில் விண்ணகத் தேவரும் நண்ணவும் மாட்டா விழுப்பொருளான அப்பெருமானை வழிபடுக.

அதனால் உனக்குப் பெரும் புகழுளதாகும் எனவுரைத்தனர். அதுகேட்ட கதிரவன் இல்லறக்கிழத்தியார் இருவருடன் உலகில் எண்ணிலாப் பாவங்களனைத்தும் அறவேயொழிக்கும் அத்தலத்தை அடைந்து, சான்றுபிள்ளையார் அருளும் நந்திபெருமான் விடையும்பெற்று, எண்ணுதற்கெட்டாளழிலார் பெருமானை சண்பகநாதனையும் மங்கைபாகத்தலைவரையும் வழிபட்டுக் கார்த்திகைத் திங்கள் முதல் மூன்று ஞாயிறுகளில் தன் கையூறு அகலவேண்டி அத்திருக்குளக் காவலாளர்களை வணங்கி விடைபெற்று மூழ்கலுற்றுக் கார்த்திகைத் திருவிழாவைக் கொடியேற்றித் தொடங்கி ஒன்பதாம் நாள் தேர்த்திருவிழாச் சிறப்புக் கொண்டாடி, அவ்வொன்பது நாட்களும் "உடல்வலம்" புரிந்து பத்தாம் நாள் நீராட்டத் திருநாள் நிறைவுறச் செய்ய அத்திரத்தேவருடன் மூழ்கினன். அப்போதே திருவும் மெய்ப்பொருளும் செவ்வனே ஈந்தருளும் செஞ்சடைப்பிரானுன சண்பகப் பெருமான் தண்ணருளால் அக்கதிரவன் கைமுழுதும் ஊறு நீங்கிப் பொன்போல் ஒளிரக்கண்டு மகிழ்ந்தனன்.

உம்பரா சாயுயர்ந்த வுயரமுதே யொளிக்
கொளியா யுயர்ந்ததேவே
வம்பனேன் சிறுத்தொண்டுங் கைக்கொண்டு
வழிகாட்டி வாழச்செய்தாய்
இப்பருனை யெய்தியவென் கைவளர்த்தென்
னிசைவளர்த்தென் னிறையாய் நின்ற
வெம்பெருமா னெளியவர்கட் கருள்புரியுஞ்
சண்பகக்காட் டெந்தாய் போற்றி.

என்று துதித்து வணங்கினன். அதன் பின்னர் வியாழனார் அருள்மொழிப்படியே மாசித்திங்கள் முதல் ஐந்து திங்கள் வரை ஆரவனையுடன் ஆராவமுதான சண்பகப்பெருமானை வழிபாடாற்றி அப்பெருமான் பேரருள்கொண்டு, இருமனைவிய ரோடு இருப்பிடமான மேருவை அடைந்து, இன்புற்று வாழ்ந் தனன்.

இக்கதையைக் கேட்பவர் கேட்பிப்போர் எல்லோரும் இறைவனருள் பெற்று இன்புறுவரென்பது.

திருச்சிற்றம்பலம்.

33-வது கதிரவன் வழிபட்டுக் கைவளசப் பெற்ற படலம்
முற்றிற்று.

---

## 34வது
## விசுவாமித்திரர் வசிட்டரைக் கொல்லச் சூட்சி செய்த படலம்.

---

திருச்சிற்றம்பலம்.

பிறைவாணுதலாய்! வசிட்டர் தந்தைமலரோனுவரன் வாய்மொழி கேட்டு, மக்களைப் பிரிவுற்ற வருத்தத்தால் நாகேச் சுரப்பெருமானை வாழ்க்கைத்துணையொடு வழிபட்டுப் பேறடை அடைந்த வரலாற்றை உனக்கு உரைப்பேனென்று மந்திரமும் தந்திரமும் மருந்துமான பெருமான் உணர்த்துவாராயினர். மற்

ஒருநாளிலே முனிவர்களில் மேன்மையடைந்த விசுவாமித்திர
ரால் விளைந்த வெகுளியினால் அவரைக் கொன்றிடும்பொருட்டு
அருந்தவத்தைக்கொண்டு ஒரு நராதனென்னும் மன்பதைப்
பகைவனை உடனே உண்டாக்கி அவனைப் பார்த்து, இராக்கத
மணியே நீ சிவபிரானைச் செவ்வனே குறித்து அருந்தவம்
புரிக. அப்பெருமான் நினக்கு முன் தோன்றி நின்றருளும்
போது பொய்யர்களுக்குப் பொய்யனும், மெய்யர்களுக்கு
மெய்யனுமான அவ்விறைவன்பால் வசிட்டர் மாளுதலை
வேண்டிப் பெற்று, அவரை அழித்திடுக. அங்ஙனம் அழிப்
பாயானால் யான் உனக்கு வேண்டுந் திருவெல்லாம் அளிப்பேன்.
உனக்குத் துறக்கமுங் கொடுப்பேன். அதுவேயாது இந்திராணி
முதலிய இமயவர்மாதர்களைப் பெற்று, அவர்பாற் போகமுற்று,
அமரர் தலைவனுமாவாய் என்றனன். அது நோக்கிய அவ்
விராக்கதன் அடிகாள்! எங்குச் சென்று இருந்தவம் புரிவேன்?
அதை எனக்கு இசைத்தருளவேண்டுமேயென விசுவாமித்திரர்
விளம்புவாராயினர். இராக்கதவேந்தா! திருக்கோகரணஞ்
சென்று இருந்தவமியற்றுகவென்றனர். அவ்வாறே அவ்விராக்
கதன் அத்தலத்தை அடைந்து கடலில் மூழ்கித் திருக்கோ
கரண நாதர் திருமுன் செவ்வனே சென்று வாய்பேசாதிருந்து
ஆயிரமாண்டும் அருந்தவ மியற்றுவானாயினன். ஆயிரமாண்
டின் இறுதியில் கருதுவார், கருத்தறிந்து முடிப்பாராகிய சிவ
பெருமான் எதிர்தோன்றி நினக்கு வேண்டுவது என்னவென்
றருளினர். மன்பதைப் பகைவனான அரக்கன் எந்தாய்! யான்
எப்படியாயினும் வசிட்டரைமாய்த்தல் வேண்டும். இதுவே
யான் வேண்டத்தக்கது என்று வணங்கித்துதித்து விண்ணப்பஞ்
செய்தனன். வேண்டுவார்வேண்டுவதே ஈவானான பெருமான்
விசுவாமித்திரர் சூட்சி என்று புன்முறுவல்செய்து இராக்கத
வேந்தால்! நீ அடிசிற்பாகனாக வடிவங்கொண்டு மக்கள்
தசையை வசிட்டர் வாய்ப்படச் செய்வையேல் அவர் மாளுவ
ரென்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினர். உடனே அவ்
விராக்கதன் விரைந்து சென்று விசுவாமித்திரர்பால் எம்பெரு
மானார் அருள் முறையை இசைத்தனன். அது கேட்ட விசுவா
மித்திரர் கழிபெருங் களிபாட்டயர்ந்து அவனை நோக்கி அதற்
கேற்றதொரு சூட்சியும் வழங்குவாராயினர்.

இராக்கதவேந்தே! அயோத்தி அரசனும், பெருஞ்செல்வ
னும், எழுதீவுகளுக்கேந்தனும், பெரியார்பால் பெருங்காதலுள்ள
வனுமான மித்திரசகனென்பான் ஒருவனுளான். அவ்வரசன்
பால் மடைப்பாகனாகச் சென்று அவனை மகிழ்வித்து அவன்
தந்தையின் திதி வரும்போது மைந்தர் தசையை வகையுடன்
அருந்தியிடுவரிய். அவர் அதனையுண்டு மாள்வார். அவ்வாறு
இயற்றுவையேல், நீயும் யான் பதினாயிரம் ஆண்டுபுரிந்த தவப்
பயனால் துறக்கம் புகுந்து, இந்திரர் முதலியவர்களை எளிதாக
வென்று அவர்கள் நின்னை வழிபடச்செய்வையென்று விசுவா
மித்திரர் விளம்பினார். அவ்வாய்மொழியைக் கேட்டவரக்கன் அவ
ணின்றும்புறப்பட்டு அடிசிற்பாகன் வேடம்பூண்டு அயோத்தியர
சன்பாலடைந்து அவ்வரசனை நோக்கி வேந்தால்! வாழ்கவென்று
வாழ்த்தி அவன்பால் யான் ஒருமடைப்பாகனாவேன். பெருண்டி,
சிற்றுண்டி முதலிய பாகங்களெல்லாம் பன்முறைபாக இயற்றப்
பயின்றுள்ளேன். உண்டி வகைகளை அளவின்றி ஆயிரம், பதி
னாயிரம், நூறாயிரமான மக்களுக்கும் இமைப்பொழுதில் அமைப்
பேன். சௌராட்டிர தேசத்தில் அன்னக்கொடியனென்னும் அர
சன்பால் ஓராண்டு இருந்தனன். அவன் என் இயல்பு முற்றும்
அறிவான். அவன் உனக்கு அம்மானாகையால் என் பெயரை
இசைத்துத் தூதர்வாயிலாகக் கேட்டால் அறியலாம். அவன்
பால் இப்போதும் என் புதல்வன் இருக்கின்றனன். எனக்கும்
ஒரு நோன்புண்டு அதாவது அரசர்களுள் ஓராண்டு ஒருவர்
பால் இருப்பேன். இது இரண்டாவதாண்டாகும். இனி ஓராண்டு
மற்றொருவர்பால் இருப்பன், இதுவும் ஒவ்வொரு ஆண்டு ஒவ்
வொரு இடத்திலிருந்தால் உன்னைப்போன்ற பாகன் ஒருவன்
இம்மூவுலகத்திலும் இல்லை என்ற பேர்பெறலாமென்று எனக்கு
அலரவனிட்ட அருட்கட்டளையாகும். அம்முறைப்படியே
அரசே! உன்னுடைய அரண்மனை அகத்தில் ஓராண்டு முற்றி
லுந் தொண்டுசெய்ய விடையளித்தல் வேண்டுமென்று விண்
ணப்பஞ் செய்தனன். அது கேட்ட அரசன் அவன் அடிசிற்
பாகனென்பதையும் அலரவனிடத்தில் அருள்மொழி பெற்ற
வனென்பதையும், கேட்டும் அழகுள்ளவனையுஞ் சொல்லாற்ற
லுடையவனையுமிருத்தலைக் கண்ணுற்றுங் களிபேருவகை
யடைந்து, அப்பாகனை நோக்கிப் பாகர் தலைவா! நின் சொல்மட்

டில் அக மகிழாவிட்டாலும் என் மாமன்பால் இருந்தனனென்ற அளவிலே யான் மகிழ்ந்தனன். அதையும் ஆள்விடுத்து அறிவேனாயின் காலங்கடந்திடும், இன்னும் இசண்டு மூன்று திங்களில் நின்னுடன் ஆங்குச் செல்வேன். அது போது அதையும் அறியலாமே. ஆதலால் இப்போதே நமது அரண்மனை அகத்தில் அட்டிற்பாக வேலையில் அமர்கவென்று கட்டளை அளித்தனன்.

அந்த மடைபபாகன அரசே! யான மடைப்பணிமட்டும் அறிந்தவனல்லன். அதனோடு எல்லா அறநூல்களையும் எவ்வகைப் பொருள் நூல்களையும் மிகத் தூய தலங்களின் உண்மையையும் இயன்றமட்டும் நன்கு பயின்றுள்ளேனென்று கூறியதை அரசன் கேட்டு மனநிறைவடைந்து இதுமுதல் நீ அரண்மனைத் தொண்டு செய்யலாமென்று அன்புடன் விடையளித்தனன். அம்மடைப்பாகனும் அதுமுதல் அரண்மனைப் பாகசாலையில் புகுந்து ஆங்குள்ளார்களுக்கும் அரசனுக்கும் அக மகிழ்ச்சியுளதாக அன்புடன் அமுது, கறி முதலிய பாகங்கள் அனைத்துஞ் செய்திட அந்தப் பாகனால் அமைக்கப்பட்ட இன்னடிசில், கறி, சிற்றுண்டி வகைகள் முதலியனவெல்லாமுந் தெவிட்டுறவுண்ட பெரியோர் அனைவரும் இதுகாறும் எந்த அரசன் அகத்திலும் இத்துணை இனியவகையாக அறுசுவையுண்டிகள் அமைந்தனவில்லை. என்று வியப்புற்று இப்பாகன் மண்ணவனோ? விண்ணவனோ? முனிவனோ? கந்தருவனோ? யாரோ அறிகிலோமே? ஆனால் காலந்தவறிலன். ஒரு சிறிதுஞ் சோர்விலன் அழுக்கு, புகைமுதலிய குற்றமுஞ் செறிந்திலன்; இன்முகம் இன்சொல் இயல்பாகவே உள்ளான்; எப்போதும் இனிமை பெறப் பேசும்போதெல்லாம் அவன் வாய்மொழிகள் அறியநூற் பொருள்களை அடையக்கிடக்கின்றன வென்று வியந்து பேசக் கேட்ட அரசன் அவ்வாறிருத்தலை நன்குணர்ந்து அந்த மடைப் பாகன்பால் அகமகிழ்ந்து ஈதல் முதலிய எல்லா அறங்களையும் அவனைக்கொண்டே அறிந்து செய்வானாயினன், அம்மடைப் பாகனும் எந்தவகையாலும் அவனையும் அங்குள்ளவரையும் விசுவாமித்திரர் சூட்சிப்படி தன்வயமாக்கி அவனுக்கு அணுக்கத் தொண்டனாகத்தன் சூட்சி வெளிப்படாமலிருந்தனன். ஒருநாள் அரசன் அகத்தில் தென்புலத்தார் நாட் கொண்டாட்டம் வந்தது.

அதற்காக அப்பாகனை நோக்கி அடிசிற்பாக! நாளை நமதகத்தில் தென்புலத்தார் நாட்கொண்டாட்டம் வருகின்றது. அதை விதிப் படியும்அன்புடனும் நடத்தவேண்டும். நீயும் தக்கவாறு அந்த ணர்க்கினிய இன்னடிசில் அமைத்தல் வேண்டுமென்றுகூறினன். அதுகேட்ட அட்டிற்பாகன் அரசே! உன்னுடைய ஆசிரியரான அந்தணரெங்கே? அவர் இவண் உணவுக்குச் சேர்வாரே, ஆனால் நான் அறிந்தபடியே தென்புலத்தார் கடன் இறுக்கும் இயல் பைச் சிறிது சொல்லுவன்; அதைக் கேட்டுக் களிக்க என்ற னன். அதுகேட்ட அரசனும் நீ சொல்லாற்றலிற் தேர்ச்சி பெற்றவன்; சொல்லுகவென்று நல்விடை தந்தனன். அவ்வட் டிற்பாகன் தென்புலத்தார் நாட்கொண்டாட்டத்தின் இயல்பை யும் அதில் வரும் அந்தணர் இயல்பையும் இயம்புவானாயினன்.

திருச்சிற்றம்பலம்.

34-வது விசுவாமித்திரர் வசிட்டரைக் கொல்லச் சூட்சி செய்த படலம் முற்றிற்று

---

## 35வது
## தென்புலத்தார் கடனிறுக்கும் இயல்பு தெரித்த படலம்.

---

திருச்சிற்றம்பலம்.

உலகனைக்கு ஆகமமாகிநின்றண்ணிக்கும் அழனிறக் கடவுள், அயோத்தியரசனுக்கு நாரதன் தென்புலத்தார் கடனி யல்பைத் தெரித்த வரலாற்றைத் தெரிவிப்பாராயினர்.

நாரதனென்னும் மன்பதைப்பகைவன் அயோத்தியாளும் அரசனை நோக்கி வேந்தால்! ஒவ்வொரு வினையின் இயல்புங் குகையுள் வைக்கப்பட்டதுபோன்று யாவர்க்கும் மறைவாயும் செயற்கரியதாயும் உளதாம். அங்ஙனமாயினும் ஒருவாறு சுருக் கியும், விளக்கியுங் கூறுவன். அதனால் முதற்கண்செய்பவனி யல்பும், பின்னர்ப் பெறுபவனியல்பும், விளங்கக் கூடும். அக் கடனைச் செய்பவன் சாண்டில் அறுதிங்களாயினும். மன்ன

களாயினும், ஒருதிங்களாயினும், அதனுள் இருபத்தினான்கு நாட்களாயினும், பன்னிருநாட்களாயினும், ஆறுநாட்களாயினும், இவற்றுள்முன் இயன்றவரை அயல்வீட்டில்உணவருந்தல் கூடாது. அவ்வாறு இயலாவிட்டாலும் முதனாளும் அக்கடன் செய்கின்ற போதும் அதற்குப்பின்னாளும் அயலுணவை அறவே ஒழித்தல் வேண்டும், அதைஉண்டானாயின் தன்னுடலின் தசையை உண்ட நரகிற்செல்வன். இன்னும், தினவுசொறிதல்பகல்துயிலல்,புணர்ச்சி வேட்கை, தீயார்சேர்க்கை, பயனில்சொல்பாராட்டல், பாயலிற் படுக்கை, வழிநடக்கை, உறைப்புடையுணவுண்ணல், வெற்றிலைப் பாக்குத்தின்றல், இரண்டுமுறையுண்ணல், அறுசுவையுணவில் ஆசைப்படல், பிறர்பொருளைவாங்கல், பொய்பேசல், ஆண்பெண் கூடவொட்டாச்செயல், புதியதுடுத்தல், சந்தனப்பூச்சு, மருந் துண்ணுதல், எண்ணெய்தலையிற்பெய்தல், துக்கமுளார்பாற்சேர் தல், உரப்பல், அடித்தல், முதலிய தமோகுணச்செயல், இராசோ குணச்செயல், பல்தேய்த்தல், துரும்புகிள்ளுதல், இழவுச்சோறு, விழவுச்சோறு, இவற்றை அறவேயொழித்து, நோன்புறல் வேண்டும். இந்நோன்பின்றித் தென்புலத்தார் நாட்கடனியற்றுத் தால் அசிராத்தம் பயனின்றிப் போமென்பர். அந்நியமத் துடன் செய்தால் தென்புலத்தார்க்கு அழியாத மகிழ்ச்சியுண் டாகும். இல்லையேல் அசுரர் கொள்ளக் கடவதாகும். இனி இப்படியே ஒவ்வொரு ஆண்டிலும் தென்புலத்தார் கடன் செய்யும் நாளில் அதற்கு வழிபாடுபெறுபவனும், அந்நாள், முதல்நாள், அதன் பின்னாளாகிய இம்மூன்றிலும் மேற்கூறப் பட்ட விலக்குகளை அறவே ஒழித்தவனாயும், விதிப்படி பூணூல், திருநீறு திருக்கண்மணி முதலிய சிவவேடமும், சிவநாமஞ் செப்பலும், சிவசிந்தனையுமுடையனாயும், காம, வெகுளி, மயக்கம், முதலிய குற்றமற்ற நன்னெறியில் முதல்வனாயு மிருத்தல் வேண்டும். இவனே அதில் வழிபாடு பெறுதற்குரிய வனாவன்.

இனித் தென்புலத்தார் நாட்கடனைத் தொடங்கும்போது பசுவுக்குப் புல் கொடுத்துத் தொடங்கில் ஆனைந்து மூன்று நாட் களிலும் சாப்பிடல்வேண்டும். முறைப்படி நடக்கும் சிராத்த காலத்தில் பிறரிடத்தில் எந்தப் பொருளையும் கேட்டு வாங்கலா காது. பால் முதலிய சுவைப்பொருள்களையும் விற்றலாகாது.

கையில் பொருளில்லாதவன் வீட்டிலுள்ள கலங்களை விற்றாவது அந்நாட் கொண்டாடலாம். இங்ஙனமின்றிப் பால் முதலிய சுவைப்பொருள்களை விற்றும், பிறரிடம் பொருளைக் கேட்டு வாங்கியும் சிராத்தமான தென்புலத்தார் நாட்கொண்டாட்டஞ் செய்பவன் நரகிற்கு உரியவனாவனென்பார். இச்சுவைப் பொருளன்றிப் பிறபொருள்களை விற்றல் அப்படிக்குற்றமாகாது என்க. இதுவும் செய்ய இயலாதவன் அந்நாட்கொண்டாடவேண்டில் மக்களும் நீரும் இல்லாத காட்டிற் சென்று ஆங்குள்ள வன்னி மரத்தைக் கட்டித் தழுவி யான் கையில் பொருளில்லாதவனாயினேன்; என்செய்வேன்? எப்படியாவது தென்புலத்தார் சிந்தை மகிழவேண்டுமே என்று அன்புற்று ஏங்கி அழுதால் அதைக் கேட்டு அத்தென்புலத்தார் சிந்தை மகிழ்வார்கள்.

இன்னும் தென்புலக்கார் நாளில் விருந்துண்பவர் விருந்துண்ணும்போது உலகவார்த்தைகளை உரைத்தால் அத்தென்புலத்தாரைக் கொல்லுகின்றனரென்பர். அந் நாட்கொண்டாடும் போது பிறரை வெகுண்டு வினைசெய்தால் அவன் குலம் அழிவே யாகும்; பெண்பாலாரோடு இழிவுரைகளை இயம்பல்கூடாது. உண்ணும்போது சிரித்தால் கழுதைப் பிறப்பாவன். செய்பவர்களும் பெறுபவர்களுமாகிய இருவரும் எவ்வகைகளிலும் அடக்கமாகவே இருத்தல் வேண்டும்; இவர்களே மேலோராவார்.

இனி உணவருத்தும்போது உண்பார் எல்லார்க்கும் பால், நெய், மோதகம் முதலியவற்றோடு அருத்துதல் வேண்டும்; பின்னர்க் காணிக்கையோடு வெற்றிலைபாக்கு அளித்தல் வேண்டும். அக்கடன் செய்பவன் அன்று காலையிலேயே மூழ்கி திருநீறு, திருக்கண் மணிபூண்டு, காலைக்கடன்முடித்துச் சிவனினைவோடு அந்தணர்க்கு விருந்து அறிவித்து விடவேண்டும்; பின்னர் அவர்களை அழைத்து ஒருபிடி அளவான எள்ளுருண்டை கொடுத்து வெற்றிலைப் பாக்களித்து எண்ணெய் தேய்த்திட்டுத் தென்புலத்தார்க்குச் செய்யும் வழிபாடுகளைச் செய்யச் செய்க. பிறரைக் கொண்டு எண்ணெய் தேய்த்திட்டால் தென்புலத்தார்களைக் கொன்ற குற்றமடைந்து நரகிற்காளாவான். ஆதலால் தானே தன்னால் வழிபடத்தக்க அந்தணர்க்கு அன்று தன்கையால் எண்ணெயைத் தேய்த்திடல் வேண்டும். அங்ஙனஞ் செய்தால்

காசியில் கோடி முறை (சிராத்தம்) தென்புலத்தார் வழிபாடு செய்த பயனைச் சேர்வார்கள். எண்ணெய் இன்றித் தென்புலத்தார் வழிபாடு செய்தால் குலக்கேடுண்டாம். அன்றியும் தீவெட்டலின்றி அது செய்தால் அசுரர் கொள்வர். அவ்வழிபாடு கொண்டாடுமிடத்தில் நான்கு விரற்கிடை இடமுமில்லாமல் எள்ளை இறைத்தலும் வேண்டும். எள்ளைச் சேர்த்த உணவின்றி அக்கடன் செய்தால் குலக்கேடுண்டாம். அன்று தீவெட்ட நெருப்பினை உணவுக்குரிய பண்டமாக்கச் செய்து உதவினால் அன்று செய்த பலத்தைத் தென்புலத்தாரால் கொள்ளப்படாமல் அசுரர்கொள்வர்.

இன்னுந் தென்புலத்தார் கடனை முடிப்போன் தானே அடிசிலை அமைத்து அந்தணர்க்கு ஊட்டுவானாயின் காசியில், பதினாயிரம் சிராத்தம் செய்த பலனடைவன் தன் மனைவி கையினால் அதனைச் செய்தால் தென்புலத்தார்கள் எண்ணிலா இன்பமுறுவர். தன்னாலியலாதாயின் புதல்வன் கையால் அதனைச் செய்விக்கத்தகும். இவைகளையின்றிப் பிறரைக்கொண்டு இயற்றுவானேல், தென்புலத்தார் ஆறுதிங்கள் புலாலுண்ட குற்றமுடையராதலால் அவ்வாறு அதனை இயற்றினவன் அத்தென்புலத்தார்ப் பிழைத்தலால் குலக்கேடுண்டாக அவர்கள்பால் சுடுசொல்லும் பெறுவனென்க,

அட்டிற்பாகம் செய்யும்போது கல்லுக்கலத்திலும் இருப்புக் கலம் முதலியவற்றினுஞ் செய்தால் குலக்கேடுண்டாம் உடை, பூணூல் முதலியன கொடுக்காமலும் நெற்றியில் திருநீற்றை யிடாது திலகமிட்டும் அக்கடன் செய்தால் தென்புலத்தார் சிந்தை மகிழார். ஆதலால் அறிவுடையோன் நன்காராய்ந்து இந்தியமத்துடன் அக்கடனை முடித்தல் வேண்டும்

அக்கடன் சிரத்தையிற் செய்யப்படுவதாதலின் அதனைச் சிராத்தமென்பர் அக் கடனியற்றும்போது அதில் வழிபாடு பெற்று விருந்துண்போன் அன்றிரவிலும், மறுநாளிலும் நியமமாக இருந்தாலன்றி நன்மையடையான். செய்பவனைப்போலப் பெறுபவனுக்கும் மறுநாள் நியமவகைகளுமுள. அவைகள் மயிர்நீக்கல், எண்ணெய் தேய்த்தல் முதலியவாம்.

இனி அக்கடனை இயற்றும்போது ஈந்து பெறுபவன் நாட்டைவேட்டலில்லாதவன், கருக்கொண்டமனையாளையுடையன் மனையில்லாதவன், மணமில்லாதவன், பிணைப்புணவு உடையவன் தென்புலத்தார் நாட்கொண்டாட்டம் (திவசம்) தேடியுண்பவன் மறைபோதாதவன், செப்பவனுக்குரிய வேதமில்லாதவன், உடற்குறையானவன், அமாவாசையில் பிறரகத்துண்பவன், திங்கள் விலக்குடைய பூலையாளுடையவன், நீளிடையினின்றும் வருபவன், அறிவில்லான் மருத்துவஞ்செய்வோன், மந்திரவாதி, சூதாடுபவன், அட்டிற்றொண்டு செய்பவன், ஆகிய இவர்களைத் தென்புலத்தார் கடனிறுக்க வரிப்பவன், இரோதபாசமென்ற நரகடைவன்.

ஆதலால அரசே! அக்குற்றமுடையாரை வரிக்காமல் முற்கூறிய நியமத்துடன் தென்புலத்தார் கடனியற்றல் வேண்டுமென்று அரக்கன் கூறினான்.

அதுகேட்ட அயோத்தியரசன் அவனை நோக்கி நீயோ அறிஞன். இதுவரையில் கேட்டிலா விதிகளைக் கேட்க விரும்புகிறாய்; நீ அந்நூற்பயிற்சியுடையை; ஆதலால் நீயும் இத் தென்புலத்தார் கடனில் இனிமையாக அடிசிலமைக்கவேண்டும் என்று கட்டளை இட்டனன்.

அதன் பின்னர் அரசன் முற்கூறிய இயல்பாக அக்கடனை இறுக்கத்தொடங்கி அன்று காலைப் பெரியரும் நற்குண நற்செயலுடையருமான அந்தணர்களுக்கு அறிவித்தனன். அவனால் அறிவிக்கப்பட்ட வசிட்டர், வாமதேவர், சாபாலி, காசிபர், என்னும் நால்வரும் வந்தனர். அப்பெரியார் நால்வரைக் கொண்டு அக்கடனை யிறுக்கலுற்று அவர்களுக்கு அமுதருத்தி வழிபாடு செய்வானாயினான்.

அதுவமயம் மடைப்பணியாளனான இராக்கதன் தான் குறித்தபடி வசிட்டரைக் கொல்லக்கருதித் தன்னால் அடப்பட்ட மைந்தன் தசைக் கறியை ஆங்குப் படைக்கப்பட்ட கறிகளுளொன்றாக வசிட்டர் இலைக்கலத்தில் மட்டும் வஞ்சகமாகப் படைத்தனன்.

அவ்வஞ்சகம் அறியாத வசிட்டரான அந்தணர் அடிசிலுண்பான் கருதலே அவ்விலைக்கலத்திலுள்ள அப்புலாலை மனத்தாலுணர்ந்து இது அரசன் சூழ்ச்சியென்றே கண்சிவந்து, உதடு கடித்து, வெகுண்டு நின்று அரசே! அரக்கனைப்போல இரக்கமில்லாமல் எனக்கு மக்களூனைப் படைத்தபடியால் அவ்வரக்கனாகவே திரிந்திடுக என்று சுடுமொழி கூறினார்.

அதனை அரசனறிந்து யான் செய்யாததைச் செய்ததாகவே நினைத்து என்னைச் சுடுசொற்கூறினீர்; ஆகலால் யானும் நும்மை அங்ஙனமே சுடுசொற் கூறுவேன்; என்று நீரைக் கையிலெடுத்தனன். அதுபோதே அவ்வரசன் வாழ்க்கைத்துணையான மதயந்தி என்பாள் மன்னர் மன்ன! நும்பால் வெகுளப்பட்டவர் நுமது குலகுருவன்றோ! அவர் அறியாது செய்தனரேனும் நீயும் அங்ஙனஞ் செய்வது தகுதியன்றென்று தடுத்தனள். அதுகண்ட அம்மன்னர்மன்னன் கையிலெடுத்த நீரை என் செய்வேன்? என்று காலிலேயே விடுவேனென்று விட்டனன். அதுபோதே அவன் கால் கரிந்தது ஆகலால் அவனுக்கு கரிகாலனென்னும் (கன்மாஷபாதன்) பெயரும் பெருகலாயிற்று.

அதன் பின்னர் வசிட்டர் அஃதுணர்ந்து அந்த மடைத்தொழிலாளனை நோக்கிக் கண்சிவக்க உதடுதுடித்திட அடா அரக்கா! நீ சாம்பராகக்கடவை என்று சுடுசொல் வழங்கி இலைவீடாகிய தனதிருக்கையை எய்தினரென்பது.

திருச்சிற்றம்பலம்.

35-வது தென்புலத்தார் கடனிறுக்குமியல்பு தெரித்த படலம் முற்றிற்று.

---

## 36வது

## வசிட்டருக்கலரவன் அருண்மொழி பகர்ந்த படலம்

திருச்சிற்றம்பலம்.

பெண்ணழகியாகிய அம்மையை நோக்கி மாற்று மனங்கழிய நின்ற மறையோனான சிவபெருமான் பெருங்கருணை

யோடு வசிட்டரானவர் அலைசவன் அருண்மொழியைக் கேட்ட வரலாற்றைச் சொல்லுவாராயினர்.

வசிட்டர் மைந்தன் புலையைத் தொட்ட குற்றத்தின் கழுவா யாகக் கங்கைநீர் படிந்து நாற்பத்தைந்து நாட்கள்வரை மிகுந்த நியமத்துடன் மூன்று இலக்க முறையாக ஐந்தெழுத்தோதிக் காமதேனுவின் வலிபால் அந்தணர் பலர்க்கு அளவின்றி அமு தளித்தனர். அங்ஙனமாக ஒரு நாள் விசுவாமித்திரர், அந் தவமுனிவர் நடுவண் அம்முனிவர்களை நோக்கி அடிகேள்! மைந்தன் தசைக் கறி உண்டதற்கு மாற்றொன்றில்லையோ? நீங்களனைவரும் அப்போத்திபாசன்பாற் சென்று, ஆங்கவன் தென் புலத்தார் கடனாக விருந்தளிக்கும்போது வசிட்டருக்கு அடிசிற் பாகனான அரக்கனால் மைந்தன தசைக்கறி படைக்கப்பட்டில தோ? அந்தணரானால் அதற்கு விலக்கில்லையோ? சுவையுடைய உணவுக்குக் காணிக்கைக்கடனுங் கொடுக்கப்பட்டது போலும்! மலரோன் மகனால் மாண்புடை நூல்களும் விதி தரும்போலும்! மற்றவர்களுக்கு விலக்கிடும்போலும்! அன்றியும் விரைந்து விலக்குவதற்குக் கழுவாயும் எளிதாகுமோ! இவை களைத் தம்பி நாரதரும் கேட்டிலர்போலும்! என்று நகையாடினர்.

இவற்றைக் கேட்டிருந்த வசிட்டர் எதற்கும் பயன்தரு வான் கைலைக்கடவுளே! அதனால் அவனே சான்றாவான். அன்றி யும் யாரகத்தும் அமர்ந்திருப்பவனும் அவனே. அஃதறியாது இவ்வுலகில் என்னை வீணில் இகழ்ந்துரைக்கின்றனர். அதற்கு இயமனை ஒறுப்பவனாவான். இன்னும் அதற்குத் திசைக்காவ லர்களுஞ் சான்றாவர்களென்று வறிதேயிருந்தனர்.

இஃதறிந்த வசிட்டர் மக்களெல்லோரும் ஒருங்கு திரண்டு முனிவர் கூட்டம் முழுதையும் நோக்கி முனிவர் பெருமக்காள்! 'எங்களுடைய தந்தையானவர் பொறுமையால் முனிவராகிலர். அன்றியும், புலையனுக்கு வேள்வியியற்றி விருந்திட்டு உண்டி லர். துறக்கமுங் கொடுத்திலர். தவத்தில் தாசியைக் கண் ணுற்று மயங்கிப் புதல்வர்ப்பேறும் பொருந்திலர். அவ்வாறு செய்தவர் புதுமைத் தவத்தராய விசுவாமித்திரரே என்றனர்.

இதைக் கேட்ட வசிட்டர் அதுவும் நாம் கூறுவது ஏன்? எல்லாம் அறிபவன் ஒருவனுளனே உமையாளனே!

அயலவன் குற்றங்கூற வதிலொரு பாதிகொள்வன்
பயனுற வடாது சொன்னான் மற்றதி லிரண்டாக்கொள்வன்
னியலுற வெல்லா ருள்ளு மிருந்துநன் றிதுதீ தென்றுஞ்
செயலுற வறிந்தே யீவன் சிவனெனவிருப்பர் மேலோர்.

இதனை எந்நூல்களும் எடுத்துரையா நின்றது. ஆதலால் பிள்ளைகாள்! நீவிர் அவ்விசுவாமித்திரரை இகழ்ந்துரையாதீர்! என்று கூறியிட அது கேட்ட சத்தி முதலியோர் அங்ஙனமே வறிதேயிருந்தனர். இவ்வனமாக வசிட்டர் சுடுமொழியால் கரிகாலன் அரக்கனாய்க் காட்டகத்துத் திரிந்து எல்லோர்க்குந் துன்பஞ் செய்கின்றவனானான். அவ்வாறு காட்டகத்துத் திரியுஞ் சமயத்தில் விசுவாமித்திரரைக் கண்டு தன் வரலாறு முற்றும் மொழிந்தனன் அது கேட்ட அம்முனிவர் வசிட்டர் வஞ்சக முடம், பொறாமையும் மிக்கவர். எல்லாராலும் இகழத்தக்கவரே. வெகுளியால் திரிசங்கு என்பனையும் வீணே கெடுத்தனர். அவ்வாறு கெடுக்கப்பட்ட அவன் என்னிடம் அடைக்கலமாக வந்தனன். அதுகண்டு அவன் எண்ணியவாறே துறக்கமேற்ற இன்னும் ஆங்கு விளங்குவதை யாரும் அறியலாம். தீயவனுக்குத் தீயனாய் நின்று தீமைபுரிதல் திண்ணமாமாகையால் இந்த முனிவன் தண்டிக்கத்தக்கவனே என்று அவ்வரசனை அரக்கனிடங் கூறினார்.

அது கேட்ட அரக்கன் முனியரசே! நீயோ சிவன்பரலன்பன். யானோ இதுபோது மிகுந்த பசிநோயுறுவேன். அதை மாற்றுவதெங்ஙனம்? வசிட்டனைத் தண்டிக்கவும் வேண்டும். என்பசியும் என்னைவிட்டொழிதல் வேண்டும் அதற்கோர் சூட்சி சொல்லியருளக் கேட்டுக்கொள்ளுகின்றேன் என்றனன்.

அது கேட்ட விசுவாமித்திரர், அவ்வரக்கனை நோக்கி அரக்கர் தலைவா! நீ இன்றிரவே சென்று வசிட்டர் புதல்வர்களான சத்தி முதலிய நூற்றுவரையும் ருபோதிலேயே உண்டிடுக உன்பசியும் உன்னைவிட்டொழியா நிற்கும் என்றனர்.

அவ்வரக்கன் அப்பொழுது வசிட்டர் இல்லிற்கு சென்று அன்றிரவே அவர்மக்கள் நூற்றுவரையும் துயிலும்போது தூக்கிக்கடித்துண்டு விரைந்து வேறிடம் புகுந்தனன்.

அன்று வைகறைப்போழ்தில் சத்தி முதலிய தம் புதல்வர்கள் எழுந்து வாராமைகண்டு ஆங்குப் பள்ளியிலும் பிற இடங்களிலும் சென்று வசிட்டர் மனைவியான அருந்ததி பல முறையும் தேடினள். அவ்வம்மை அவ்வரக்கனால் தின்னப்பட்ட அப்புதல்வர்கள் கை, கால், மண்டையோடு முதலியவாக எஞ்சிநின்ற உடற்குறைகள் கிடக்கக் கண்டு மக்களெலோரும் அரக்கனால் மாண்டனரென்று வருந்திப் புலம்புவாளாயினள்.

மாண்டனரே புதல்வரெலாம் வயிறெரிய
மனமெரிய மதியிலேனான்
காண்டிடவு முயிர்பொழியேன் கணக்கற்ற
கலையுணர்ந்தீர் மதியிலேனை
வேண்டிடவும் வருவீரோ வொருவீராய் [illegible] ரின்
விரைந்து மாண்டீர்
தீண்டிடவுங் கரமிலேனே பார்த்திடவுங்
கண்ணிலேனே தெரியே னந்தோ.

எத்தனையோ புதல்வர்களாய்த் தோன்றினீ
ரென்றுளு மென்வயிற்றி
லத்தனையா லெரிபுகுத்தி யகன்றிட்டீ
ரந்தோவென் னருமை மக்காள்!
பித்தகமும் விதிவசமு மெங்கேயோ
விளம்பிலீர் மேன்மை மைந்தீ
ரித்தனையா முடிந்ததெனை முடிமோதி
வயிறதுக்கி யேங்கிநின்றாள்

இவ்வாறு அழுது உயிர்ப்பற்றிருந்தனள். வசிட்டமா முனிவர் வந்து புதல்வர்கள் போனதையும் அருந்ததி உயிர்ப் பற்று இருப்பதையும் பார்த்துப் புலம்புவாராயினர்.

குற்றமென்ன யான்செய்தேன் சிவசிவா
கொடிப்பானுங் கொளீஞு வானும்
மற்றவனே யெவ்வுயிர்க்கு மிரக்கமுதல்
லொழுக்கமுமே வாய்ந்தமக்காள்
கற்றனவுங் கைகொடா தற்றனவோ
வெவ்விதியோ கல்விமைந்தீர்
நற்றவமு மறந்தீரோ ஞாயிறுற
வறிந்திலீரோ நவின்றிலீரே.

யாராலு மறியாத வறிவுடையீர்
யாராலே யழிபப்பெற்றீர்
வாரீரோ வைகறையின் முழ்குவீ
ரெங்குற்றீர் வாய்மை மக்காள்
தாரீரோ நாள்வேள்விக் கரும்புல்லு
நல்விறகுந் தருவாரியாரே
யோராதே தம்பியரோ டென்மருவிக்
கருமனையை யொழித்தனன்றே.

என்செய்தேன் முன்னாளி னியார்க்கென்ன தீங்கியற்றி
யினிமை பெற்றேன்
முன்செய்த வினையென்றோ வெகுறுவே
னென்செய்தான் முன்போ லாவேன்
மன்செய்த புண்ணியமு மொன்றிலதோ
புகழிலதே வாழ்வுமின்றே
பொன்செய்த மெய்ப்புடையீர் பொய்யடையீர்
நைவடையப் புகுந்ததென்னே.

தாயுற்ற மறந்தாரோ யானுற்ற
பறமனுவோ சாய்ந்தீ ரந்தோ
பாயுற்ற பள்ளியிலே யெழவின்று
பார்த்திலனே பகர்ப்பாரெல்லா
நோயுற்ற செயலாமே யென்செய்கோ
வென்செய்கோ நோன்மை மக்கா
ளேயுற்ற தவமென்னே பயனென்னே
வீடென்னே யிசைப்ப தென்னே.

நானிழைத்த குறைநோக்கி யொளிபிருந்தார்
போன்றிருந்தீர் நயமார் மைந்தீர்
தேனிழைத்த மொழியுடையீ ரறிவுடையீர்
கிழவர்பசி தெருண்டி லீர்தே
யானிழைக்த வினையென்னே விதியென்னே
மதியென்னே யழிந்தீரென்றே
யூனிழைத்த வயிறறைந்து வாயறைந்து
புலம்பினு ருயிர்ப்புமற்றூர்.

வசிட்டர் இவ்வாறு புலம்பி உயிர்ப்பற்றுக் கிடந்த அமயம் ஆங்குள்ள முனிவர்பெருமக்கள் அதனையறிந்து அவர்பாலணுகி, முனியரசே! மனை, மக்கள், எல்லாமும் மாயையே; இதுவே உண்மை; இதுவே எல்லா நூற்றுணிபுமாம்; ஆதலால் இனி அதில் மயங்கி வருந்துவது அறிவுடையீராகிய உமக்குத் தக்க தன்று என்றனர்.

மனைமக்க ளெல்லாமு மதிமுடியான் மாயையென
வனைவர்களு மெடுத்துரைக்க வழிந்தவுயிர்ப் புற்றெழவே
வினைவயத்தான் வசிட்டரவர் மீட்டுமுயிர் விடக்கனித்தா
ரெனைவரையும் விடுவதுவோ விவ்வஞ்ச வெழின்மாயை

என்று வேண்டும் அறிவுடைமொழிகளைப் புகன்று தேற்னர். அதனுல் ஒருவாறு தெளிந்த வசிட்டமாமுனிவர் ழுந்து, புதல்வர்க்கு வேண்டும் இறுதிக்கடன்களை எழில்பெற முடித்துத் தன் இல்லிடு சென்றனர்.

ஆங்கு மக்களையிழந்த துயர் மாளாது எழவே அம் மக்கள் மீதுள்ள காதலினுல் மதியிழந்து அம்மைந்தர்போல் தாமும் நஞ்சுண்டாவது உயிர்விடத் தனித்துறுவாராயினர். அம்முனிவர் நஞ்சுண்டிடவும், தாயிற்சிறந்த தயாவான தத்துவனுகிய சிவபெருமான் திருவருளால் அந்நஞ்சும் அமுதாயிற்று. பின்னும் அவ்வந்தணர் நெருப்பை நிமிர்ந்தெழச்செய்து அதில் நின்றூர். அநநெருப்பும் அவர்க்கு அடங்கியமைந்தது. பின்னும் அடங்காமல் மலையிலேறி உயிரை மாய்த்திடத் துணிந்தார்.

ஆங்கும் விண்பணிந்தேத்தும் வேதியர் பெருமானுன இறைவனருளால் உயிர்போகாதுய்ந்த வசிட்டமா முனிவர் பல்லாற்றுனும் உயிர்விடத்துணிந்தும ஊழ்வலிபால் உயிர் ஒழியாதிருந்தலைக் கண்டு தலையை அறுத்திடத் துணிந்தனர்.

> கதியின்றி மலையேறிக் கனனின்று
> கடுவருந்தி
> மதியின்றி யுயிர்விடவே மட்டிலா
> வகைமுயன்றும்
> விதியின்றி வீந்திடுவார் விளம்பலரி
> தெவ்வுலகும்.
> பதியின்றி யுயிர்ப்புறினே பல்லுயிரு
> முயிராவோ.

ஆனாலும் உலகப்பற்றினால் உண்மையுணராமல் வசிட்டமாமுனிவர் தலையைத் தறிதிட அதற்குப் பொறுக்காமல் தந்தையாகிய அலரவன், சாத்தியர், கந்தருவர் முதலிய அமரர் குழாங்கள் அணைய ஆங்குசசென்று அவ்வாதணனை நோக்கி மைந்தர் மணியே! எல்லாமறிந்த எழிலுடைய புதல்வா!

> நான்முதலா மெவ்வுயிரு நம்பனவ னாணையினாற்
> பான்மையுற வியங்கியிடும் பரசுடையா னருளதுதான்
> மேன்மையுற வொன்றுதன் மீளவழிந் திடலென்றே
> வான்முதலா வறிந்ததென மலரவனே மொழிந்திட்டான்.

> கடனதனான் மனைமக்கள் கருதரிய திருவெல்லா
> மிடனுறவே யெஞ்ஞான்று மிசைவுறவே வளவாகும்
> கடனழியிற் கண்டளவுங் காணும லழிந்திடுமே
> மடவிலா ரிஃதறிவர் மதியுடையை துயரென்னே.

என்று கூறிய அலரவனுடைய அருமையான அருண்மொழியை அன்புடன் கேட்ட வசிட்டமாமுனிவர் தந்தையான மலரவன் மலரடி பணிந்து எந்தாய்! எனக்குப்பின் என் குலம் எச்சமின்றி அழிதல் தகுதியோ? யானுந் தக்கவனாவேனோ? தக்கார் தகவிலர் அவரவர் எச்சத்தாற் காணப்படுமென்றோ?

அதனால் மக்கட்பேற்றை வாய்ந்து குலக்கேடில்லாமை முறை மொழியொன்று அடியேனுக்கு அருளவேண்டும் என்று வணங்கி விண்ணப்பஞ் செய்திட்டனர்.

அது கேட்ட அயனார் கூறுவாராயினார்; அருமைப்புதல்வா! நின் புதல்வர் அனைவரும் ஊழ்வினையால் ஒழிந்தனர். அவர்க்கு ஒருபோதும் உய்வதில்லை. ஆனாலும் நின் மக்களுள் முதல் சத்தி என்பானுடைய மனையாள் கருவுற்றிருக்கின்றாள். நின் பேரன் உண்டாவான். விசுவாமித்திரனுடைய ஏவலால் நின் புதல்வர்கள் அனைவரையும் அரக்கனே அழித்தமையால் மீட்டும் அழிக்கவொட்டாமல் அக்கருவைக் காத்தல் நினது கடமையாம். அதனால் சண்பகக்காடென்னும் திருநாகேச்சுரத்தில் திங்களிற் சிறந்த கார்த்திகையில் நின் மனைவி, நின் மகன்மனை முதலிய சுற்றங்களோடு சென்று சான்றுபிள்ளையார், நந்திபெருமான், இவர்கள் விடைபெற்று கூசாதார் நெஞ்சே குடிகொண்ட நாகேச்சுரப்பெருமானை வழிபட்டு, சண்பகமரத்தை விதிப்படிப் போற்றி, குன்றமுலையம்மையையும், மலைக்குமரியையும், மங்கை பாகத்தலைவனையும் வணங்கிப்போற்றிப் புழுகுக்காப்புத் திருநாள், சந்தனத்திருநாள், மங்கைபாகத்தலைவருக்குப் பூத்திருநாள் செய்து ஞாயிறு தோன்றுங்காலையில் அத்திங்கள் நிறைவெய்தும் வரை கதிரவன் திருக்குளத்தில் மூழ்கி என்னால் தோற்றுவிக்கப்பட்ட திருநாளையும் விதிப்படிச் செய்து கருக்கொண்ட உன் மகன்மனைவியை மூழ்குவித்தால் விரைவில் நினக்குப் பேரன் உண்டாவான்.

விசுவாமித்திரர் சூட்சியும் விரைவில் விடுதலையாம். இதனை விரைந்தியற்றிடுக என்று விண்ணோர் முதல்வனான நான்முகன் நன்கு புகன்று வானோர் வாழ்த்திட மறைந்தனன்.

அந்த அருண்மொழிப்படியே வசிட்டமாமுனிவர் மனைவியார் மகன்மனைவியார் முதலியவர்களோடு திருநாகேச்சுரங் கருதிப் புறப்பட்டனரென்பது.

திருச்சிற்றம்பலம்.

36-வது வசிட்டருக் கலரவன் அருண்மொழி பகர்ந்த படலம் முற்றிற்று.

---

## 73-வது வசிட்டர் வழிபட்ட படலம்.

---

திருச்சிற்றம்பலம்.

கொங்குண் கருங்குழலி! நாகேச்சுரத்தலத்தில் வசிட்டர் வழிபட்ட வரலாற்றை வழங்குவன் கேட்பாயாக வென்று சூத சாய முதல்வர் முறையே கூறுவாராயினர்.

வசிட்டமாமுனிவர் வாழ்க்கைத் துணையான அருந்ததி, மகன்மனையாள், மாணவர்குழாங்கள் முதலியவர்களுடன் மகிழ்ச்சி பெரிதுற்றுச் சண்பகநகர் வந்தனர்.

ஆங்கு சோலை முதலிய தூநல்லிடங்களிலே பறவையொலி, மறையொலி, மிகுந்தெழுப் பல்லாயிரமிடங்களினின்று வந்து தங்கிய மைந்தர் பலர் நெருங்க மயிலாடலையும், குயில் கூவலையும், அன்ன நடப்பையும், அலரான செந்தாமரைகள் அலர்ந்து மணங்கமழ்வதையும், தடாகக்கரையின் தண்மையையும், அதனைச்சுற்றிய மரச்செறிவுகளினின்று ஒழுகாநின்ற நற்றேன் பெருக்கையும் அப்பெருக்கில் வீழும் வண்டொலியையுங் கண் குளிரக்கண்டு களியாட்டயரா நின்றனர்.

பின்னர் அம்முனிவர் நற்றவமிக்க சுற்றக் குழாங்களுடன் தந்தையாகிய மலரவன் வாய்மொழியை மனத்துக்கொண்டு திருநாகேச்சுரமென்னுந் திருக்கோயிலுட் சென்று இன்கரும்பின்றன்னுள்ளாகிருந்த தேறற்றெளியானசண்பகப்பெருமானைச் சிந்தித்து, சூலத்திருக்குளத்தையும் அதனைக்காக் குங்காவலாளரையும் வணங்கி வலஞ்செய்து, ஆங்குள்ள பெரியார் அருள் விடையும் பெற்று, மனத்தக்க மாண்புடையளான வடமீனொடு வடக்குநோக்கி இருந்து ஆழிப்புல் விரலில் அணிபெற அணிந்து அகத்தில் எண்ணியது இனிமைபெறக் கார்த்திகைத் திங்களில் மூழ்கிக் கதிரவன், பிரமன், தக்கன், அம்மையார், கணேசர், நந்தீசர், முதலியவர்களுக்கு அர்க்கியமன்புடனளித்து திருக்

கண்மணியுடன் திருநீற்றைப் பதினாறு இடங்களில் முப்பத்தி ரண்டு பூட்டின் முழுதும் முப்புண்டரமாகத்தரித்து வாய்பேசாது சண்பகமரத்தடியிலமர்ந்து அதன் எட்டுத் திசையிலும் எட்டுத்தேங்காயுடைத்து, எட்டு விளக்கிட்டு, எட்டிமா விளக்கேற்றி,

இறையவனுஞ் சிவபெருமா னுருவானும்
மாவரசே பிலகடேவாய்த்
தறைமுளைத்தாய் தலப்புகழைத் தருந்தேவே,
கலைப்போதாய் தழைக்குங்கொம்பா
மறைபெற்றாய் மறையங்கப் பழமுடையை
வெண்ணியதை வழங்குந்தேவே
பறையணிகள் முனியுடையை முக்குணனே,
ருடையாய்சண் பகமேபோற்றி.

என்று இவ்வாறு பன்னிரண்டு திருப்பேர்கள் சொல்லி வலங்கள்கொண்டு போற்றி எட்டுத்திசைகளிலும் வணங்கிஎட்டு நாகங்களுக்கு நீராட்டி, சந்தனம் சாத்தி, சர்க்கரைப் பால் சேர்த்தவெண்பாயசம் வைத்து வணங்கி வலம் வந்தனர்.

அதன் பின்னர் அவர் அம்மரத்தின் அடிநிழலில் அன்புட னிருந்து ஐந்தெழுத்து, முருகன் மறை ழுத்தபின்னோர் மறை ஓரெழுத்தாகிய வுண்மை மறை, முதலிய மந்திரங்களை முறைப் படி ஐயாயிரமாக ஓதி முடிவுறச்செய்து, பிறகு நண்பகலில் நீராடல் வணக்கம் முதலியன நன்கு செய்து எட்டு நாகங்களை யும் அப்போதும் முறைப்படி பூசித்து நந்திபெருமானருள் விடை நயமுறக் கொண்டு கான்றுபின்னையார்பால் விடை விருப் புடன் பெற்று செய்வதைச் சிந்தனை செய்து கொண்டு, மூவர்க்கு முதலாய முக்கட்பெருமானை சண்பகப் பெருமானுக்கு நீராட்டி அணியாடை யரியமாலைகளணிந்து நால்வகை இசைக் கருவிகளும் நன்கிசைத்திடப் போழுதும்தோன்றப் பதினாயிரம் விளக்கிட்டு, அளவிலா அமுதுவகை அறுஞ்சுவையமைந்த பாயச வகை, சிற்றுண்டி வகை முதலிய மகா நிவேதனஞ் செய்து வழிபட்டுத் துதிசெய்வாராயினர்.

உம்பரா லறிய வொண்ணு
வுண்மையாய் நின்ற கோவே
வம்பனே னறிவை யெல்லாம்
மயக்கிட மாயை வைத்தா
யெம்பெரு மானே யுன்ற
னின்னருள் மறக்கும் பேயேற்
கிம்பரே யுன்பா லன்பா
லின்புற வருள்செய் வாயே

எத்தனை கலைகள் கற்றே
னெத்துணை நுனித்திட் டாலு
மத்தவுன் னருளே யன்றி
யறிந்திடப் பெறுவ தில்லை
பித்தனேன் பிழைக ளெல்லாம்
பிழைத்திடப் பெருமை கொண்டாய்
முத்தனே யானே யெங்கண்
முக்கணன் மருந்தே போற்றி

நானென்ப தொன்று மின்றி
நாடக நடித்திட் டாயே
யூன்பெற நின்ற பேதை
யுறுசெயல் குறையு மாமோ
ஆன்பெற்ற வைந்து மாடு
மமரர்தங் கோவே யானாய்
வான்பெற்ற ரமுதை யுய்ய
வருநஞ்சை யுண்டாய் வாழ்க.

அம்முறையே மங்கைபாகத் தலைவரையும் அம்மையாரிரு வரையும் வசிட்டர் வழிபட்டனர். பின்னர் சபலையென்னுங் கடவுட் பசுவினுதவியால் சிவனடியார்களுக்கு அறுசுவையமுதூட்டி அவர்களை வணங்கியவர்களுக்குக்காணிக்கையுடன் வெற்றிலைப்பாக்கு விருப்புடனளித்து அவர்களால் வாழ்த்தும் பெற்றுப் பின்னர் எச்சமான அமுதையுண்டு களிப்பாராயினர்.

அம்முனிவர் பின்னர்க் கார்த்திகைத்திங்கள்முடிய இவ்வாறே நடாத்தித் தன்மகன்மனையாள் கருவைக்காக்கவேண்டி கோதுமை சேர்க்க பாயசத்தை நால்வேதங்களைகண்ட ஞானப் பொருளாகிய சண்பகப்பெருமான் திருமுன் வைத்துப் பதினாறு அந்தணர்களுக்குப் பூசிணிக்காய், வாழைப்பழம், முதலியவைகளைத் தன்மகன்மனையாள் கையாலேயே கொடுக்கச்செய்தனர். அக் கார்த்திகைத்திங்கள் திருவிழா ஒன்பதுநாளும் அவர் ஆயிரம் பெரியார்க்கு அமுதளிக்கும்போது எண்ணெய், உடை, காணிக்கை, ஆபரணம் அணிக்கச்செய்து அம்முறையே கடைஞாயிறில் கடைமுழுக்கையும் மிகச்சிறப்பாகக் கொண்டாடினர்.

இறைபுதல்வர்கள் மேற்கதிபெற மீட்டும் அத்திருக்குளத்தில் மூழ்கிப்பெரியார்களுக்குக் காணிக்கையுடன் வெற்றிலைப் பாக்கு விருப்புடன்தந்து தன்னுருவம் யாவர்க்கும் அறியவொண்ணா நிலையானவனான திருநாகேச்சுரப் பெருமானுக்கு, சித்திர மண்டபங்கள், பாகசாலைகள், கோபுரம், ஆவரணம் எல்லா விடங்களிலும் விளங்குற நூறாயிரந் திருவிளக்கிட்டு குழலொலி யாழொலி, கூத்தொலி, வேதவொலியொடு மாவழிபாடும் மகிழ்வுறப்புரிந்தனர்.

முடிவில் சிவவழிபாட்டின் பயனனைத்தையுங் குறிவிலாக் கொடியேனை அடியேனாகச் செய்தவனான கூத்துடையானுக்கே தந்து பன்முறை வணங்கி, வலஞ்செய்து பிரியாவிடைபெற்று மகன்மனையாள், மாணவர்குழாம், வாழ்க்கைத்துணையான அருந்ததி, கடவுட்பசு, எல்லோருந் தம்மைச்சூழத் தமது இருப்பிடமான இலைவீடணுகினர். சின்னாளில் ஒருவரும் ஈங்கு அறியா வண்ணம் என்னுள்ளத்துள்ளே ஒளித்து வைத்த இறையானான திருநாகேச்சுரப் பெருமான் திருவருளால் பேரனார் பிறந்திடக் கண்ணுற்று மகிழ்ந்து, பராசரரெனப்பலருமறியப்பெயரிட்டனர். இக்கதையைச் சொல்லுவோர்கேட்போர் எல்லோரும் எம்பெருமான்றிருவருள் பெற்றின்புறுவரென்பது.

திருச்சிற்றம்பலம்.

37-வது வசிட்டர் வழிபட்ட படலம் முற்றிற்று.

## 38வது
## சிவபுண்ணியத்திலியல்புரைத்த படலம்.

திருச்சிற்றம்பலம்.

மலையரையன் மகளுக்கு நெடியவனும், மலரவனும் தேடியுங் காணு நேருருவமுடைய சிவபெருமான் இந்நகரில் செய்யப்படும் சிவனறத்தினியல்பைத் திருவாய்மலர்ந் தருள்வாராயினர்.

புகழ்பெற்ற திருநாகேச்சுரத்தில் இறைவனைக் கருதிச் செய்யும் மெய்ம்மையறத்தின் பெருமை எவராலும் அளக்கொண்ணாதது. அந்நகரில் ஓர் சிவனறச்செயலைச் செய்வதாகச் செப்பினாலும், அவர்கள் முற்பிறவியிற் செய்ததீவினை முற்றும் தீர்ந்தொழிகின்றது. கைப்பொருளைக்கொண்டாவது பிறர் பால் ஏற்றாவது சிவபுண்ணியமான திருப்பணிகளை நடத்தவந்து, இருந்து, இயற்றுபவர், குபேரனுக்கு நண்பனாகின்ற சிவமாப் பெருவாழ்வைப் பெறுவார்கள். இந்நகரில் வந்து பிறர்க்கிட்டு வாழ்பவர் மறுமையில் அரசியல் பெறுகின்றார். இன்னும் தூயமனத்துடன் இந்நகரில் திருப்பணியான சிவனறஞ்செய்பவர் மறுபிறப்புற்றுத் தாய்முலையுண்ணார்.

அவ்வறஞ் செய்வதற்குப் பிறர்பால் பொருள் ஏற்கின்றவர்களை நகையாடுகின்றவர் அனைவரும் தன்றசையுண்ணும் அருநரகிற்காளாகின்றனர். சிவனறத்தைச் செப்பிப் பொருள்வாங்கித் தமக்குரிமை யாக்குகின்றவர்கள் பெருநரகப்பேறு பெறுகின்றனர். அவ்வறத்தைச் சொல்லிப் பொருள்வாங்கித் தம்மை அணிசெய்கின்றவர் மரத்தில் தொங்கும் பறவையாகின்றனர். சிவனறஞ் செய்கின்றவனை உரப்புவோர் ஐந்து பிறவிவரையில் கழுதையாகப் பிறந்தமர்வார். அவர்கள்பால் வெகுளிகொண்டவர் ஐந்து பிறவியில் புலியாய்ப் பிறப்பர்.

இனித் திருநாகேச்சுரத் திருத்தலத்தில் சிவனறஞ்செய்கின்றேனென்று பொருள் திரட்டி வேறொரு அறத்தை இயற்றுபவர் சிவன்பால் தீங்கிழைத்தவராவர். சிவனறத்தைச் செய்வேனென்று முயன்று அஃதியற்றுதுயிர்விட்டாலும் அவர்கள் சிவனுலகு பெறுகின்றனர்.

சிவனறஞ் செய்வேமென்று ஓரடிவைத்தவரும் தீவினை ஒழியப் பெறுகின்றனர். சிவனறஞ் செய்ய நகர்கள் சுற்றிப் பொருள் பெறுவான் போகின்றவர், பூமியை வலஞ்செய்த பேற்றை அடைகின்றார்.

சிவனறஞ் செய்பவனுப் பிறர் உணவு உண்ணாது சிவனறத்தின் இயல்பையுங் கேட்டுத் திலையாயினும் தனது பொருளை அவ்வறத்திற்கே ஆக்குகின்றவன் சிவனுலகிற் செல்வன்.

சிவனறம் புரிவோர் சிவனவன் பேரும்
செப்புவர் சிவகதை கேட்போர்
சிவவழி பாடு செய்பவர் வில்வந்
தெரிவுற வெடுப்பவர் பசுவி
னுவகையின் புல்லை யளிப்பவர் கிணற்றை
உஞற்றினர் பூவன நெறியை
நவமுற வியற்றி நீருணச் செய்வோர்
நம்பனு ரிணையடி சார்வார்.

திருநாகேச்சுரத்தில் சாதலும் பிறத்தலும் தவிர்த்தருளும் பெருமானுக்கு மேற்றுகள் விழாமல் மேற்கட்டியைக் கட்டிக் காப்பவர் சிவஞானமும், சிவன்பாலன்பும் பெற்றின்புறுவர். நாகேச்சுரப் பெருமானுக்குச் சிறப்புறக் குடை, ஆலவட்டம், எடுபிடி, வெண்சாமரம் முதலிய அணியுடைக் கருவிகளை அமைப்போர் எண்வகைத் திருவும் பெற்றின்புறுவர். மணி, சங்கம் முதலிய வாங்கி வைப்பவர் மறுமையில் அரசியல்பெறுவார். பால் அபிடேகஞ்செய்யப் பசுககள் வாங்கி இடுவோர் அப்பசுக் களின் உரோமம்எண்ணிக்கையளவு காலஞ் சிவனுலகு எய்திவாழ் வர். தூபதீபக் கருவிகள் வாங்கியளிப்பவர், பசுக்கொம்பு, மணிக் கொம்பு, வாங்கி வைப்பவர், பச்சிலைத்தோட்டம் வைப்பவர், மஞ்சம் இடப முதலிய ஊர்திவிமானங்கள் செய்பவர் மேன்மை யான பட்டாலியற்றிய விசிறி, ஆலவட்டம் முதலிய செய்து வைப்பவர், வாச்சியங்கள் செய்துவைப்பவர், விளக்கிட வேண் டத்தக்க பல கருவிகளைச் செய்துவைப்பவர், பூக்கள் எடுத்து

மாலைகட்டியிடுபவர், வெள்ளி, பொன், செப்பு மூன்றனுஞ் செய்த குடம்முதலிய கலங்கள் செய்து வைப்பவர் இன்னும் பதினாறு உபசாரத்திற்குரிய கலங்களெல்லாம் செய்துவைப்பவர், துறக்கம்பெற்றுப் பெருஞ்செல்வத்திற்குத் தலைவராவர். இந் நாகேச்சுரர் திருக்கோயிலைப்புதுக்கிடுவோர்மெய்ஞ்ஞானமுடைய ராய்ச் சிவத்தொண்டர் தலைவராவர். ஒரு காரணம்பற்றியாவது, திருக்கோயிலிலுள்ள புல்லைச் சிதைத்துச் செவ்வனே தூய்மை பெறச்செய்பவர் அளகையனுவர்.

ஒருகாலத்தில் ஒரு பார்ப்பனப் பெரியோன் தன் பசுக் களைப்பாதுகாக்கவேண்டி இக்கோயிலுள்ள புல்லை யறுத்தனன். அதனால் அவன் சிவனுலகடைவானுனன். இத்தலத்திற் செய்யப் படும் சிவனறத்திற்குண்டாகும் பயனைச் செப்பலரிதாகும்.

இனிச் சிவபுண்ணியத்தைத் தவலை செய்தாலும், செய்யத் தூண்டினும் வேறு காரணம்பற்றிச் செய்தாலும் செய்பவர்க் குதவி செய்தாலும் நினைத்த நலத்தை எய்தி இன்புறுவ ரென்பது.

திருச்சிற்றம்பலம்.

38வது சிவபுண்ணியத்தினியல்புரைத்த படலம் முற்றிற்று.

---

## 39வது திருத்தலத்திற் செய்த அறத்தின்றன்மை காட்டிய படலம்.

---

திருச்சிற்றம்பலம்.

அறம்வளர்த்த அம்மையார் புல்லைக் களைந்த மறையவன் யார்? அவன் எங்ஙனம் உய்ந்தான்? அவன் வரலாற்றை அடி யேனுக்கு அருளிச் செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்

செய்ய மீளாத ஆளென்னையுடையானாகிய சிவபிரான் திருப் புன்முறுவல் செய்து செப்பியருள்வாராயினர்.

சணபகச் சோலைக்கு நிருதிமூலையில் மகமுவனமமனபது ஒன்றுண்டு. அதனைக் கண்ணுற்றால் அளவில்லாத தீங்குகள் அழிந்தொழியும். எந்நலமுங் கைவரப் பெறலாம்.

அத் திருநகரில் கபிலரென்பார் எவ்வகைப்பட்ட மறைகள் யாவும் எளிதிலுணர்ந்து, எத்தலங்களின் இயல்பை யும் உள்குவாருள்ளத்திலுள்ளா னியல்பையும் ஒருங்கே கடைப் பிடித்து, உணர்ந்தவராதலின் அச்சிவபிரான் திருப்பெயரையே இடைவிடாது செப்பி அதையே சிந்தித்து அத்தவத்தால் மெய்ஞ்ஞானம் பெற்றுச்சிலையாற் புரமெரித்தார் திருவடிப்பேறு பெற்றனர்.

அத்தலத்தில் திருக்குளத்தின் மேல்கரையில் தக்கன் மகளாய்ப் பிறந்த எம்பெருமாட்டி அவ்வுடலை நீத்து, மலையரை யன் மகளாய்ப்பிறந்தபோது, திருமணம் பெற ஆயிரமாண்டும் அருந்தவம் புரிந்தனள். மின்காட்டுங்கொடிமருங்குலுமையாட்கு என்றும் விருப்பவனாகிய சிவபிரான் அந்த அருந்தவத்திற்கு அருள்புரிவான், அத்தடாகக்கரையில் வைகாசித் திங்கள் விசாக நாளில் கடகத்தில் கீழ்த்திசைமுகமாய்த் தோன்றிக் காட்சி தந்தருளினர். அச்சிவப்பெருங் காட்சியைச் செவ்வனே கண்ணுற்று, மலையரசியான அம்மையார் அங்கையால் அஞ்ச லித்து, வணங்கி, வழிபட்டு, அளவிலா ஆனந்தப்பெருங்கடலில் அழுந்தினர். இன்புருவாய அவ்விமயமகளைக் கடைக்கணித்து நல்லாய்! நின்வேண்டுகோளென்னை நீ தவஞ்செய்ய யான் நினக்குத் தோன்றினமையால் இத்தலம் சிவபுரமெனவும் இத் தீர்த்தம் சிவதீர்த்தமெனவும் பெயர்பெறுக. இனி இத்தலத் தில் என்னை எண்ணி ஒரு நொடிப்போதேனும் இருந்திடுவோர் என்னுடன் கலந்திடப்பெறுவர்.

சிவபுரமெனப்பட்ட இத்தலத்திலே (துர்விருத்தன்) தீயநெறி யனென்னும் மறையோன் ஒருவனிருந்தனன். அவன் மறையவ னாகஇருந்தும் மறையோதல் ஒழுக்கம் முதலியனவின்றி, தென்

புலத்தார்,தெய்வம் முதலியவிடங்களில் வழிபடல் சிறிதுமின்றி, ஐந்துபசுக்களை மேய்த்து அவற்றின் பால், தயிர், நெய் முதலிய வற்றைவிற்று, உண்டு, இல்லிருந்து, உயிர்வாழ்பவனுளன்,

அவன் வீட்டில் எவ்வகையருங் காலைமுதல் அரையிரவு வரையில் நெய் பாலன்றி வேறு எந்தப் பொருள்களையும் வாங் கிப்போகக் கூலவாணிபமுஞ் செய்வான்; நன்கு துயிலான்; நல் லுணவு உண்ணான்; நல்லுடையுடுத்திடான்; இவ்வகையால் பிறர்க்கு உதவி சிறிதும் இல்லான் பணம்பித்தே பெரிதும் பிடித்தவன். வைகறை முதல் மாலைவரை மாடுகளை மேய்ப் பான். ஆனால் திருநீறு ஒன்று பூசுவான். இவனுக்கு மக்கள் மூவருளர். அம்மக்களும் இவனைப்போன்ற இயல்புடையவர் களேயாவர். மனையாளை மனையிலிருந்து பால், நெய், தயிர் விற் கச் செய்வான். மக்களில் ஒருவனை நெல் சுட்டிவரச் செய்வன். ஒருவனைத் தனக்கு எழுத்தாளனாக்கினன். ஒருவனைத் தன் நிலுவை தண்டிடச் செய்வன். ஒவ்வொருநாளும் வைகறையில் தான் பாலைக்கறந்து வைத்துத் தயிரைக்கடைந்து போவான்.

பின்னர்ப் பலகையிலமர்ந்து, அன்றன்று பணவரவைப் பிழை யானமனத்துடன் ஆராய்ந்து அதைப்பொருளிருக்கையில் திரட்டி வைப்பான். நற்றினமாவது நாளுமறியான். மாடுகளுக்குப் புல்வேண்டிப் புதல்வர்களுடன் நீள்நடைச்சென்று,நான்குசுமைப் புல் கொடுவருவான். இதுவே இவன் செய்தொழில்; இங்ஙனம் நடப்பானாகிய இவன், ஒரு நாள் மாடுகளை மேய்த்துக்கட்டி முதல் மூன்று சுமைகளைப் புதல்வரிடம் அனுப்பி அது போதா தது உன்னி, மற்றொரு சுமைவேண்டிப் புதல்வர்களை விட்டுப் பிரிந்து தான்மட்டும் புல்லுக்கு வெகுதூரம் அலைந்து அலைந்து கடைசியில் திருநாகேச்சுரஞ் சென் றனன். ஆங்குத் திருக்கோயிலினுள்ளே புகுந்து மூன்றா வது திருமுற்றத்தில் திருமஞ்சனநீர் விழும் முகவாயிலுக்கு நேரே புல்லிருக்கக் கண்டு களிப்புற்று, வேணவாவோடு ஒரு பிடிப் புல்லைப் பறித்தனன். அது நோக்கிய தக்ககன் அவனைத் தீண்டினன். தீண்டவே அவனும் இறந்தனன். அதுபோதே கூற்றுவன் றூதர் சூலம், உலக்கை, கயிறு முதலிய கைக்கருவி

களுடன வந்து இவனைக் கட்டி இழுக்கையில் சிவகணத்தினர் வந்து, அவர்கள் அனைவரையும் அடித்து ஒதுக்கிக் கட்டவிழ்த்து வலவனைவா வானவூர்தியில் ஏற்றிச் செல்லத் தொடங்கின. அதுபோழ்து இயமத்தொண்டர் சிவத்தொண்டர்களை நோக்கி வணங்கிச் சிவத்தொண்டர்காள்! தோற்றமுதல் இறுதிவரை மறத்தையே புரிந்த மடவோனை நீவிர் நொடித்தான் மலைக்குக் கொண்டுபோவதென்னை? கூறுவீராகவென்று வினவ, அச்சிவத் தொண்டர் கூறுவாராயினர். இயமத் தொண்டர்காள், இம்மறையவனானவன் முன்னர்ப் பாவியேயாயினும் மிக நுண்ணியதான அறமொன்று இயற்றினன். அதனால் இவனை எங்கள் நொடித்தான் மலைக்குக் கொண்டு செல்லுகின்றோம் என்றனர் அதுகேட்ட இயமதூதர்கள், அவ்வந்தணனை என்ன நுண்ணிய றமியற்றினன்? அதனை எங்களுக்கு இயம்புதல் வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்யக்கேட்ட அன்புடைத்தொண்டர் அவர்களை நோக்கி, தூதர்காள்! யாம் கூறுவதை அன்புடன் கேட்பீராக! அவன் பிறந்த நாட்டொடங்கிய பாவியேயாயினும் சண்பகப்பெருமானுடைய இருந்திருக்கோயிலில் மூன்றாவது ஆவரணம்வரை வந்து, புல்லைப்பறித்தனன். இருந்தகோயிலில் சிவபுண்ணியத்தை ஒரு சிறிதேனும் எவன் செய்கின்றனனோ, அவன் சிவனே ஆகிறான். இதில் ஐயுறவொன்றுமில்லை; எல்லா நலங்களையும் எய்துவன்.

பொய்கொலை களவி னோடு
பொருந்திய குருவி னில்லாள்
மெய்யுற வின்ப முற்று
மிகுமறம் புரிவா னேனு
மெய்தருஞ் சிவனார் கோயி
லிருந்திட வதனைக் களைடே
யையவோ ரறத்தைச் செய்பி
னவன்சிவ னாவ னம்மா.

கோயிலில் புல்லைப் பறித்தவன் மேருமலையளவான பொன்னைத் தானஞ்செய்த பலனை அடைவான். இவனோ பசுவின் பால் விற்கப் புல்லைப் பறித்தவனாயினும் அக்கோயிலில் புல்

லழிந்த அறத்தால் இவனை மீண்டுவாராநெறியருள் புரிபவன்மலை
யிற் சேர்க்கின்றோம் என்று கூறி நொடித்தான் மலையில் அவ
னைக்கொண்டு சேர்த்தனர். அதைக்கேட்ட இயமதூதர் மகிழ்ந்து
மீண்டு கூற்றுவனுலைசைஉற்றனரென்பது. சிவபுண்ணிய பலத்தை
அறிகின்றவர், அதனை நம்பிச் செய்கின்றவர் சிவபிரான்
திருவருட்பேற்றைப் பெற்றின்புறுவரென்பது.

திருச்சிற்றம்பலம்.
39வது திருத்தலத்திற்செய்த
அறத்தின் தன்மை காட்டிய படலம் முற்றிற்று.

---

## 40வது
## சூலத்திருக்குளச் சிறப்புரைத்த படலம்.

---

திருச்சிற்றம்பலம்.

எல்லாவுலகுமான எழிற்பெருமான் இமயமலையரையன் பாவையை நோக்கிச் சூலத்திருக்குளச் சிறப்பு உரைத்தருள்வா ராயினர்

சூலத்திருக்குளத்தை நினைத்தாலும், தீண்டினாலும், கண்டாலும், எத்துணைப்பாவமும், எளிதின் இரிந்திடும். அதனில் மூழ்கி அதனை உழுந்தளவாக எடுத்து ஆசமனஞ்செய்தால் பெரும்பாவங்களினின்றும் விடுதலை பெறுகின்றான்.

ஒருமுறை தொட்டால், பதினாயிரம் பௌண்டரீகஞ் செய்த பலனும்,.;ஒருமுறை வணங்கினால், பதினாயிரம் குதிரை வேள்வி செய்தபயனும், ஞாயிறு தோற்றத்தில் மூழ்குவோன் ஈசன்றன்மையையுமுடைவன்; மூழ்கின பின்னர் அப்புனிதநீரை உண்பவன் உடலிலுண்டான பாவமும் தன் சுற்றத்தார் செய்த பாவமும், நீங்கப்பெறுவன். கார்த்திகைத் திங்கள் முற்றும் விதிப்படி மூழ்குவோன் சிவத்தன்மை பெறுவன். மறுபிறப் படையான். கார்த்திகை முதல் ஞாயிறில் மூழ்குவோன் மூன்று

பிறப்பிற் செய்த பாவமும் மூன்றாவதில் மூழ்கினால் ஏழாது பிறப்பிற் செய்த பாவமும் நாலாவதில் பத்துப் பிறவியிற் செய்த பாவமும் கடைஞாயிறில் மூழ்கினால் கோடிபிறவியிற் செய்த பாவமும் நீங்கப்பெறுவான்.

அதற்காக ஓரடி எடுத்து வைப்பவன் பதினாயிர இராசசூய வேள்வி இயற்றிய பயன் பெறுவன். கார்த்திகைத் திருவிழா நிறைவெய்துகின்ற காலத்தில் அத்திரத்தேவரோடு மூழ்கினால், மூன்றுகோடி குலத்திற்பிறந்தாரை உய்விக்கச்செயவான். சூரிய பதத்தை விரும்பினோர் முதல் ஞாயிறிலும், திங்கள் பதவியை விரும்பினோர் இரண்டாவதிலும், அலரவன் பதவியைப் பெற நின்றவர் மூன்றாவதிலும், திருமால் பதவியை விரும்பினோர் நாலாவதிலும், திரு முதலிய எல்லாவற்றோடும் இறைவனை அடையவேணடில் கடை ஞாயிறிலும் மூழ்கக் கடவர்கள்.

இனிக் கார்த்திகைத் திங்களில் கார்த்திகை நாளில் முழுகினால் கோடி வேளவிப் பயன் முற்றுமடைந்து இறைமை யைப் பெறுவன். அத் திங்களில் முதல் திங்கட் கிழமையில் அரசனும் இரண்டாவது திங்கட்கிழமையில எவ்வகை வேள் விப் பயனையும் பெற்றுத் துறக்கம் புகுவான். மூன்றாவதில் பொற்றானப் பயனை அடைவதோடு கோடி வேள்விப் பயனையும், நாலாவதில் ஏழுலகுக்கும் எழிலரசாய் ஈசனுருவையும், ஐந்தா வதில் கோடி குலத்திலுள்ள பிதிரர்களை மேற்கதி செலுத்தித் தானுங் கையிலையைப் பெறுவன். மாசியில் மூழ்கினால் பெரும் பாவம் அறும். ஆவணித் திங்கள் அமாவாசையில் செய்ந்நன்றி மறந்த மறத்தின் நீங்குவன். தை மாதப்பிறப்பில் மாபாவ நீங் கித் தூயனாவன். மாசியில் அமாவாசையில் மூழ்கினால் பிரமஉலகு பெற்றுய்வன். மாசிப் பௌர்ணமியில் கதிரவன், திங்களாகிய இருவர்களையும் இராகு கேது தீண்டுங்காலம், அயனம், வியதி பாதம், சிவனிரவு, பிரதோடம் முதலிய புண்ணிய நன்னாளில் மூழ்கினால் சூரியவுலகடைந்து இன்புறுவன்.

இனிச் சிறிது அதில் மூழ்கும் விதியும் கூறப்படும். அதில் மூழ்குவோர் முதலில் அக்குளத்தைக் காக்கும் காவலாளர்களி டம் விடைபெற்றுக் கொண்டு, மூழ்கிப் பிறர்க்கு இயன்றன

கொடுத்து என் சிந்தையுள் ஊற்றூறா உண்ணாமுதாகிய திருநாகேச்சுரப் பெருமானையும், சண்பகமரத்தையும், அம்மையாரிருவரையும், மங்கைபாகத்தலைவரையும், நந்திபெருமானையும், சான்றுபிள்ளையாரையும், தக்கனையும், அன்புடன் கண்ணுற்று அகமகிழ்ந்து வாழ்த்தல் வேண்டும். பின்னர்ச் சண்பகமரத்தடி போந்து ஐந்தெழுத்தோதி அதைதனில்வத்தால் பூசித்தல் வேண்டும்.

இனி உடற்பிணிகள் நீங்கவேண்டினோர் வைகாசித் திங்களில் அமரபக்கத்தில் துவாதசியில் எல்லா ஞாயிறுகளிலும் மூழ்கினால் அவை முற்றும் நீங்கப்பெறுவன்; திருவையும் பெறுவன்; அதன் விதியுங் கூறப்படும். அவ்வாறு மூழ்குவோன் மூழ்கு முன்னர் மூன்று முறை ஆசமனஞ் செய்து மும்முறை வலம் வந்து, மும்முறை வணங்கி, எண்டிசைகளிலும் எட்டு நாகங்களுக்கும் வணக்கஞ் செய்து, அவர்கள் விடைபெற்றுக் கொண்டு மூழ்கல் வேண்டும். அதன் பின்னர் இக்குளக்கரையிலுள்ள முனிவர்களையும், அதன் தேவர்களையும், அம்மையாரிருவரையும், மங்கைபாகத்தலைவரையும், சண்பகமரத்தையும், சிந்தித்து வணங்கி, அர்க்கியங்கொடுத்து, உடை உடுத்தித் திருநீறு, திருக்கண்மணி, முறைப்படியே பூண்டு, காராம்பசு, வெண்பட்டு, கம்பளம், நெய், பழங்கள், தாம்பூலம், கற்பகமரம், தயிர், கோதுமைப் பாயசம். எள்ளுருண்டை, மாவுருண்டை, முத்து, பவழம் முதலியன தானஞ்செய்து சண்பகமரத்தடி போந்து ஐந்தெழுத்தோதி எட்டுமா விளக்கேற்றி மாநிவேதனஞ் செய்து நாகேச்சுரரையும் மங்கைபாகத்தலைவரையும் அம்மையாரிருவரையும் சான்று கணபதியையும் முறைப்படி வழிபட்டுச் சிவத்தொண்டர்களுக்கு அன்னமிட்டுக் கடை ஞாயிறில் செய்தனவெல்லாம் நாகேச்சுரப்பெருமானுக்கே ஏற்பித்து, வணங்கினால் எல்லாப் பாவங்களினின்றும் நீங்கி இறைவன் திருவடிப் பேற்றையும் பெறுவன். இதனைச் சொல்லுவார் கேட்பார் திருவெலாம் பெற்று எம்பெருமான் திருவடிப் பேற்றையும் பெற்றின்புறுவரென்பது.

திருச்சிற்றம்பலம்.

40வது சூலத்திருக்குளச் சிறப்புரைத்த படலம் முற்றிற்று.

# 41-வது புறவின் பேறுரைத்த படலம்.

திருச்சிற்றம்பலம்.

மூத்தவலகுயுலகுக்கு முந்தினவனுன் சிவபெருமான் மலை ---ன் மகளை நோக்கி மாதே! ஞூலத்திருக்குளத்தின் சிறப்பு மிகச்சிறந்தது என்பதை இன்னும் உனக்கு அறிவிக்கிறேன் என்று உரைத்தருள்வாராயினர்.

அப் புனிதநீரைப் பறவைக்கூட்டமும் தொட்டவளவில் மேற்கதி பெற்றன. முற்காலத்திலே புறவு ஒன்று கார்த்திகைத் திங்கள் கடைஞாயிறில் கதிர் படுங்காலையில் அக்குளத்தில் விழுந்தது. அதுபோது அது மேற்கதி பெற்ற வரலாறு கூறுவனாம்.

முன்னொரு காலத்தில் காம்போச நகரத்தில் கண்ணுவர் கோத்திரத்தில் தோன்றிய மறையவன் ஒருவன் இருந்தனன். அவன் வேதம், ஆகமம், அங்கங்கள், கலைகள் முதலிய நூற்கள் முற்றும் பயின்றவன்; மந்திரம், யந்திரம் பயின்றவன்; சிவ தருமங்கள், சிவபூசை செவ்வனே செய்பவன்; பிறரிடத்துத் தொண்டுசெய்து உண்டு வாழ்பவன்; அவனுக்குச் சிவயோகி என்று பெயர் கூறுவர். அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் முதலியவர்களுடைய வீட்டிற் சென்று சிற்றூர்களிலும், பேரூர் களிலும், தோட்டங்களிலும், உடல் வருந்த உழைத்து உண்பவன். திருநீறு திருக்கண்மணிகளைப் பூண்டு எல்லாரும் தன் போல் மந்திரங்களைப் பயின்றிடப் பயிற்றிடுவன்.

இவ்வாறு நடக்கின்ற சிவயோகி என்பானுக்கு முன்செய்த வினையால் ஓர் நினைவு உண்டாயிற்று. அஃதாவது:— பொருளாசையால் செய்யாத சிவனறங்களைச்செய்ததாகவிலைப்படுத்திப் பணஞ்சேர்க்க எண்ணி ஓர் வேளாளன் வீடு சென்று அவனை நோக்கிப் பிள்ளாய்! இந்தத் தைத்திங்களில் கதிர் படுகாலையில் தூய்மையாக எழுந்து அன்புடன் தூய்மையான வில்வங்கொண்டு இறைவனை வழிபட்டால் அவன் ஐந்து பெரும்பாவமியற்றினவை

னாயினும், ஒரு கணப்போதேஅவை நீங்கித் தூய்மையுடையவனா வான்.

இன்னும் இழிந்த தொழில், தந்தையை நிந்தித்தல்; உண் ணத்தகாத இடத்திலுண்டல், பூணூல் முதலியவற்றை விற்றல், சிவன்பால் தீங்கிழைத்தல், தனக்குரியளல்லாத மாதர்களது தோளைக்கூடல், பிறர்க்குத் தீங்கிழைத்துப் பிறரால் இகழப் படுதல், முதலிய குற்றங்களையுடையனாயினும் அவைமுற்றும் நீங்கப்பெற்றுத் தூயனாகின்றான். ஒருவன் தைத்திங்கட் பிறப் பில் மூழ்கி, வில்வத்தால் சிவபிரானை வழிபடச் சிவலிங்கம், வீடு, பூமி, கன்னி முதலியவற்றோடு துலாப்புருடதானமுஞ் செய்த பலனை அடைந்து சிவத்தன்மையையும் அடைவன்; ஆதலால் மாசித்திங்களில் சிவனிரவில் மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றிலும் தூயனாய், அளவில்லாத வில்வ வழிபாடு செய்த அறம் என்னிடம் இருப்பதால், அதை நீ பெறுவாயானால். உனக்கு நன்மையுண்டாமென்று சொல்லி அவன் கையில் நீரை விடுத்தான். அவன் அதனை வெறுப்புடன் ஏற்று அம்மறைய வனை நோக்கிக் கூறுவானாயினன். மறையோய்! என்மனைவியோ நற்குண நற்செய லுடையளல்லள்; யானும் பொருளுடையவ னல்லன்; இப்பயன் எப்படி என்னை அடையும் என்றனன். அப் போது அவன் மனையாளும் அம்மறையவனை வீட்டை விட்ட கலுக வென்று, பன்முறை கூறியும், பொருளாசையால் அம் மறையவன் அவ்வில்லத்தை விட்டகன்றிலன். பின்னர் அவ் வேளாளன் குறிப்பால் அவனை வெளியில் அழைத்து வந்து, மந்தணமாகக் கூறுவானாயினன்.

மறையோய்! என் மனையில் இதுபோது நெல் முதலிய பொருள்கள் எதுவுமில்லையாயினும் என் வாழ்க்கைத் துணை யாள் ஓரணுவளவேனும் பிறர்க்கீந்திடத் துணியாள்; ஆகலால் என்பால் தயையுற்று நுமது இல்லிற்கு ஏகுவீர்; யான் மாலைப் போது எதுவாயினும் கொண்டுவருவனென்றனன். அதுகேட்ட அம்மறையவன், தனது வீட்டகத்திற் சென்று மறுநாட் காலை யில் மீட்டும் அவ்வேளாளன் இருப்பிடம் வந்தனன்; ஆங்கு வேளாளனை நோக்கி நீ நேற்று மாலையே வருகிறேன் என்று

கூறினாய்! இன்று இன்னும் வந்திலாய்! நின் வாய்மொழி பொய்த்ததேதென்ன? அதற்கு அவன் மிகவும் அஞ்சி அஞ்சலித்து என் பிழையைப் பொறுத்தருள்க; என்பால் ஒருபொருளும் எய்தாமையால் வந்திலேன் என்று வணங்கினன்.

அதுகேட்ட அவன் மனையாள் ஆங்கு விரைந்துவந்து மனையோய்! என் கொழுநனிடம் யாதுகொண்டனை! கொழுநனை நோக்கி இம்மறையனுக்கு யாது வழங்கினை என்று உதடுதுடிக்கக் கொடுஞ்சொலுரைத்துப் பல்லைக் கடித்துப்பயமுறுத்தினள். அதுபோது அவ்வேளாளன் பார்ப்பனப்பெரியோனை முதனாள் மொழிந்தபடியே மொழிந்து அவனகத்துக்கு அணுகச்செய்தனன். அம்முறையே அடுத்தநாளும் அவ்வேளாளன் போகாமையால் அவன் மனைவியில்லாச்சமயம் அறிந்து, அவனகத்திற்குச் சென்றனன். வேளாளன் அம்மறையவன்பால் பிழை பொறுக்கக் கேட்டுக்கொண்டு இரண்டு மரக்காலுள்ள நெல்லைக் கொடுத்தனன். அதைப் பெற்று மறையவன் செல்லும்போதே வழியிலேயே சோமவாரநோன்பு, சிவனிரவுநோன்பு, முதலிய நோன்புகளான அறங்களை விற்று ஆடைஅணி முதலியவற்றைப் பெற்றுத் தனதகம் போந்து துயில்வானாயினன். இவ்வாறே தான் செய்யாத அறங்களைச் செய்ததாகச் சொல்லி வஞ்சகஞ் செய்து பலரிடமும் பொருள் கொண்டு திரிந்த பாவியான மறையோன் ஓர் அரவந் தீண்ட மாய்ந்தனன். அவனைக் காலதூதர் கடுமையிற் கொண்டு பலகருவிகளாலும் வருத்தி ஐந்துநூறாயிரம் ஆண்டு இரௌரவாதி நரகிற்றள்ளித் துயருழக்க விடுத்தனர். அவன் செய்த மறத்திற்குரிய அவ்வெல்லை கடந்திட மீண்டு பூவுலகில் ஐந்து பிறவியில் நாயாயும், மூன்றில் வானம்பாடியாயும், ஐந்தில் பூனையாயும், மூன்றில் புறாவாயும் பிறந்தனன.

வித்தக னாகு மீசன் விழையறஞ் சிறிது தானு
நீத்தழு நெறியிற் சேரா நிலையுடைப் பிறவி யெல்லா
மெத்தனை வரினு நீங்கா திணைந்திடத் தூய்மை யந்த
வுத்தம னருளிற் சார்ந்து முறுவலி யுடைய தன்றே

அப்புறு ஓர் சிறிது சிவபுண்ணியத்தால் இறைவனுக்குப் பெரிதும் விருப்பமான சண்பகவனம் என்னுஞ் சிவத்தலத்தில் கதிரவன் திருக்குளக்கரையில் ஓர் கூவிளமரத்தில் தங்கிற்று.

அப்புறுக் கதிரவன் திருக்குளக்கரையில் கூவிளமரத்தின் மீது தங்கிய அமயம், கார்த்திகைத் திங்களின் கடைஞாயிறில் திருவிழா நிறைவெய்தச் செய்யும் புனிதநீர் கொண்டாட்டமும் வந்தது. அப்போது அப்புறு தன்னை ஒரு பருந்து உண்ண நினைத்து வரக்கண்டு ஓடிற்று. அதைத் துரத்திச் சென்ற பருந்து அதனைப்பற்றியடித்திட அதனால் அடியுண்ட புறு மயங்கி அத்திருக்குளத்தில் விழுந்தது. அப்புனிதநீர் வழங்கியருள எழுந்தருளிவந்து என்பொடு கொம்பொடு ஆமை இவை மார்பிலங்க எருதேறி உமையுடனே நின்ற சண்பகப்பெருமான் திருமுன் அத்திரத்தேவர் மூழ்கும்போது அமரர், முனிவர் முதலியவர்களால் துதிக்கப்பெற்றதும், எய்தினோர் எண்ணியதை எளிதில் அளிக்குமியல்புற்றதுமான அக் குளத்தில் அழுந்தினமையால், கற்றார்க்குங்கல்லார்க்கும் எல்லார்க்கும் இன்னருள் அளிக்குஞ் சிவபிரான் அருள் கிடைத்திட அப் புறு வடிவம் மாறித் தேவவுருவினைப் பெற்று இன்னருள் தந்த இன்பப்பெருமானை நாகேசப்பெருமானை வணங்கி வலவனேவா வானவூர்தி பெற்று நொடித்தான் மலை சென்று இன்புற்றது.

திருச்சிற்றம்பலம்.

41-வது புறுவின் பேறுரைத்த படலம் முற்றிற்று.

---

## 42வது

## புறுவைத் துரத்திய பருந்து பேறு பெற்ற படலம்.

திருச்சிற்றம்பலம்.

முற்றும் நமையாளுடைய முக்கண் முதல்வனான சிவபிரான் கிளிமொழிக்கு சூலத்திருக்குளத்தின் மூழ்கிய புறுவின் பெரும்பேற்றைக் கிளந்தருளுவாராயினர்.

இனி அப்பருந்து முற்பிறப்பில் குருவினுக்கிழைத்த குற்றத்தால் காம்பிலிய நகரத்தில் மறையவர் குலத்தில் காசிபர் கோத்திரத்திற் பிறந்தது. அவ்வாறு பிறந்த மறையவன் எல்லாக் கலைகளையும் இனிதே ஓதினவனாயினும் எஞ்ஞான்றும் உண்ணத் தகாதவைகளை யுண்டும், செய்யத் தகாதவைகளைச் செய்தும் பொய்ந்நூல்களை மெய்ந்நூல்களென்று துணிந்துமிருந்தனன்.

அப்போது ஒரு மாமுனிவர் வேள்வி இயற்றப் பொருள் வேண்டிக் காம்பிலிய நகரத்தில் ஒரு செல்வனிடஞ் சென்று இரந்து வேண்டினர். அம்முனிவரை இம்மறையவன் தனியே அழைத்து, நீ வாங்கும் பொருளில் எனக்கு அரைப்பாகம் அளிப்பாயானால் என் நண்பனை இச்செல்வன் நினக்குவேண்டும் பொருளை விரும்பி ஈந்திடச்செய்வேனென்றனன். அதற்கு அம்முனிவர் வேள்விக்குவேண்டிய பொருளை நினக்களித்தால் நினக்கும் எனக்கும்பாவம் வந்திடுமென்று கூற அது கேட்ட அம்மறையவன்வெகுண்டு அவரை இழித்துரைத்துச் செல்வனையும் பொருள் கொடாவண்ணஞ் செய்தனன்.

உன்னிய பொருளை வேண்டி யொருவன்பா லிரப்போற் கீயத்
தன்னினு மியலா தேனுந் தகைந்திட நிற்பா னாயின்
மன்னுதன் குலமு மாய மாய்விலா நரகிற் சென்றும்
பின்னுமே பிணத்தைத் தின்னும் பருந்தெனப் பிறப்பனென்பார்

அப் பெருங் குற்றத்தால் பிணத்தினைத் தின்னும் பருந்தாய்ப் பிறந்தனன்; அப்பருந்து சிறிது சிவபுண்ணியத்தால் இறைச்சி தேடி இந்தத் திருநாகேச்சுரத் தலம் வந்தது. இப்பறவை இதற்கு முன் ஏழாவது பிறப்பில் மறையவனாகப்பிறந்தது; அம்மறையவன் சிவனூர் திருக்கோயிலில் ஒரு கணிகையின்பாற் பேசிட அங்குள்ள திருவிளக்கைத் தூண்டினன்; அன்றிரவு கார்த்திகைத்திங்களில் அம்புலிவாரமானதால் அஃதே சிவனறமாயிற்று அவ்வறப்பயனால் அப்பிராமணனான பருந்து இந்த நாகேச்சுரத்தலத்தில் கதிரவன் திருக்குளத்தில் கார்த்திகைத் திங்கள் கடைஞாயிறில் திருவிழா நிறைவெய்தச் செய்யும், புனித நீராட்டக் கொண்டாட்டத்தில் மூழ்குகின்றவர்களையும், அத்திருக்குள நீரையும், அங்கு எழுந்தருளிய சண்பகப் பெருமா

னையும் கண்ணுற்றுக் களித்த பயனால் பருந்தின் பிறவியைக் கழித்துச் சிவபெருமான் திருவருட்பேற்றைப் பெற்றது.

இனிக் கீழ்த்திசையில் கண்ணுவ தீர்த்தமும், அக்கினி மூலையில் அக்கினிதீர்த்தமும், தெற்கில் பராசரதீர்த்தமும், நிருதியில் கௌதமதீர்த்தமும், மேற்கில், பிரமதீர்த்தமும், காற்றின்மூலையில் பிருகுதீர்த்தமும், வடக்கில் சந்திரதீர்த்தமும், ஈசானத்தில் வசிட்டதீர்த்தமும், ஆகிய எண்வகைப்பட்ட புனித நீர்நிலைகள் முற்றும் இக்கதிரவன் திருக்குளத்திலேயேஉள்ளன.

இன்னும் தேவர், முனிவர், அசுரர் முதலியவர்களால் வழிபடப்பெற்றதும், இறைவனுக்கே இனியதும், எண்வகைத் திரு, அன்பு, அறிவு, ஆசையின்மை முதலிய எல்லா நலங்களேயும் அளிக்கத்தக்கதும் இம்மை மறுமை வீட்டையும் எளிதில் எய்துவிப்பதும் எண்வகையான நாகங்களால் காக்கப்பட்டதுமான இக்குளத்தின் மேல் கரையில் கதிரவனால் நியமிக்கப்பட்ட வில்வமரத்தை யாராயினும் ஒருமுறையே கண்ணுற்றுக் களிப்பரேல் அவர்கள் சிவபிரான் திருவடிப்பேற்றிற்கு உரியவராவர்.

இத் திருக்குளஞ் சிவபிரானது சூலத்தால் தோற்றினபடியால் சூலத்திருக்குளமெனவும்,தக்ககனால் காக்கப்பட்டமையால் தக்ககன் தீர்த்தமெனவும், கதிரவனால் கொண்டாடப்பட்டமையால் சூரியதீர்த்தமெனவும்,மூன்றுலகத்தும் புகழ்பெறுகின்றது.

இன்னுங் கதிரவன் திருக்குளத்திலேயே ஒருமுறை மூழ்கினுலே காமம் வெகுளி மயக்கமுடைமை, குரு, அரசன், பெரியார், நண்பர், முதலியவர்பாலிழைத்த குற்றம் செய்ந்நன்றிமறத்தல், நோன்புவிடல், சிவவேடம் மறை இவற்றின் நிந்தனை, மெய்யைப்பொய்யெனல், அடங்காமை, வில்வமரம்வெட்டல், உண்பார்க்கு வஞ்சனை, நம்பினோரைக் கெடுத்தல், கோட்சொல்லல், உண்ணுவுணவுண்டல், பூந்தோட்டஞ் சிதைத்தல், ஓடை கிணறு தூர்த்தல் முதலிய பெரும்பாவங்களனைத்தும் நீங்கித் தூயராகின்றார்கள்.

வைகாசித் திங்கள் சுக்கிலபக்கம் பௌர்ணமியில் மூழ்கினவர் பாவம் அவர் உரோமத்துவாரத்தால் ஒழிகின்றது அத்திங்

கள் விசாகநாளில் புனிதநீர்கொண்டாட்டத் திருநாளில் மூழ்கினால் கோடிகுலத்தின் முன்னோர்களை மேற்கதி பெறச் செய்து தானும் மேற்கதி பெறுவார். இப்பிறவியினும் இதற்கு முன்னூறு பிறவிகளிலும் செய்த பாபங்கள் அனைத்தும் அகலப்பெறும். மார்கழித்திங்கள் திருவாதிரையில் மூழ்கினால் கோடி கோதானஞ் செய்த புண்ணியமும் ஆயிரங் குதிரைவேள்விப் பலத்தையும் அடையலாம். சிவனிரவில் மூழ்கினால் எல்லாத் தானப் பலன்களின் மேலான பலனடைவார்கள். இக் கதிரவன் திருக்குளப் புனிதநீரைக் கண்டவளவிலேயே வற்கடத்தில் உணவு இட்டபலனை எய்துவர்.

பாவமாகிய காட்டிற்கு நெருப்புப் போன்றும் இன்பத்தை எளிதில் அளிக்கும் இத்திருக்குளப் பெருமையைக் கேட்டவர் சொன்னவரெல்லாரும் புதல்வர்ப்பேறு முதலிய எல்லாப் பேறுகளனைத்தும் பெற்று இன்புறுவரென்பது.

திருச்சிற்றம்பலம்.

42-வது புறுவைத்துராத்திய பருந்து பேறுபெற்ற படலம் முற்றிற்று.

---

## 43வது பல திருக்குளச் சிறப்புரைத்த படலம்.

---

திருச்சிற்றம்பலம்.

எவையுநீர் எள்ளுநெண்ணெயும்போல் நின்ற வெந்தையான சிவபிரான் மலையான் மகளை நோக்கி இந்திரத்திருக்குளத்தின் இனிய வரலாற்றை முதலில் இயம்பியருள்வாராயினர்.

ஒருவர் இந்திரப் புனிதநீர்நிலையைக் கண்ணுற்றபோதே அவர் கூடத்தகாத புணர்ச்சியாலுளதாகும் பாவமும் ஒழிபவே, புதல்வர்ப்பேறு, திரு, புகழ், ஞானம் முதலிய பேறுகளை அடைகின்றனர்; ஐயமில்லை. இது நாகேசப்பெருமானுக்கும் இயமதீர்த்தத்திற்கும் வாயுமூலையிலுள்ளது.

இந்திரன், கந்தருவர் முதலிய தேவர்களோடு தன்னுடல் தோற்றமாற மகிழமரத்தடியிலிருந்து தவம் புரிந்து தன் பெயரால் இத்திருக்குளஞ் செய்து மூன்று காலத்தும் மூழ்கிக் கடல் நஞ்சை யமுதாக்குங் கறைக்கண்டனான சிவபிரான் திருவருளால் நறுநாற்றம்பெற்றுப் போகும்போது இத்திருக்குளத்திற்கு அளவிலாத சிறப்புக்களை அளித்தனன். அன்புடன் இதில் மூழ்குகின்றவர்களனைவரும் எண்ணிய பலனைப் பெற்று இறைவன் திருவடித்தொண்டு புரிபவராவரென்று வரமளித்துஞ் சென்றனன். இதனால் இதற்கு இந்திரதீர்த்தமெனப் பெயருளதாயிற்று.

இதில் சுக்கிலபக்கப் பஞ்சமியில் இந்திரனைக் கருதி மூழ்கி மகிழமரத்தடியில் முருகப்பெருமான் மந்திரத்தை யோதி, தீர்த்த தேவரான இந்திரனையும் மங்கைபாகத் தலைவர், கண்ணுவர், வாயு முதலிய காவலாளர்களையும் துதித்து கன்னிதான முதலியவற்றைச் செய்தால் எண்ணியதும் பெற்றுக் குபேரசெல்வத்தை அடைகின்றனர்.

இனி மலைமுலையம்மைபார்க்கு அண்மையில் ஈசான திசையில் மலைக்குமரியாலுண்டாக்கப்பட்ட குமரித்தீர்த்தமுளது. அதில் தாமரை, கருங்குவளை, முதலியன நிறைந்து மணங்கமழ வண்டுகள் மொய்த்து மாவெழில்காட்டும் நீர்வாழ்வனவெல்லாம் நிலையுறும். அதனைக் கண்டபோதே அளவிலாத் தீவினைகள் அகன்றிடும். நினைத்தாலே நிருமலனாவனாயின், அதில் மூழ்குவோனுக்குச் சொல்லுவதென்? இம்மூவுலகத்தும் இதனுண்மை மிக மறைவாயுள்ளது இதனை மலைக்குமரியும், மார்க்கண்டேய முனிவரும, வீரபத்திரரும் காக்கின்றனர். இதன்கரையில் ஓர் அரசமரமுண்டு. காவலாளர்களையும் அரசமரத்தையும் வணங்கி அர்க்கியங் கொடுத்தால் மனமெண்ணியதை யெண்ணியாங்கே பெறுவர். இதில் மூழ்குவோர் மூழ்கினவுடன் உடை தரித்துத் திருநீறு, திருக்கண்மணி பூண்டு, பெரியோர்களுக்குப் பொன் குடை முதலியன ஈந்து அறுசுவைபமுதூட்டி, அரசமரத்தடியிருந்து துர்க்கை மந்திரமோதி எழுந்து நாகேச்சுரபெருமானையும், மலைக்குமரியம்மையையும், துர்க்கையம்மையையும், வில்வத்தால் வழிபட்டு மலைமுலையம்மையையும், மங்கைபாகத்

தலைவரையும் பன்னிரண்டு நாமங்களால் போற்றிசெய்து உரு
வேற்றித் துதித்தால் அவர்கள் அப்புனிதநீரின் பயனால் வீடு
பேற்றை எளிதில் எய்துவர்.

இவ்வாறு உற்றாரிலாதார்க் குறுதுணையான எம்பெருமான்
அருளிச்செய்யக்கேட்ட இறைவியார் இறைவனை இறைஞ்சிக்
கடவுளர்மணியே! இறைவனுக்கிறைவா! பாலைநிலக்கிழத்தியின்
பன்னிரண்டு பெயர்கள் எவை? அவற்றைக் கொண்டு வில்வங்க
ளால்வழிபட்டால் உண்டாகும் மேன்மை யாது? அவ்வில்வந்தான்
விளைந்ததெங்ஙனம்? அவற்றை முறையே அடியேனுக்கு
அருளிச்செய்தல் வேண்டும் என்று விண்ணப்பஞ் செய்தனர்.
அதற்கு ஞானத்திரளாய் நின்றபெருமானார். திருப்புன்முறுவல்
செய்து நவில்வாராயினார். வண்டார்குழலாய்! கொடித்தான்
மலையில் இறைவியின் வழிபாட்டிற்கு அவ்விறைவியின் பேராயி
ரம் என்னுஞ் சொல்லப்பட்டது. அப்பேராயிரத்தாலுண்டான
பயனை நூறுபெயர்களைக் கூறுவதால் பெறலாம். அதனை அட்
டோத்திரம் எனப்படும். அந்தப் பெயர்கள் நூறால் அடையும்
மேன்மையைப் பன்னிரண்டுபெயர்களால் மேவத்தகும். அதனால்
இந்தப் பன்னிரண்டு நாமங்கொண்டு வில்வத்தால் வழிபட்டால்
கோடிபேராயிரம் பரவிய மேன்மையை மேவப்பெற்றுக் கோடி
குலத்துள்ள பிதிரர்களைக் கைலைபெறச்செய்து நூறாண்டு மல்லி
கை, முல்லை, சாதி, சண்பகம், மகிழ், செவ்வரத்தை முதலிய
பூக்களால் பரவிய பயனிலும் அளவிலாப் பயன்களை எவரும்
பெறுவர். அதனால் இதில் மூழ்குவோர் இறைவியினுடைய பன்னி
ரண்டு பெயர்களினும் மனமொருப்பட்டு இப்புனித நீர்நிலையில்
மூழ்கித் தூயவுடை புனைந்து, திருநீறு, திருக்கண்மணி பூண்டு,
பாலைக்கிழத்தியான துர்க்கையின் தூய திருமுன் அப்பன்னி
ரண்டு பெயர்களையும் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதி
னால், அளகையனைப்போன்ற நிதிக்குவை பெற்று அளகை
யன்றோழனுடைய அழலாடியின் அன்புடைத் தொண்டனா
வான். அத்திருப்பேர்களைக் கேட்ட அப்போதே அளவில்லா
ஆயுளைப் பெருக்காநிற்கும்.

அத்திருப்பேர்களுக்கு இருடி மலரவன், சந்தம் அநுட்
டுப்புச் சந்தம், அதற்குச் சத்தி வித்தை, தெய்வம் மங்கலை.

(பஞ்சாங்கநியாசம்) ஐந்தாறுப்பான தொடுமிடத்திற்குக் காமதா, காமகாரி, காமாரிப்ரீதிதாயினி, காமபாக்கியை, காமதார்த்த இதாவென்னும் வடமொழி மறையால் இருதயந்தொட்டுத் தூய்மை செய்து துர்க்காதேவி யென்று திக்குப் பந்தனமுஞ் செய்து அம்மையையன்புடன் சிந்தனை செய்தல் வேண்டும்.

கடவுளர்த் தலைவரெலாம் கருதிப் போற்றுங்
கழலுடையாள் கடவுளர்தம் பகையைப் பாற்றி
யிடனுறுசண் பகநகர்க்கோ ரிறைவி யாறு
ளெழினிறையு முறுப்பெவையு மிசைந்த வன்னை
யுடனுறையு முக்கண்ணற் குயிரின் மேலா
ளொளிநிறையு மதிமுகத்தா ளொழியா வெற்றி
திடனுறுமங் கலமுதலாத் திருவ னைத்துஞ் சேர்த்திடுவா
டிருவடியைச் சிந்திப் பேனே.

எம்பெருமாட்டியைச் சிந்தித்துக்கொண்டு. துர்க்கா, துர்க்காசுதா, பாலசந்திர நிபானனா, கல்யாணதா, கலாநாதசூடா, சம்மோததாயினி, பூதிருத்திராட்சசனனீ, பூதேசா நந்தரூபிணி. சம்பகாரணிய நிலயா, சம்பகோத்பலமாலினி, மகாவிபவதா.

அச்சுறவே நின்றிட்டாண் மலையின் மாதே
யணிகுவளை சண்பகமு மணிவா டேவி
யெச்சமிலா விளங்திங்கண் முகத்தா ளீவா
ளெவர்க்குநன் மங்கலமே திங்கள் சூடி
கச்சமிலா மின்பளிப்பாள் கருது நீறு
கண்மணித விலயமே யீச னின்ப
நிச்சயமா முருவினள்சண் பகநன் னகரா
ணிகழுஞ்சீ ரவையுமுளா ளென்று யானோள்.

இந்தப் பன்னிரண்டு பெயர்களேயுங் காலை நண்பகல். மாலை முப்போதினில் ஒன்றிலேனும் மனத்தூயனாய்ச் சொல்லுகின்றவன் வறுமை முதலிய நீங்கித் திரு, மங்கலம், புதல்வற்பேறு, பேரன் முதலிய பேறுகளனைத்தும் பெற்றுத் தீவினையனைத்தும் ஒழியப்பெறுவன், அவன் தன் தேயம்விட்டிருப்பினும், தீவுக்

கப்புறமிருப்பினும் துர்க்கையான பாலை நிலக்கிழத்தியின் பேர்களைச் செப்பினால் எண்ணிய வெல்லாம் எளி தினெய்துவன். திருநாகேச்சுரத் தலத்தில் இப்பன்னிரண்டு திருப்பேர்களைச் சொல்லிப் பாலைநிலக்கிழத்தியை வில்வங்கொண்டு பாவி வழிபட்டால் கிடைத்தற்கரிய நலமெலாம் கிடைக்கப்பெறலாம். அவ்வாறு செய்தவன் எனக்கு மிகுந்த காதலுடைய தொண்டனாவனென்று எம்பெருமானிசைத்தருளினர்.

இனி வில்வத்தின் சிறப்பும் ஒருவாறு சுருக்கிக் கூறப்படும். வில்வமாவது தூர்வர்ணமலையில் பசுவின் மலத்திலுண்டானது. அப்பூவின் மணம் பதினாயிரம் யோசனை நீளிடையிற் கமழா நிற்கும். இதற்குப்பெரிது மகிழ்ந்து வேண்டுவனவிரைந்தளிப்பேன். இந்த நகரிலாவது பிற நகரிலாவது இவ்வில்வங்கொண்டு வழிபடுவார்க்கு எந்த எண்ணத்தையுமினிது முடித்திடுவன். வில்வமின்றி வழிபாடுசெய்தவர் அவ்வழிபாட்டின் பயன்கொள்ளார்.

அவ்வில்வமின்றியும், தூபதீபமின்றியும், ஆயிரமாண்டு என்னை வழிபட்டாலும் அவ்வழிபாடு முற்றும் யானை யுண்ட விளங்கனிபோன்று பயனற்றதாகுமென்று வில்வத்திற்குச் சிவபிரான் வரமளித்தனர். அப்போதே சிவபிரானார் ஆணைபால் மணமும் அவ்வில்வத்தின் கண்ணே அடங்கியது. அதனால் வில்வமரத்தடி சென்று வணக்கஞ் செய்தவரையும் அதனடியிலிருந்து மறையையுருவேற்றினவரையும் நான்மிக மகிழ்கின்றனன். இனி இதனாலெந்தத் தூயதலத்திலும் வில்வம் உண்டாகுக வென்று உமையம்மையும் ஒரு வரம் அளித்தனள். அது முதல் வில்வமரமும் எந்த விடங்களிலும் உண்டாகத் தலைப்பட்டது. எந்தவிடத்தில் வில்வமுண்டாகிறதோ அந்தவிடத்தில் சிவபிரான் றிருமுன் மிருந்து விளங்கா நிற்கும். ஆதலால் கூவிளத்தின் சிறப்பு மூவுலகத்துங்கூறுதற்கரிது. கன்னித்திருக்குளத்தில் மூழ்குவோர் கன்னியாகிய மலைக்குமரியம்மையை நினைந்து மூழ்கினால் அவர்களுக்கு அவ அம்மையாரே அளவிறந்த வருளைப் பெருக்குகின்றனர்

இனி இயமத்திருக்குளம். இந்த இயமதீர்த்தம் திருநாகேச்சுரப் பெருமானுக்கு நிருதிமூலையிலுள்ளது. இதனைநினைத்த

அளவே எதனையும் எய்தாது. இது மூவுலகத்தும் மேயார்ந்த புனித நீரென இயம்பத்தக்கது இதனைக் கண்ணுறக்கண்டவர் இயமனைக் கண்ணுறக்காணார். இதற்குத் தேவர், கூற்றுவனார் காலாளர் சித்திர குப்தனார், இருடியர் நந்தகமுனிவர், அதற்கு மரம் வன்னி, இம்முறையே நினைத்து மூழ்கினால் அத்தீர்த்தப் பலனை யடைவர். அதில் மூழ்கித் தூயவுடை புனைந்து திருநீறு திருக்கண்மணி பூண்டு பொன் ஆடு, எருமை கறுப்பெள்ளு தடிக்கம்பு, பருத்தி, உழுந்தன்னம், முதலியன தந்திடுவோர் பாலப்பருவத்திலும், கட்டிளமைப் பருவத்திலும் கிழப்பருவத் திலுஞ் செய்த பாவங்களனைத்தும் அறவே யொழியப் பெற்று நினைத்த நலங்களை நினைத்தவாறே பெறுவர்.

இனிக்காமவெறியால் கூடத்தகாத மாதர்களைக்கூடிய குற் றமும் மூழ்கின அளவே ஒழியப் பெறும். இன்னும் பசுவைக் கொன்ற பாவமும், வீரத்தால் விளைந்ததீவினையும் கருச்சிதைத்த கணக்கறுபாபமும், புலைச்சியைக்கூடிய பொருவில் தீங்கும் நீங்கப்பெறுவன். (எமமந்திரம்) கூற்றுவன் மறையைப் பதி னான்குமுறை உருவேற்றினோன் அவனுக்குக் காதலனாகி அள கைக் கரசனாவன். "எமோநிகந்தா" என்னும் எமமந்திரத்தைப் பத்துமுறை ஓதினோன் பெருங்கொலை, கள்ளுண்ணல் முதலிய பெரும்பாவங்களனைத்தும் அறவே ஒழியப்பெறுவன்.

இப்படலத்தைக் கேட்டோரும், படித்தோரும், கோடிபசு, கோடிபூமி முதலியன தானஞ்செய்தல், சிவத்தலத்திற் சென்று வாழ்தல், சிவபிரான் றிருப்பேர்களைச்செப்பல், கற்பகமரங்களைத் தானஞ் செய்தல், சிவவிரதத்தோடு கன்னிதானஞ் செய்தல் முதலியவற்றாலுண்டான பயன் முற்றும் பெற்றும் ஆயிரஞ் சிவ னறஞ் செய்ததனாலெய்திய பயனோடு இம்மையில் புகழ் திரு முதலிய நலமெலாம் பெற்றும் இந்நிலவுலகினில் நீடூழி வாழ்வா ராவார்.

இந்தத் திருநாகேச்சுரப்பெருமான் பெருமையையும், திருக் குளங்களின் சிறப்பையும், அப்பெருமானை வழிபட்டருள்பெற்ற அன்புடைத் தொண்டர்களின் மேன்மையையும், ஒருமுறையே கேட்போர் சிவமேயாவர்.

இவ்வாறு சொல்லப்பட்ட புராணமுற்றும் சிவபிரானார் திருவாய்மலர்ந்தருளக்கேட்டு, உலகிறைவியாகிய உமையம்மையார் பேரானின்பப் பெருங்கடலின் மூழ்கிப்பிறந்த பிறப்பறுக்கு மெங்கள் பெருமானை இறைவனார் திருவடிப்போதில் விழுந் திறைஞ்சி வலம் வந்து அப்பெருமானை அன்பாற்றழீஇக்கொண்டனர்.

இனிப் புராணத்தை முறைப்படிக் கேட்பவர், கேட்பிப்போர் அதற்குதவி புரிவோர் அனைவரும் சிவஞானந் தலைப்பட்டுச் சிவபெருமான் றிருவடிப் போதை இரண்டறக்கலந்தின்புறுவரென்பதுண்மையே என்று சூதமாமுனிவரால் நைமிசக் காட்டில் நவிலக்கேட்ட முனிவர் பெருமக்களனைவருஞ் சிவஞானந்தலைப்பட்டுக் களிப்பெனும் பெருங்கடலுளாழ்ந்து, முழு வெள்ளரிசி, சந்தனம், பாக்குவெற்றிலை பூக்கள், பட்டுடை, பொன், நெல் முதலிய பொருள்களால் அம்முனிவர் பெருமானை வழிபட்டு வணங்கினாரானார்.

திருச்சிற்றம்பலம்

43வது பல திருக்குளச் சிறப்புரைத்த படலம்
முற்றிற்று.

---



## தமிழ் வணக்கம்.

மறைமுதல்வன் நன்பாட்டு வான்புலவ னுய்ச்சங்க
நிலைபெறவே வளர்த்திட்டு நிலைத்தவருண் மிகப்பொழியத்
தறைமுதலோ ரன்புநெறி தனையெளிதி லுணர்ந்துய்ய
வுறைபொருளாமிகப்பொலியுமொண்டமிழைத் துதித்திடுவாம்

## நூற்பயன்.

எப்பொருட்கும் பிறப்பிடமா மீசன் சொன்ன
வெங்கணு கேச்சுரனுர் புராணந் தன்னைத்
தப்பிலா வகையுணரக் கேட்போர் சொல்வோர்
தமதெண்ண மெல்லாமு நிறையக் கொள்வா
ரிப்படியி லெப்பொருளு மிசைய்க் கொள்வா
ரிருமைநலத் திருவும்புகழ் நலமுஞ் சார்வா
ரொப்பிலா வீசனடிக் குறுதி யன்பா
லொழிவிலாப் பேரின்ப நிலையில் வாழ்வார்.

## வாழ்த்து.

திங்களார் சடையோன் நாமஞ் சிறப்புற வெங்கும் வாழ்க
வங்கண னருளு நன்று மன்புமெய்ந் நெறியும் வாழ்க
பங்கமி றமிழும் மெய்யாம் பன்னிரு முறையும் வாழ்க
வெங்ஙனுந் துயரந் தீர்க வின்புற வுயிர்கள் வாழ்க.

திருச்சிற்றம்பலம்.

திருநாகேச்சுரப்புராணம் முற்றிற்று.

---

குறிப்பு:—இப்புராணம் வடமொழியில் அறுபத்துமூன்று படலங்களாகவே காணப்படினும் தமிழில் மொழிபெயர்க்கப் பட்ட இந்த நாற்பத்துமூன்று படலங்கள் மட்டுமே, இறைவனாலே இறைவிக்குச் சொல்லப்பட்டு ஓர் புராணமாக முடிக்கப் பட்டமையாலும், இதன்பின் காணப்படும் ஏனைய இருபது படலங்களும் பிறர்களால் பிறர்க்கு வேறுபிரித்து இந்த நாற்பத்து மூன்றின் விரிவுரையாகவே சொல்லப்பட்டமையாலும் இப் போது இறைவனால் இறைவிக்குச் சொல்லப்பட்ட நாற்பத்து மூன்று படலங்களையுடைய இப்புராணமட்டுமே தமிழில் மொழி பெயர்த்துப் பாட்டிடைவிரவியவுரைச் செய்யுளாக இயற்றிப் பதிப்பிக்கப்பட்டது. இதன் விரிவுரையாகக் காணப்படும், ஏனைய இருபது படலங்களையும் பின்னர் இறைவன் இன்னருள் கூட்டு மேல் இம்முறையே தமிழில் மொழிபெயர்த்து இதன் பிற்பாக மாகப்பதிப்பிக்கவும் விருப்பமுள்ளேன்.

# செய்யுட் குறிப்புரை.

## முதற்பாகம்.

செய்யுள். * திருச்சிற்றம்பலம்.

### கடவுள் வாழ்த்து

1 ஐவர்-புலன்கள் ஐந்து. பேருருவம்-யானையுருவம். செயல் எதற்கும்-எல்லாச்செயலுக்கும். தொன்மை-பழமை.

2 நாகேச்சுரமகள் - மலையரயன்மகள். எல்லின்வெரு -சூரியனுக் ஞ்சும். நாகேச்சுரவேள்-இருளாகிய யானைக்குத் தலைவனான மன்மதன். செவ்வேள்-முருகன்.

3 மொழி-பாடை. பால்மூன்று-ஆண், பெண் அலி. மறை-வேதத்தை. வடமொழிக்கு அப்பாலாகி-வடமொழியில் சொல்ல அர்த்தநாரீசர்க்குப் பால்காட்டுஞ்சொல் இல்லாமையால் அப்பாற் பட்டு என்க. உயரிருபாலிசையா நின்ற செம்மொழி இன்பெயர்-ஆண் பெண்ணிற்குப் பொதுவாய் நிற்கும் இனிய ஒருவனென்னும் சொல் என்க. இரண்டு பால் கூடிய ஒருருவத்திற்கு ஒருவனென்பதுவே தகுந்த பெயரென்பது.

4 எழுத்து மொழி யிசையுலகு-கல்வி. பொருளுலகு-செல்வமாகிய உலகம். ஆகவே உலகமிருவகைப்பட்டு அடங்கு மென்றது. உயிர்போன்று அறிவாய் நின்று. அவ்வுலகிற்கு அறிவே யுயிராதலின் உயிரையொத்து அறிவாய் நின்றானென்க. இனிச் சத்தப் பிரபஞ்சம். அர்த்தப்பிரபஞ்சம்-அறிவுப்பிரபஞ்சம். இம்மூன்றுக்கும் மூவரைக் காட்டுக. மேல் இரண்டு பிரபஞ்சத்திற்கு அறிவே உயிர் போன்றதென்க. இதனால் கல்வியும், பொருளும், உடல் போலவும். அறிவு அவற்றிற்குயிர்போலவும் நின்றதென்க. இதுபற்றி இறைவி, கலைமகள் திருமகளிருவர்க்கும் உயிர்

போன்றவனென்பதாம். அம்முறையால் சொல்மகள், பொருள்மகள், அறிவுமகள் என்க.

5 உடல் தாயார்-உடலுக்குத்தாய். உலகின்கணுள்ள தாய்மார், உடல் வ ஆக-உடல்கள் அதிகமுளதாக என்க. அப்பாலும் தன்னாலே நிலைவதாக்கி-உடலைத்தரும் மாயைக்குக் காரணமாய் நிற்றலால் அவ்வுடலில் உண்டாகின்ற முலைப்பாலுக்குந்தானே காரணமானானென்க. எந்நாளும் பசி-பிறவிப்பசி.

6 உயிராட-உயிர்கள் உய்திபெறவே. ஆடல்-கூடல். அதற்கு அவைகள் ஆட இறைவன் ஆடினானென்பது. உயிரின் பொருட்டே அத்துவாக்களும் வைக்கப்பட்டன 'மதி-அறிவு. ஈண்டு ஆன்மபோதமென்க. இறைவனாடாவிட்டால் ஆன்ம அறிவு உளதாகாமையறிக, மறை-மந்திராத்துவா. கருவி-தத்துவாத்துவா. இனி, வினையாடமாயை மலமாட மதியாடவென்பது மும்மலமும் அற சிவஞானம் பிறக்க வெனினுமாம்.

7 அத்துறை-அந்நெறி, நாட்டக்கடை வைத்து கடைக்கணித்து. அத்தனையும் எதனால்-ஐந்தொழிலும் சத்தியாகிய தன்னாலென்றபடி. பிறவிநோய் தீர்க்கும் மருந்து-இறைவனருள். அளிக்க-அது தரவென்க. சிவ வேட்கைவல்லி-சிவகாமவல்லி.

8 இன் இளவல்-இனிய இளைஞன். கேட்பவர் சொல்பவர் இயல்கள் அத்தனையும் என்ன-மாணாக்கர் ஆசிரியர் இலக்கண முற்றுஞ் சொன்னாரென்று சொல்ல என்க. என்ன இருந்து' எனமுடிக்க. ஆசிரியனிருக்கும் இயல்பும் மாணாக்கனியல்பும் நன்கு விளங்கா நிற்குமென்பது. ஆசிரியர் மாணாக்கரியல்பென்பது ஆசிரியர் ஆண்டில்இளையராயினும் அவர் வாய்பேசாமலிருப்பினும் ஆண்டில் மூத்தவராயினும் இருப்பர். அவர்முன் மாணாக்கன் அடங்கியிருத்தல். அங்ஙனமிருப்பின் பொருள் நன்கு விளங்குமென்க ஆலமர்தலின் பண்டைக்காலப்பள்ளி மரத்தடியேயாயிற்றென்க. கல்விக்குத் தனித்திருத்தல் காட்டியது. அறிவன்-ஆசிரியன்,

9 ஒரு கோடு பொறித்து கருகு மல மகல்வித்து என முன் னிரண்டடிகளையும், பின்னிரண்டடிகளோடு தனித்தனி உறழ்ந்து கூட்டுக. அன்பே யுருகுநெறி-அன்புநெறி-பெரு வயிறும் சிற்றடியும் அகம் பிறங்கச்செய்து இன்பருளும்-பெருவயிற்றை அகம் பிறங்கச்செய்து இன்பத்தோடு, சிவன டியை அகம் பிறங்கச்செய்து அருள் செய்கின்ற என்க.

10 ஓலெடுத்த-ஓலமிட்ட. சூர்-சூரபத்மன். குயிலொத்து மொழி - குயில்போன்றமொழி வெயிலெடுத்து - வெயிலை நீக்கி.

11 அடியிலுறைவுறுமன்றும் - முத்திக்காலத்தும், தொழும் பதாமுயிரென்றுணர்வுற - ஆன்மா அடிமையாமென்று அறிந்திட. வீட்டையும் விரும்பாது அடிமையே விரும்பி அபரமுத்தியில் நின்றதென்பது அகம்படி-அகம்படித் தொண்டில்-ஏற்றதன் இறை-இடப அரசென்க.

12 மந்திரம் தந்திரமுமா மருந்தாம்பாடி-மந்திரமும் தந்திர மும் மருந்துமாகப்பாடி. திருஞானசம்பந்தப் பிள்ளையார் தேவார முற்றும் அம்மூன்றுமாக இருக்கல். அதனை நூசர்ச்சியில் காண்க. அடிநினைந்து தனைமறந்தே-தன் ஞாபகமின்றி இறைவன் ஞாபகமாகவே நின்று-இதனால் இறைவன் வடிவங்களையே கூறித் தன்கூற்றெல்லாம் இறை வன் கூற்றாகக் கொண்டனனென்க. அவன் அருளிற் றோய்ந்த-இறைவனருளில் இரண்டறக்கலந்த. இதனால் அவன்போல் உலகோபகாரியாய் நின்றானென்பது. ஞான மொழிமறை-ஞானத்தையே கூறும் வேதம்.

13. ஒருநாள் - ஒரு காலத்திலேயே - உடல் உயிர் வெறுத்து உடைமை ஒருவிப்போந்து-உடலினும் உயிரினும் பற் றற்று உடைமையை உலகிற்கு ஈந்து. அடித்தொழும்பே அவையாக்கோடல்-உடல் பொருள் ஆவி மூன்றிடத்தும் வைத்த பற்றெல்லாம் சிவனார் திருத்தொண்டில் வைத்திடல். உயிர்ச்சிறுமை இறை பெருமை-உயிர் அடிமையாய் நிற்ற லும் இறைவனைபதி ஆண்டானாய் நிற்றலுமாம்.

14. ஆண்டவனும் கொண்டனும் தந்தையு மார்க்கமும் சன்மார்க்கமும், சற்புத்திர மார்க்கமுமாம். தோழமையில் வைத்து-அம்மூன்றையும் சகமார்க்கத்திலேயேகொண்டு. அதாவது தந்தையாகக்கொண்டு எதையும் பெறுதலும், ஆண்டவனாகக் கொண்டு தொண்டு புரிதலும், நண்பனாக்கொண்டு தூதுபோக்கலும், நாயகனாகக்கொண்டு இன்பநுகர்தலும், அவர்பால்நிகழ்ந்தன வறிக. இவ்வாறு "நிகழினும் தம்பிரான்றோழனுகியே தோழமை வெளியாய் நின்றமையால் அம்மூன்றையும் தோழமையில் வைத்துணர்ந்தனவென்பது. எளிமை அடியார்க் கெளியனாதல். அடிமைப் பெருமை-அடியனான தனக்கு ஆப்பெருமான் எதையுஞ்செய்யச் செய்யுந்தொண்டர் தம் பெருமை-நயக்க-எல்லாரும் கொண்டாட.

15. அறிவு இச்சை, செயல் எல்லாம் ஒழிந்திட-ஆன்மபோதம் ஒழிய என்க. அறிவு இச்சை செயல்-இச்சை ஞானங் கிரியை. அகப்பொருள்-திருக்கோவை; புறப்பொருள்-திருவாசகம். அகத்தே நிகழும் இன்பத்தையும், புறத்தே நிகழும் அறம் பொருள்களையும், சிவனார் அருளாகக் கொண்டனவென்க அருளன்றி யொன்றறியாதன்பதனில் மூழ்கி-அன்பு பதிய அருள் ஒக்குமாதலின் அன்பு மிகுந்திட. அருளை காணகிடக்க அருளல்லாமல் வேறு அறியாது அன்பில் மூழ்கி என்பது.

16. நெறிநின்றி-விதிப்படி என்க. அறிவன்-ஆசிரியன், நியமம்-விதி, வெறி-வாசனை, விளைவு-பயன், பிழைபாடு-பிழைபடல், குறியெனன்று-குறிப்பான. ஒன்று, வினைத்தொனக.

17. படிவம்-வடிவம், மாக்கதை-பெரிய புராணம்.

18. மீன்கணாள் அழகன்-மீனாட்சிசுந்தரதேசிகர், பரிதியார் கோயில்-சூரியனார் கோயில்.

21 தோட்டிடை-ஓலையில், தேடிடை-தேடுமிலே, அழகிய வேலன் சிங்காரவேலன்.

23. முன்றோடாய்-பூர்வதிசையிலிருந்து எண்ணுவார்க்கு முதல் நாடாய்-எனினுமாம்.

பக்கம் எண்.

21. ஏழையர்-முனிபன்னியர், இரவு-இரத்தல், கரவு-மறைத்தல், வரவுடையார்-சிறப்புடையவர், வரம்-சிறப்பு, அன்பர்மனம் வரவுடையாரெனினுமாம். அதற்கு அன்பர் மனத்தை ஈட்டத்துங்கூட்டுக. புரவு-காத்தல்,

28. இறவு-அழித்தல் சங்காரம், உறுப்பு-வேதாங்கம், ஆண்மைய-புருடனே.

32. அளவிய-கலந்த, அருப்பு-அரும்பு, பூவோடு நினைத்தல்-பூசித்தல், மாமை-சிறந்தாய்-அழகில்சிறந்தவனே. நிறமுமாம் எழில்வடிவனே-அழகுடைய வடிவங்களையுடையவனே.

37. விருப்பதும்-விருப்பும், தன்புகல்-தனக்குப்புகல் என்க. தா-தாவுகின்ற, (1)

தாமம்-மாலை, மறமலை-பாபமலை, வைரவடிவம்-வச்சிரவடிவம் அனவடிவு-சோற்றின் வடிவு, என்க. காலமேல்-காலத்தில்.

51. வறிஞன்போந்தனன்-தரித்திரனாய்வந்தவன். அன்பிற்கடமையன்-அன்பிற்குரியன்.

53. பின்பிறப்பு-பின்னைவரும் பிறவிகள். கடைபோகா-முடிவு பெறமாட்டா, வெங்கண்-கொடுமை. (1) நோய்-துன்பம், செல்வங்கரப்பவர் பொருள் திருடுவோர், வீப்போர்-அழிப்போர். கூவல்-கிணறு. (2) பள்ளித்தாமம்-புட்பம். கலதி-கீழ்மகன். இடையூறிடுவோர்-இடையூறு செய்பவர். இறைநூல்-வேதம், விழவு-திருநாள், உமையணி-சிவபிரான், நீற்றுக்கோலம்-திருநீறுடையவடிவம், சிவவேடம். வரன்றனைதவறுக்காட்சி-நாளும் சிவாலய தரிசனை.

60. ஒன்றதின்சார்பிற்சார்வார்-யாதானுமோர்சார்பான் விளங்குபவர். குணஉருவம்-குணமும் உருவமும், குணமோடுருவர்-குணமும்வடிவுமானவர். தூய்வடிவு-தூய்மையானஉருவம்உலகினிற் சாரார் பிரபஞ்சத்துக்கப்பாலானவர், நாளம்-தண்டு. கல்வி கோங்கு-கல்வியேயாசனை. இருநான்கு இதழோடு உறவுயிர் அருளா-காருணியம் நான்கிதழ்களாக. கலையே அல்லி-சாத்திரம் அகவிதழ், உறவு இரண்டு இல

தாம் பொருட்டு-இரண்டற்ற அத்துவிதம் கொட்டை என்க உயிரகம் முண்டகத்தில்-ஆன்ம இருதயமாகிய தாமரையில். தமரோடு எம்மான் நறவென மணந்தே நிற்பர்-சிவபிரான் தன் சுற்றத்தேவருடன் தேன்போல் மணந்திருப்பர்.

67 துப்பு-உணவு. மக்களுக்கு நல்வழி-மக்களுக்கு சிவநெறி. காதலுக்குரியதாய் - பிள்ளைக்குத்தாய், நற்புட்கு - நல் பட்சிக்கு. பகர் வாணிபர்-விற்கும் வியாபாரிகள் உரியாள்-மனைவி

71 தடித்தின் கொடி-மின்னற்கொடி, அன்னவடிவமர அழகோ-அன்னத்தின்வடிவில் அமர்ந்த அழகோ.

75 தெறுகாலின் நன்மதி-கார்த்திகை மாதம் தெறுகாலில் ககாரந்தொக்கது.

82 சர்ப்பமகம்-சர்ப்பயாகம், அத்திகர்-ஓர்முனிவர், இயமநதி, வைதரணிநதி.

85 பொருளிரந்து, யாசித்து.

90 நவிலுறுபவம்-செய்தபாவம், அகமெலாம்-பாவமெலாம்.

91 எருதின் ஏறு-நந்தி.

92 அழுக்கில் ஒரு கோடி என-ஒரு கோடி அழுக்கென்று சொல்ல. வருபிள்ளாய்-அதில் வந்தவனை மூத்தபிள்ளை உமையாள் அழுக்கில் பிறந்தமை விநாயக புராணத்திற் காண்க.

92 அடிப்புணை-பாதமாகிய தெப்பம், ஏமக்கரை-இன்பக்கரை.

## இரண்டாம்பாகம்.

1 அரப்பெருமான்-அரனாகிய பெருமான், அயனார் சிரப்பெருமான்-பிரமன் கபாலத்தையுடைய பெருமான்.

2 கரு செயல், பிறவிக்குரிய செய்கை, கழுமல்-நெருங்குதல்,

3 கழுவாய்-பிராயச்சித்தம், மறம்-பாவம்.

7 உரு வேற்றல் - செபஞ்செய்தல், தூயநீரில் - கங்கையில் நன்றி-நன்றியும் பாவம்-பாவமும் என உம்மை வேண்டியது.

9 மின்னிலை உருவும்-மின்போன்ற உருவம். மிசையுறல்-மேலுறுதல். எச்சம்-சந்ததி. நொறில்-அடக்கமுடைமை.

11 ஞாட்பு-சண்டை. ஆயிலிற் புகுதாப்புகழ்-தாய் வீட்டுக்குப் போகாத புகழ். அரற்றல்-புலம்பல்,

16 அங்கணன்-சிவபிரானை.

19 ஒருவல்-நீங்கல். ஒருவலா-நீங்காத, உய்யல்-தப்புதல்.

27 சுடுசொல்-சாபம்.

28 வழங்கல்-சொல்லல்.

31 கூவிளம்-வில்வம்.

32 உருப்பம்-வெப்பம்.

39 ஊர்தி-வாகனம், அருள் நிலைய-அருளுக்கிருப்பிடமான வனை.

44 சிதறுண்ண எறிவோர்-சிதற அடிப்பவர்.

45 வாராமறம்-தகாதபாவம். மகன் கேட்போன் இளைஞன் நல்லாட்கு-இந்நால்வர்க்குமென்க. குவ்வுருபை மூன்றிடத்தும் கூட்டுக.

[illegible] நன்றிகா தீது-நன்மைதீமையை. இது பகுதிப் பொருள் விகுதி என்றும் செயல் உறவெப்பொழுதும் செய்கைக்குத் தக்கவாறு.

64 ஞாயிறுற-உதயமாக, கருமனை-கருப்பத்தையுடைய மனையாளை. யானுற்ற மறம். நான் செய்தபாவம்.

66 பான்மையுற-ஊழுற என்க. அருளாதுகாண் ஒன்றுகல் மீள அழிந்திடல்-இறைவனுடைய அருளானது ஒன்று உண்டாகதலும் ஒன்று அழிதலுமாம். உபாயம்.

69 சண்பகமரம் தேவர்கள் இலைகளாகவும், கலைகள் பூக்களாகவும், வேதம் கிளைகளாகவும், வேதாங்கம் பழமாகவும், முனிவர்கள் வண்டாகவும், முக்குணங்கள் வேராகவும் கொண்டுள்ளதென்று உரைத்துக்கொள்க.

73 கிணற்றை உருமறிவார், கிணறு எடுப்பவர். நீருணச்செய்வோர்-தண்ணீர்ப்பந்தல் வைப்பவர், நெறியை நலமுற இயற்றி-வழியைப் புதுக்கி.

83 இணைந்திட தூய்மை-தூய்மை உண்டாதலால் என்க. ஈண்டுச்செயவெனெச்சம் காரியப் பொருட்டு. இணைந்திட சார்த்துமென முடிக்க. சிறிது உறுவலியுடையது என முடித்திடுக. ஈசன் விழையறம் சிவதருமம்.

85 தகைந்திட நிற்பான்- தடுப்பவன், பின்னும் பின்வரும் பிறவியினும்.

90 வெற்றி-வலியுடையள், இன்பநிச்சயமார் உருவினள்-இன்பம் நிறைந்த வடிவினள் என்க.

செய்யுட் குறிப்புரை முற்றிற்று

---

தையல்நாயகியம்மன் பிரஸ், கும்பகோணம்.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 4 | 17 | மாஞே | மேஞே |
| 13 | 14 | உரார் | ஊரார் |
| 13 | 26 | தியக்கரு | தியக்கறு |
| 17 | 14 | திரமும் | திரமு |
| 20 | 12 | யுடை | யடை |
| 20 | 29 | கத்துளா | கத்துளதா |
| 21 | 23 | ளிணர் | ளினன் |
| 26 | 26 | பெருக | பெறுக |
| 36 | 8 | திரு | திழு |
| 40 | 19 | குஜா | குசா |
| 48 | 4 | மணை | மலை |
| 58 | 8 | குன்றை | குன்று |
| 58 | 2 | நீவே | நிவே |
| 89 | 28 | காய் | காய |

## இரண்டாம்பாகம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 16 | 11 | அங்கணு | அங்கண |
| 25 | 9 | அருந்தி | அருக்கி |
| 26 | 16 | ஓரு | ஒன்று |
| 28 | 3 | கிழு | கீழ் |
| 29 | 24 | பங்கி | பங்கு |
| 29 | 26 | முதலிப | முதலிய |
| 32 | 2 | விளணன் | விளநன் |
| 63 | 12 | மாண்டன | மாண்ட |
| 61 | 15 | பெற்று | பெற்றுக் |
| 68 | 9 | தூ | தூய் |
| 68 | 9 | ஆங்கு | ஆங்குச் |
| 68 | 30 | ளித்து | ளித்துத் |
| 70 | 21 | பின்னர் | பின்னர்ச் |
| 41 | 1 | யியற்றிய | வியற்றிய |
| 41 | 3 | யியத்திய | வியற்றிய |

